ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமாநுஜ விஜயம்





திருவல்லிக்கேணி

தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபை

வெளியீடு.

ஸ்ரீ

ஸ்ரீருக்மிணீஸமேத ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமிநே நம :

99



ஸ்ரீமதே ராமாநுஜாய நம : ஸ்ரீமத்வரவரமுநயே நம :

உனக்கே நாமாட்செய்வோம் — மற்றை நங்காமங்கள் மாற்று.

# ஸ்ரீ ராமாநுஜ விஜயம்



## எம்பெருமானாரின் 961-வது திருநக்ஷத்ரமான 16-வது மணிவிழா மலர்

(பிங்கள ௵ சித்திரையில் செய்ய திருவாதிரை)

திருவல்லிக்கேணி தென்னாசார்ய ஸம்ப்ரதாய

ஸபையினரால் 12-3-1978 அன்று

வெளியிடப்பட்டது.

# The Triplicane Thennacharya Sampradaya Sabha

20, South Mada Street, Triplicane.

Srivatsam

The Sabha was founded on 1—2—76 with the main object of propagating Emberumanar Darsanam. Classes are being run at present on Divyaprabandam and Vedam (recitation) and on Bagavath Vishyam and Geetha Bhashyam. The Sabha has 250 members on its rolls. The members of the Managing Committee are:

| | | |
|---|---|---|
| President | : | Sri. U. Ve. V. Veeraraghavachariar (Advocate) |
| Vice-Presidents | : | Sri. ,, T. S. Rajagopala Iyengar * |
| | | Sri. ,, N. C. Raghavachariar (Advocate) |
| | | Sri. ,, Dr. V. V. Ramanujam * (E) |
| Secretary | : | Sri. ,, K. S. Narasimhan * |
| Treasurer | : | Sri. ,, R. Venkatesan |
| Members | : | Sri. ,, A. Parthasarathy Iyengar |
| | | Sri. ,, M. N. Krishnaswami |
| | | Sri. ,, K. V. Srinivasan |
| | | Sri. ,, K. E. Kuppuswami Iyengar |
| | | Sri. ,, T. A. Anantalwan |
| | | Sri. ,, C. Rangarajan |
| | | Sri. ,, M. A. Venkatakrishnan * |

* Members of the Editorial Committee; (E) Editor for the present publication

Srivatsam

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இந்த மலரினுள்ளே....

1. நமது ஸபையைப் பற்றிய விவரங்கள்.

2. எம்பெருமானுர் தனியன் விளக்கம்.

3. எம்பெருமானுர் வாழ்க்கை வரலாறு: எம்பெருமானுர் வாழ்ந்தருளிய காலத்தைச் சரித்திரச் சான்றுகளுடன் விளக்கும் இக்கட்டுரை, கடைசியிலுள்ள ஒரு ஆங்கில வியாஸத்தின் தமிழ்ச்சுருக்கமாகும்.

4. பகவத் ராமாநுஜ க்ரந்தாநுபவம்: எம்பெருமானுர் அருளிச் செய்துள்ள திவ்யக்ரந்தங்களைப் பற்றி அநுபவிக்கலாம் இப்பகுதியில். ஸ்ரீ பாஷ்யம், கீதா பாஷ்யம், கத்யத்ரயம், நித்யகரந்தம் ஆகிய க்ரந்தங்களைப் பற்றிய கட்டுரைகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன.

தொடர்ந்து, எம்பெருமானுர் அருளிச் செய்த ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களுக்கு மூல காரணமாக, ஆதாரமாக இருந்தவை ஆளவந்தாருடைய க்ரந்தங்களே என்று முதலிப்பது யதிகட்கிறைவனும் யதிராசனும் என்ற கட்டுரையின் முதல் பகுதி திருவாய்மொழிப்பாசுரங்களுக்குப் பொருளாக ஆளவந்தார் தம்முள்ளத்துள்ளே கருதியிருந்தவைகளை, எம்பெருமானுர் தாம் ஏகலவ்யனுக இருந்து வெளிப்படுத்தியதை விவரிப்பது இரண்டாம் பகுதி. அடுத்த கட்டுரையில் பரகாலகவியை ராமாநுஜ திவாகரனை சேர்த்து அநுபவிக்கலாகிறது.

5. எம்பெருமானுரும் திவ்யதேசங்களும்: திவ்யதேசங்களுக்கும் எம்பெருமானுருக்கும் உள்ள நெருக்கமான தொடர்பு, அவ்வவ திவ்யதேசங்களில் எம்பெருமானுர் ஸம்பந்தமாக நடைபெறும் உத்ஸவாதிக்ரமங்கள் முதலியவைகளை இப்பகுதியில் உள்ள கட்டுரைகள் விரிவாக விளக்குவன. எம்பெருமானுர் அவதாரத்திற்குக் காரணபூதஸ்தலமான திருவல்லிக்கேணி, முதலில் இடம் பெறுகிறது. தொடர்ந்து கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரம், திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய திவ்யதேசங்களைப்பற்றின அநுபவங்கள் வரிசையாக இடம் பெறுகின்றன.

**6. எம்பெருமானுர் வைபவப் பகுதி :** எம்பெருமானுருக்கும் அவருடைய ஆசார்யர்களுக்கும் இடையே இருந்துள்ள பரிமாற்றத்தையும், அதுபோல எம்பெருமானுருக்கும் அவருடைய சிஷ்யர்களுக்குமிடையே இருந்துள்ள பரிமாற்றத்தையும் குருபரம்பரை வரலாறுகள், அருளிச் செயல் வ்யாக்யானங்களிலுள்ள ஐதிஹ்யங்கள் இவைகளைக் கொண்டு விளக்கும் கட்டுரைகள் பஞ்சாசார்ய பதாச்ரயர், ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ: என்றவிரு கட்டுரைகள். அடுத்து இடம் பெறுவது கூரேச விஜயம். அதையடுத்து "நாராயணனே பரம்பொருள்; அவனை மறந்து மற்ற தெய்வங்களை உபாஸித்தல் தவறு"' என்ற எம்பெருமானுருடை அத்யவஸாயத்தைப் பல ஐதிஹ்யங்களைக் காட்டி நிரூபிக்கும் "அஹமேவ பரம் தத்வம்"' என்ற கட்டுரை இடம் பெறுகிறது. இக்கட்டுரையில் அஹமேவ பரம் தத்வம் என்ற தேவப் பெருமாளுக்கும் மாமேகம் சரணம் வ்ரஜ என்ற ஸ்ரீ பார்த்தஸாரதி எம்பெருமானுக்கும் உள்ள ஒற்றுமை நயம் மூதலிக்கப்படுகிறது. அடுத்து மணவாளமாமுனிகளையும் எம்பெருமானுரையும் சேர்த்து குணாநுபவம் பண்ணுவது யதீந்த்ரரும் யதீந்த்ர ப்ரவணரும் என்ற கட்டுரை.

**7. பகவத் ராமாநுஜ ஸ்தோத்ரமாலா :** ஸ்வாமி அருளிச் செய்துள்ள கத்ய த்ரயம். ஸ்வாமி விஷயமாக நம்பூர்வர்கள் பணித்துள்ள பல ஸ்துதிகள்—சதுச்லோகி, மூக்தகங்கள், ப்ரார்த்தநாபஞ்சகம், ஸுப்ரபாதம், மங்களாசாஸனம், அஷ்டோத்தரம், தாடீபஞ்சகம், அமுதனார் அருளிச் செய்துள்ள ராமாநுச நூற்றந்தாதி (உரையுடன்*), மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஆர்த்தி ப்ரபந்தம், எதிராஜவிம்சதி, வேதாந்த தேசிகன் அருளிச் செய்த எதிராஜஸப்ததி (உரையுடன்*), நூற்றந்தாதிப்பாசுர அடைவில் அமைத்துள்ள சதநாமாவளி, எம்பெருமானுர் மிகவும் ஈடுபட்ட ஸ்தோத்ரரத்னம் எல்லாம் அடங்கியது.



**8. ஆங்கில வ்யாஸங்கள் :** Articles on—1. Sri Ramanuja's message: Biography and highlights of the Darsanam: 2. F. Maxmuller on Vedanta Philosophy : 3. A detailed examination of the historical setting of Sri Ramanuja's life.

**9.** மஹாவித்வான் பெருமாள்கோவில் ஸ்ரீ உ. வே, P. B. A. ஸ்வாமி அநுக்ரஹித்துள்ள திருப்பாவை ஜீயர், ஆழ்வார்கள் திருப்பள்ளியெழுச்சி, எம்பெருமானுரும் அருளிச்செயலும் (த்ரமிடோபநிஷத் ப்ரபாவம்) என்ற கட்டுரைகள் கொண்ட அநுபந்தம் திருப்பாவை முப்பது பாசுரங்களையும் எம்பெருமானுர் பரமாக வ்யாக்யானிப்பது திருப்பாவை ஜீயர். திவ்யப்ரபந்தங்களே எம்பெருமானுருடைய க்ரந்தங்களுக்கு மூலமாக விருந்தன என்பதை ப்ரமாணங்களோடு நிரூபிப்பது த்ரமிடோபநிஷத்ப்ரபாவம்.

---

* இந்த உரைகள் பதிப்பாசிரியர் எழுதிச் சேர்த்தவை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவர முநயே நம;

# நமது ஸபையைப் பற்றி....

K. S. நரசிம்மன், M.A.,
செயலாளர், தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபை, திருவல்லிக்கேணி.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி — ஏழ்பாரு
முய்ய அவர்களுரைத்தவைகள் தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து

காசினியோர் தாம் வாழக் கலியுகத்தே வந்துதித்த காரேய் கருணை யிராமாநுசர் ஓராண்வழியாய் வந்த உபதேச மார்க்கத்தைப் "பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறும்" என்று பேசி வரம்பறுத்தார். அதனால் "எம்பெருமானார் தரிசனம்" என்றே யிதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார். எதிராசரின்னருளால் பிள்ளான் முதலானோர் திருவாய் மொழிக்கு வியாக்கியைகள் அருளிச் செய்தார்கள். இங்ஙனம் காவிரி போல் பரந்து பாய்ந்த நம் ஸம்ப்ரதாயம் கொள்ளிடம் போல் பிள்ளையுலகாரியன் வரை பெருகியோடி நாட்டை உய்வித்தது

பின்னர் எந்தை திருவாய்மொழிப் பிள்ளை யின்னருளால் தென்னரங்கர் சீரருளுக்கு இலக்காகப் பெற்ற அழகிய மணவாள மாமுனிகள், பண்டு பல ஆரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மைக் காதலுடன் கற்பித்து காலக்ஷேபம் செய்தருளினர்.

அவர்க்குப்பின் ஞானம் அனுட்டானமிவை நன்றாகவே உடைய ஆசாரிய புருஷர்கள் ஆசையுடையோர்க்கு ஸம்ப்ரதாயார்த்தத்தை அடைவே அருளிப் போந்தார்கள்.

இங்ஙனம் தங்கு தடையின்றி வற்றாத நதியாக ஓடிய நம் ஸம்ப்ரதாயம் தற்சமயம் சிற்றோடையாகிச் சிலரே உய்ந்துபோம் வண்ணம் காட்சியளிக்கிறது

அவ்வோடையில் முகந்த நீரை எம்பெருமானார் சம்பந்தமுடையோம் என நாமமிது கொண்டு வாழும் நம் போல்வாரும் ஆசையுடன் பருகி உய்யுமாறு செய்ய வேண்டுமென்ற பேரவாவின் வடிவாய் ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமானின் நிர்ஹேதுக கிருபையால் அவதரித்ததே திருவல்லிக்கேணி தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபை.

இச்சபை 1 2 1976 ல் திருநாராயணபுரம் யதுகிரி யதிராஜ ஜீயர் ஸ்வாமி தலைமையில் காஞ்சீபுரம் மகாவித்வான் ஸ்ரீ உ வே பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியால் "எம்பெருமானார் தரிசனம்" என்ற உபந்யாஸத்துடன் தொடங்கி வைக்கப் பெற்றது.

அடுத்து, ஸ்ரீபாஷ்ய, பகவத் விஷய காலக்ஷேப வகுப்புக்கள் 26. 3. 76 அன்று ஸ்ரீ. உ. வே. வேளுக்குடி K. வரதாசாரியார் ஸ்வாமியால் தொடங்கப்பெற்றன. இவ்வகுப்புக்கள திருவல்லிக்கேணி ஸ்ரீ வானமாமலை மடத்தில் காலை 7 மணி முதல் 8. 30 மணிவரை நடைபெறுகின்றன.

ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபத்தை ஸ்ரீ உ. வே. திருமலை நல்லான் ராமகிருஷ்ணையங்கார் ஸ்வாமி திங்கள் செவ்வாய் இரண்டு நாட்களிலும் நடத்தி வருகிறார். இதன் கீழ் ஸ்ரீ பகவத கீதா பாஷ்யம் தாத்பர்ய

சந்திரிகையுடன் போதிக்கப்படுகிறது. தற்போது 9வது அத்தியாயம் நடைபெறுகிறது. புதன்கிழமை யன்று தோத்திரங்கள் நடைபெறுகின்றன. அதன்கீழ் யதிராஜ விம்சதி தொடங்கி ஸ்ரீ மணவாள மாமுனிகள் உத்ஸவத்தில் சாத்துமுறை செய்யப்பட்டது தற்போது ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிய தேவராஜ மங்களம் நடைபெற்று வருகிறது.

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசாரியார் ஸ்வாமி பகவத் விஷய காலக்ஷேபத்தை நடத்தி வருகிறார். இதன் கீழ் சனி, ஞாயிறு தினங்களில் திருப்பல்லாண்டு கண்ணிநுண் சிறுத்தாம்பு காலக்ஷேபங்கள் தொடங்கப் பெற்று சாத்துமுறைகள் விமரிசையாக நடைபெற்றன தற்போது திருவாய்மொழியில் முதற்பத்தில் 5 திருவாய்மொழிகள் முடிந்துள்ளன வெள்ளிக்கிழமைகளில் திருமந்தரார்த்த காலக்ஷேபம் நடைபெற்று வருகிறது.

மேலும் சபையின் ஆதரவில் திவ்யப்ரபந்த பாடசாலை நடைபெற்று வருகிறது இதை ஸ்ரீமான் உ. வே M. A வெங்கட கிருஷ்ணன் பொறுப்பேற்றுச் சிறப்பாக நடத்தி வருகிறார். சபை இல்லத்தில் காலை 6 மணி முதல் நடைபெறும் இப்பாட சாலையில் சுமார் 50 சிறுவர்கள சந்தை சொல்லி வருகிறார்கள். அவர்களை ஊக்குவிக்க அம்பத்தூர் ஸ்ரீ. உ. வே. K சட கோபாசாரியார் ஸ்வாமி அவ்வப் பொழுது பொருளுதவி செய்து வருகிறார் இயற்பா, உபதேசரத்தினமாலை முடிந்து தற்போது திருவாய்மொழி நூற்றந்தாதி நடைபெறுகிறது.

மேலும் ஸபையின் ஆதரவில் திருநாங்கூர் ஸ்ரீ உ வே. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி 'ஸித்தித்ரயம்' பற்றி மூன்று நாட்கள் காலாக்ஷேபம் சாதித்தருளினார்.

பெருமாள்கோயில் யானை வழக்கில் வெற்றி தேடித் தந்த ஸ்ரீ உ. வே V.N வேங்கட வரதாசாரியார் ஸ்வாமியையும், ஸ்ரீ உ. வே. G. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமியையும் பாராட்டி விழா வொன்று காஞ்சீபுரம் மகா வித்வான் ஸ்ரீ. உ, வே. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி தலைமையில் 9—4—76 அன்று நடைபெற்றது ஸ்வாமி "இராமாநுச முனிவேழம்" என்பது பற்றி உபந்யஸித்தருளினார்.

Srivatsam

ஸ்வாமி எம்பெருமானாரின் 960 வது பிங்கள வருஷ மஹோத்ஸவத்தை முன்னிட்டு 24. 4. 77 ல் சித்திரையில் செய்ய திருவாதிரையில் ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி சந்நிதியில் "ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸ்தோத்ரமாலா" என்ற மலர் வெளியீட்டு விழா நடைபெற்றது. காஞ்சீபுரம் ஸ்ரீ உ வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி மலரை வெளியிட்டு 'எம்பெருமானார் வைபவம்' என்பது பற்றி உபந்யஸத்தருளினார். தமிழ்நாடு அற நிலையத்துறை ஆணையாளர் திரு M. K. பால சுப்பிரமணியன் I. A S. அவர்கள் தலைமை தாங்க, தமிழக அரசு அறநிலையத்துறைச் செயலாளர் உயர்திரு சேஷாத்ரி I. A S. அவர்கள் மலரின் முதற் பிரதியைப் பெற்றுக்கொண்டார்.

மேலும் இந்தப் பிங்களவாண்டு மார்கழி மாதம் ஸ்ரீ உ வே. வாகம்ருதவர்ஷீ வேளுக்குடி K வரதாசரியர் ஸ்வாமி, நமது ஸபையின் ஆதரவில் திருப்பாவை காலக்ஷேபம் செய்தருளினார். மார்கழி முப்பது நாட்களும் மாலை வேளைகளில் ஸ்ரீ வானமாமலை மடத்தில் நடைபெற்ற இக் காலக்ஷேபத்தில் நமது சபையின நிர்வாஹ அங்கத்தினர்களுடன் கூட ஸ்ரீமான் உ. வே. K. V. நரஸிம்மாசாரியர் ஸ்வாமி (ஆடிட்டர்), ஸ்ரீமான் உ. வே K C. சடகோபாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே K. G. பார்த்தசாரதி ஐயங்கார் முதலியோர் பெரு முயற்சி எடுத்துக் கொண்டு நடத்தி வைத்தது குறிப்பிடத் தக்கது.

ஸபை ஸ்ரீ வைஷ்ணவ சமுதாயத்திற்கு ஒழிவில் காலமெல்லாம் கைங்கர்யம் செய்ய, அன்று தேர் கடவிய பெருமான் அடியிணை பணிகிறேன்.

ஆசாரியர்களனை வரும் முன்னுசரித்த
ஆசாரம் தன்னையறியாதார் — பேசுகின்ற
வார்த்தைகளைக் கேட்டு மருளாதே, பூருவர்கள்
சீர்த்த நிலைதன்னை நெஞ்சே சேர்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே

## (எம்பெருமானாரின் தனியனநுபவம்)

பதிப்பாசிரியர் Dr. V. V. ராமாநுஜம்.

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாயமேநே |
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ : ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ||

முன்னுரை : "லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் — அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்" என்று குருபரம்பரையைத் தொழுத பின்னர் தமது ஆசார்யரான எம்பெருமானாரை அடிபணிவதாக அமைந்துள்ளது கூரத்தாழ்வான் பணித்த இந்த ச்லோகம். இதை எம்பெருமானாரின் தனியனாக நித்யமும் அநுஸந்திக்கும் பாக்யம் பெற்றுள்ளோம் நாம். இதன் சீரிய பொருளை ஸ்ரீ பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்துள்ள வ்யாக்யானத்தைப் பின்சென்று சிறிது அநுபவிப்போம்.

அவதாரிகை — இந்தச்லோகமவதரித்த க்ரமம் : ஸ்ரீவத்ஸசிஹ்நர் என்ற கூரத்தாழ்வான் ராமாநுஜ தர்சனத்தையும் ஆசார்யரான ராமாநுஜரையும் ரக்ஷிக்கவேண்டி சோழராஜகோஷ்டியிலே சென்று "நாராயண பரம் ப்ரஹ்ம" என்றும், "நாராயணபரோ வேதா:" என்றும், "நாராயணத்வயி நம்ருஷ்யதி வைதிக: க:" என்றும் அறைகூவி வென்று, "கலைபறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோ தான்" என்னும்படி அவர்கள தர்சநம் அஸஹ்யமாய் (பாபிகளான அந்தராஜ கோஷ்டியிலுள்ளரைக் காண ஸஹியாதவராய்) அவர்களைக்கண்ட தர்சனத்தை (கண்களை) வேண்டாதவராய் வெறுத்து அழித்துக்கொண்டு மீண்டும் (திருவரங்கமே) எழுந்தருளி, தர்சநப்ரவர்த்தகரான எம்பெருமானார் தர்சநத்தை (அவரைக் காண்பதை) வேண்டி எழுந்தருளியிருக்க;

எம்பெருமானாரும், மேல் நாட்டிலே திருவில்லாத்தேவரெல்லார்க்கும் மேலாக திருநாராயணனை ஸ்தாபித்து மீண்டு திருவரங்கமே யெழுந்தருளி ஆழ்வான் கண்ணழிவு கண்டு கண் கலங்கியருளி, "பேரருளாளர் ஐஹிக புருஷார்த்தங்களையும் (தேஹாலன், க்ருஹம் பசு முதலான பலன்கள்) பெருவிசும்பாகிற ஆமுஷ்மிக புருஷார்த்தத்தையும் கொடுக்குமவராகையாலே நேத்ர (கண்) விஷயமாக ஒரு ஸ்தோத்ரத்தைச் செய்யும் என்று நியமிக்க, அப்படியே ஆழ்வானும் நேத்ரஸாத்குரு கரீச! ஸதாமே என்றும் கரீச! பச்யமே பரச்சதசா ! என்றும் அங்குத்தையில் அநுபவ பரிகரமான அப்ராக்ருத சக்ஷுஸ்ஸை (பரமபதத்தில் பரவாஸுதேவனையநுபவிப்பதற்கு வேண்டிய திவ்ய நேத்ரங்களை) வேண்ட, அப்படியே பேரருளாளரான பெரிய பெருமாளும் (திருவரங்கனும்) ஸர்வம் ஹ பச்ய : பச்யதி என்னும்படியான இமையாத கண்ணை இவர் பெறும்படி பெரிய வீட்டுக்கு விடை கொடுத்தருள, ஆழ்வானும் அதிப்ரீதராய் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் திருமாளிகையில் புறவீடு விட்டிருக்க[1] இதை எம்பெருமானார் கேட்டு பதறிக்கொண்டு இவரிருந்த விடத்தே எழுந்தருள, ஆழ்வானும் பரந்தாமமென்னும் திவந்தருகைக்கு[2] அவர்க்கு மறுக்கவொண்ணாதபடி, அவர் திறத்திலே ப்ரபத்தியான இந்தச்லோகத்தை

---

1. ஆழ்வான் திருமாளிகை ஸ்ரீரங்கத்தில் ஸப்தப்ராகாரத்துக்குள் இருந்ததால் தேஹவியோகத்தை நோக்கி அதற்கு வெளியேயுள்ள அரையர் திருமாளிகையில் சயனித்திருந்தார். 2. தாம் பரமபதம் பெறுகைக்கு தமதாசார்யரான ராமாநுஜருடைய அநுக்ரஹத்தை வேண்டினார்.

ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே என்று விண்ணப்பம் செய்து திருவடிகளில் விழ, அவரும் இவரபிப்ராயம் அறிந்து "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்று குறைவர அவர் வலத்திருச் செவியிலே ப்ரஸாதித்தருளினாரிறே.[3]

**இந்தச்லோகத்தின் திரண்ட பொருள் :—** இத்தால் உடையவருடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறார் "நாள்தோறும் ஆச்ரிதரை நழுவுதலின்றிக்கே அச்யுதனை ரக்ஷித்துக் கொண்டு போருகிற ஸர்வேச்வரனுடைய சரணாரவிந்தயுகளங்களிலே பெருங்காதல் கொண்டமையால் அவற்றையொழிந்த ஸமஸ்தவஸ்துக்களையும் புல்லாக எண்ணியிருப்பாராய், அடியேனுக்கு அறியாதன எல்லாம் அறிவிக்கும் ஆசார்யராய், அதுக்கடியான ஞானாதிக்யத்தை யுடையராய் புகலற்றவர் விஷயத்தில் "ஐயோ" என்று இரங்கும் கருணையுடையராய், உலாவும் பெருமாளாய் முன்வந்து நிற்கிற இந்த ராமாநுசருடைய திருவடித்தாமரைகளை உபாயமாக (புகலாக)ப் பற்றுகிறேன்" என்கிறார்.

**உரை : யோநித்யம் :** ய:— "இக்குற்றமேற்றிப் ராமாநுசன்" என்று ப்ரஸித்தி வைதிக ஸார்வபௌமர் என்றபடி நித்யம் - எந்நாளும்; எப்போதும். அச்யுத பதாம் புஜயுக்மருக்ம— வ்யாமோஹத: ததிதராணி த்ருணாயமேநே அச்யுதனை—யாவது- குணவிக்ரஹ விபூதிகளை நழுவுதலின்றிக்கே யிருப்பவன்; ஆச்ரிதரைநழுவவிடாதவன்; ஆச்ரித ஸம்ரக்ஷணத்தினின்றும் நழுவாவன் 'ஸத்யஜேயம்' என்று சொல்லுமவன். அவனது இணைந்த பொன்னடிகளில் அத்யந்த ப்ரேமமுடையவர் எம்பெருமானார். "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன்" ஆகையால், ப்ரணதார்த்திஹராச்யுதனான தேவப்பெருமானின் மிகவும் ஸ்ப்ருஹணீயமான திருவடிகளில் நிரதிசய ப்ரேமத்தாலே அத்திருவடித் தாமரைகளைத் தவிர்ந்த எதையும் துரும்பாக நினைப்பவர் "அரங்கன் கழல் சென்னிவைத்துத் தானதில் மன்னும்" என்றும் "பஞ்சித்திருவடிப் பின்னை தன் காதலன் பாதம் நண்ணா வஞ்சர்க்கரிய இராமாநுசன்" என்றும் சொல்லுகிறபடியே, அந்த உலகமளந்த பொன்னடிகளில் பெருமையல் கொண்டுள்ளது இவர்படி இப்படி ஸர்வேச்வரனுடை திருவடித்தாமரைகளில் தேனைப்பருகித் திளைக்கும் வண்டாய் (வண்டென்பது ஸ்வாபதேசத்தில் ஆசார்யனைச் சொல்லும்), அந்த அநுபவத்தினால் இந்திர பதவி முதலான ஐச்வர்யத்தையும் ஆத்மாநுபவமான கைவல்யத்தையும் துரும்புக்கு ஈடாக எண்ணியுள்ளவர் இந்த எம்பெருமானார். இப்படி பக்தி விரக்திகள் குடிகொண்ட இவர் திருவடிகளைத் தாமும் எல்லாமாக அறுதியிட்டு அடைய வேண்டுகிறார் (ஆழ்வான்).

**அஸ்மத்குரோ : பகவத :** இவருடைய பக்திவைராக்யங்களுக்கும் கல்யாண குணங்களுக்கும் தோற்று இவரை ஆசார்யனாகக் கொண்டது. ஞானமென்னும் நிறை விளக்கேற்றி உள்ளிருளைப் போக்க வல்லவனே குரு. "சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் கற்றவன்" என்ற ஞான பூர்த்தியுள்ளது இங்கே. இவரும் ஆழ்வானை ப்ரதான சிஷ்யராகவும் தம்முடைய தர்சன நிர்வாஹப் பணிக்கு உசாத்துணையாகவும் கொண்டார். எந்த ரஹஸ்யத்தையும் யாருக்குச் சொல்லாவிடினும் ஆழ்வானுக்குச் சொல்லாதிருக்க வொண்ணாத ப்ரக்ருதி படைத்தவரிவர். நரநாராயணாவதாரம் போல ராமாநுஜ கூராதிபர்கள் கூட்டாயிருப்பது. எல்லாரும் ஒரு தட்டும் ஆழ்வான் ஒரு தட்டுமாக எண்ணியிருப்பர் உடையவர். அத்தைப்பற்றவே "ஒரு மகள் தன்னையுடையேன்" என்று ஆழ்வான் வியோகத்தில் ப்ரலாபித்தது "கலையறக் கற்ற மாந்தர்" என்னலாம்படியான இவருக்கும் ஸகலார்த்தமும் ப்ரஸாதிக்கும் படியான ஞான வைபவத்தைச் சொல்லுகிறது பகவத : என்று. "உண்மை நன் ஞானமுரைத்த", "இராமாநுசன் மெய்ம்மதிக்கடல்" என்னும்படியிருக்கும் இவர் ஞானவைபவம். பகவத் சப்தம் ஸமஸ்த கல்யாண குணங்களையும் பரிபூர்ண ஜ்ஞானத்தையும் சொல்லும். இந்த சப்தம் ஸர்வேச்வரனை யொருவனையே சொல்ல வல்லது; மற்ற

---

3. இந்த ஸமயத்தில், த்வயாநுஸந்தானமில்லாதபோது ஆழ்வானுக்கு நெஞ்சு வரளும் என்று த்வயத்தை வலது செவியில உடையவர் அருளிச் செய்தாராக சரித்திரம்.

இடங்களில் உபசாரமாத்ரம் என்று ஸ்ரீ பாஷ்யத்தில் முதலிலேயே அருளிச் செய்தாராயினும் எம்பெருமானார் இவர் ஒருவரேயாதலால் பகவத் சப்தம் இவரிடம் பூர்த்தியாக அந்வயிக்கும். அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராச மாமுனிவர் இவர். இந்தப் பெருமை எம்பெருமானுக்கும் கிடையாதன்றோ ?

அஸ்ய தயைகஸிந்தோ : இத்தால் தமது துர்க்கதி (ஸம்ஸாரிகள் அனைவருக்குமே பொருந்தும்) கண்டு இரங்கும் தயாபூர்த்தியைச் சொல்லுகிறார். அஸ்யதயைகஸிந்தோ : என்று ஈடுபடுகிறார் அஸ்ய ராமாநுஜஸ்ய என்று மேலில் பதத்தோடே அந்வயிக்கும். தயைகஸிந்தோ : கேவலம் க்ருபாமாத்ர ப்ரஸன்னாசார்யர். பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத்திருத்திப் பணிகொள்வான் என்றிறே இருப்பது. "பாடிணாருள் கண்டீர் இவ்வுலகனில் மிக்கதே" என்னுமாபோலே, "சீரின்றி நிறை என் நீசதைக்கு நின் அருளின் கணன்றிப் புகலொன்றுமில்லை" என்றும் "உன் பெருங்கருணை தன்னை" என்றும், "எராரெதிர சரின்னருள்" என்றும் பேசும்படி இருக்கும் இவர் க்ருபையின் பெருமை. 'தாயாஸிந்தோ! பந்தோ!" என்னுப்படியான ஸர்வேச்வரன் க்ருபை மறுத்தகாலத்திலும் ஒதுங்கலாம்படியான காரேய் கருணையிராமாநுசன் இவர். "இவ்வருள் நீ செய்யில் தரிப்பன் இராமாநுச! என் செழுங்கொண்டலே" என்று நேரே ப்ரார்த்திக்கலாம்படியும் இவர் நிரவதிகதயையும் மற்ற கல்யாண குணங்களையும் நேரே காணலாம்படி நிற்கிறதமதாசார்யரை அஸ்யராமாநுஜஸ்ய என்று அநுபவிக்கிறார்.

ராமாநுஜஸ்யசரணௌ சரணம் ப்ரபத்யே : நாராயண சரணங்களைப் பற்றுவதிற் காட்டிலும் ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே என்று பற்றுவது ஸ்வரூபத்துக்கு மிகவும் சேருவதாயிருக்கும். ஏத்தியிருப்பாரை வெல்லும் மற்றவரைச் சார்த்தியிருப்பார் தவம். எம்பெருமானார்தவம் பொன்னரங்கன் கழலில் மன்னியிருக்கும் ப்ரபத்தி. இவர்தவம் "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்ற ஆசார்யாபிமானம். அவர்தவத்தைக் காட்டிலும் இவர் தவம் வென்றது — அவர்க்கு முன்னேயே இவர்க்குப் பேறு ஸித்தித்ததிறே; "நம்புவார்பதி வைகுந்தம் காண்மினே".

குணபரிபூர்ணனிடமே ப்ரபத்தி பண்ணவேண்டுவது என்னில், பகவானிடமுள்ள குணபூர்த்தியெல்லாம் இங்கும் உண்டு. "இதத்தாயிராமாநுசன்", "எந்தைஇராமாநுசன்", எம்மையாளிராமாநுசன்", "அடியேனுக்கிருப்பிடம்", "இராமாநுசன் சரணேகதி", என்றெல்லாம் சொல்லுகையாலே வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ப்ராப்தியும் சொல்லிற்று. "என் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற" என்னும் படியான ஸௌலப்யமும், "மெய்ஞ்ஞானத்திராமாநுசன்", "உண்மை நன் ஞான முறைத்தவிராமாநுசன்" என்று அறியாதன அறிவிக்கைக்கு ஈடான ஞானமும், "நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை.... என்றும் "தீவினை பாறறித்தரும் பரந்தாம மென்னும் திவம் தரும்" என்றும் பாபவிமோசகமான விரோதி நிவ்ருத்தியும் பகவத்ப்ராப்தியும் உண்டாக்கித் தரும் சக்தியும், "காரேய் கருணை" என்ற காருணிகத்வமும், "உன்னுடைய கார்கொண்ட வண்மை" என்று அபேக்ஷா நிரபேக்ஷமாக உபகரிக்கும் ஔதார்யமுமாகிற குணங்களெல்லாம் பூர்ணமாயிருக்கும் குணந்திகழ் கொண்டலிராமாநுசனிடத்து.

இப்படி குணயுக்தரான ராமாநுசனுடைய சரணங்களை உபாயமாகப் பற்றும்படி சொல்லுகிறது ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே என்று. குலந்தரும் நலந்தரும் சொல்லான நாராயணா என்னும் நாலெழுத்துப் போலேயே இங்கும். அவன் சேஷி ராமாநுசன். இவர் சேஷராமாநுசன். சேஷிராமாநுசன் "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று விதித்ததை சேஷராமாநுசன் அநுஷ்டானத்தில் கொண்டார், அந்த அநுஷ்டானத்தை, மூலனவனைவிட பின்னவரே அஜ்ஞாதநிக்ரஹராகையால் பேறுதப்பாதென்று, இவர் திருவடிகளை உபாயமாகப்பற்றுகை மூலம் இங்கு அநுகரிக்கிறார்.

அஸ்ய ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே — இராமாநுசன் பரன்பாதமுமென் சென்னித் தரிக்க வைத்தான் என்னும்படி திருவடிகளில் தலையை மடுத்து உபாயவரணம் பண்ணுகிருர். "சிரஸாயாசிதஸ்தஸ்ய வசநம் நக்ருதம் மயா" என்று சேஷியிடம் சரணாகதி பலிக்காமலிருந்ததுண்டு "கையில் கனியென்னக் கண்ணனைக் காட்டித்தரிலும் உந்தன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்" என்கிறபடி அந்த திவ்யமங்கள விக்ரஹத்தில் ஏகதேசமான இத்திருவடிகள் நாராயண சரணங்களளவும் செல்லவேண்டாத பூர்த்தியுள்ளவைகளாதல் பற்றி "இராமாநுசன் நம்மை நம்வசத்தே விடுமே சரணமென்ருல்" என்கிற உபாயாத்யவஸாயத்தை சரணௌ சரணம் என்று சொல்லுகிறது. ப்ரபத்யே என்று உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது இப்படிப்பற்றுகிறவர் தாம் யாரெனில், "வாசாமகோசரமஹாகுண தேசிகாக்ர்ய கூராத்நாத" என்றும் "குருத்தம கூரநாத தேசிகவர" என்றும் "வாசா மநஸா வபுஷாச யதீந்த்ர! யுஷ்மத்பதார விந்தயுகளம் பஜதாம் குரூணாம் கூரநாத" என்றும் நம் பொய்யிலாத மணவாள மாமுனிகளால் கொண்டாடப்பட்டவர். "நைபும் மனம் உன் குணங்களையுன்னி; என்நாவிருந்து எம்மையன் இராமாநுசன் என்றழைக்கும்; கையும் தொழும்" என்கிறபடியே (மநஸா, வாசா, வபுஷா) த்ரிவித கரணங்களாலும் ஆசார்ய சிகாமணியான கூரத்தாழ்வான் எதிராசன் பொன்னடியைப் பற்றும் பற்று "ஏய்ந்த பெருங் கீர்த்தி ராமாநுசமுனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்று வர்த்தமானமாய் நடப்பது நமக்கும் அமையவேண்டும்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

—:o:—

# எம்பெருமானார் வாழ்க்கை வரலாறு

M. A. வேங்கடகிருஷ்ணன்,

எம்பெருமானார் ஸ்ரீபார்த்தஸாரதியெம்பெருமான் க்ருபையால் ஆஸூரி கேசவப்பெருமாளுக்கும் காந்திமதி அம்மாளுக்கும் ஸ்ரீபெரும்பூதூரில் சகவருஷம் 939ல் அவதாரம் செய்தருளினார். இப்பூவுலகில் 120 வருடகாலம் எழுந்தருளியிருந்து சகவருஷம் 1059ல் திருநாட்டுக்கு எழுந்தருளினார் ஆக அவரது காலம் கி. பி 1017 முதல் 1137 வரை ஆகும். ஆனால் இவர் வாழ்ந்த காலத்தைப்பற்றிப் பலவித கருத்துக்கள் நிலவுகின்றன. நமது ஸம்ப்ரதாயத்திலுள்ள குருபரம்பரா ப்ரபாவங்கள், கோயிலொழுகு திருமலையொழுகு, திவ்ய ஸூரிசரிதம், ராமானுஜார்ய திவ்ய சரிதை, ப்ரபந்நாம்ருதம் இவைகளில் குறிப்பிட்டுள்ள விவரங்களைக் கொண்டு தெளியலாம்.

அனைத்து க்ரந்தங்களிலும் எம்பெருமானார் அவதரித்தது பிங்களவாண்டில் என்றுள்ளது. நம் நாட்டில் ஜாதகங்கள் எழுதும்போது, பிறந்த வருடத்தைக் குறிக்க ப்ரபாவதி–60 வருஷங்களின் பெயரையே எழுதிக் கொள்கிறோம் கி. பி. வருடங்களைத் தற்பொழுதும் நாம் வழக்கில் வைத்துக் கொள்ளவில்லை அதுபோல எம்பெருமானாரின் அவதார வருஷமும் பிங்கள வருஷம் என்றே எல்லா நூல்களிலும் குறிக்கப்படுகிறது.

எம்பெருமானாருடைய முன்னேற்றங்களில் பங்கெடுத்துக்கொண்ட அல்லது குறுக்கிட்ட அரசர்கள் சிலரது காலத்தை, சரித்திரச் சான்றுகளைக் கொண்டு கணக்கிட்டால் எம்பெருமானாருடைய காலமும் புலப்படும்.

முதலாவதாக எம்பெருமானார் மேல்நாடு செல்வதற்குக் காரணமாயிருந்தவன் தீவிர சைவனான ஒரு சோழன். இந்தச் சோழன் யார்? இவன் வாழ்ந்த காலம் என்ன? கி பி 1070 முதல் 1118 வரை தமிழகத்தை ஆண்ட முதலாம் குலோத்துங்க சோழனே அவன். திருநீற்றுச் சோழன் என்னும் மறு பெயருள்ள இவன் மிகத் தீவிர சைவன். தில்லை கோவிந்தராஜர் ஸன்னதியை இடித்து, கோவிந்தராஜர் (மூலவர்) விக்ரஹத்தை கடலில் எறிந்து, தில்லை நடராஜர் விமானத்தைப் பொன்னால் வேய்ந்து பொன் வேய்ந்த பெருமான் எனப் பெயர் பூண்டவன் இவன் சில விஷ்ணு கோயில்களையும் ஜைன விஹாரங்களையும் கட்டி அவைகளுக்கு மானியங்களுமளித்து அவைகளைத் தானே நேரில் சென்று தரிசித்தும் வந்தான் என்று கல்வெட்டுகள் தெரிவிப்பதால் இவன் தில்லைக்கோயிலை இடித்தவனாகவோ ராமானுஜருக்கு ஊறு விளைத்தவனாகவோ இருக்க முடியாது என்பர் சிலர் ஆனால் இவன் முதலில் மக்கள் ஆதரவைப்பெற எல்லா மதங்களிலும் சமரச நோக்குடையவனாயிருந்து பிற்காலத்தில் ஏதோவொரு காரணத்தால் தீவிர சைவனாக மாறியிருக்கலாம். அதற்கு ராமானுஜருடைய புகழே காரணம் ஸ்ரீராமானுஜர் இளம் வயதிலேயே ஆளவந்தாரைத் தொடர்ந்து துறவறம் பூண்டு ஆயிரக்கணக்கான சீடர்களுடன் எழுந்தருளியிருந்ததும் பல சைவர்களையும் அத்வைதிகளையும் திருத்தி வைணவர்களாக்கியதும் கண்டு பொறாமையுற்றிருக்கலாம். திருமலையில் கோயில் கொண்டுள்ள பெருமான் முருகனே என்றும் சிவனே என்றும் சில சைவர்கள் கிளர்ச்சி செய்தபோது ஸ்ரீராமானுஜர் ஸ்ரீரங்கத்திலிருந்து நெடுந்தூரமுள்ள திருப்பதிக்குச் சென்று உண்மையை நிலை நாட்டியது கண்டு சீற்றமுற்றிருக்கலாம். (ஸ்ரீராமானுஜரே பின்னர் ஜைன மன்னனான பிட்டிதேவனை விஷ்ணுவர்த்தனனாக்கி வைஷ்ணவனாக மதம் மாறச் செய்திருக்கிறார். இப்படியிருக்கில் ஏற்கனவே சைவனாக இருந்த இவன் மிகத் தீவிர சைவனானதில் வியப்பொன்றுமில்லை) நெல் செய்யப் புல்தேயுமா போலே ராமானுஜர் வைணவத்தைக் காக்கத் தலைப்பட்ட போதெல்லாம் குலோத்துங்கன் தன் சைவத்தைத் தாக்கத்தலைப்பட்டதாகவே கருதியிருக்கலாம். மேலும் தன் மதத்திற்கு அபாயம் வராதவரையில் மற்ற மதங்களிடம் சமரச நோக்குடன் இருந்திருப்பான். ஆனால் ராமானுஜருடையபுகழ் தன் மதத்தவரையும் கவர்ந்திழுக்கவே அவன் வீர சைவனாகி ராமானுஜரை துரத்தவும் துன்புறுத்தவுமுற்பட்டிருக்கிறான்

இதற்குச் சான்றாக ஒன்று பார்ப்போம். ஸ்ரீராமானுஜர் மேல் நாடு எழுந்தருளிய பின்பு ராமானுஜரைச் சேர்ந்தவர்கள் யாரும் ஸ்ரீரங்கம் கோயிலினுள் நுழையக் கூடாது என்று உத்தரவிட்டான் சோழன் என்று குருபரம்பரை வரலாறுகள் தெரிவிக்கின்றன. ஆனால் இச் சோழன் சிதம்பரத்தில் கோவிந்தராஜர் ஸன்னிதியை இடித்துப் பெருமாளையும் கடலில் தூக்கி யெறிந்து விட்டான். இங்கு இதற்குத் துணிந்தவன் ஸ்ரீரங்கத்தில் ஏன் அவ்வாறு செய்யவில்லை? சிதம்பரத்தில் கோவிந்தராஜர் சன்னதி நடராஜர் சன்னிதிக்கு இடையூறு என்று அவன் கருதியதாலேயே அவன் அவ்வாறு செய்திருக்க வேண்டும். ஆனால்

ஸ்ரீரங்கத்தில் அவ்வாறில்லாமல் போகவே வாளாவிருந்திட்டான் என்று கொள்ளலாம். எனவே முதலாம் குலோத்துங்க சோழனே ராமாநுஜர் மேல்நாடு செல்வதற்குக் காரணமாயிருந்தவன் என்று தீர்மானிப்பதில் தடையொன்றுமில்லை.

அடுத்து எம்பெருமானார் மேல்நாடு சென்று அங்கு சுமார் 20 ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்திருந்தார் அவர் தமது 79வயதிற்கு மேல் அதாவது கி பி 1096ல் மேல்நாடு சென்றிருக்கக் கூடும் சென்றவுடனே தொண்டனூரில் ஜைனர்களை வாதில் வென்று பிட்டிதேவன் என்கிற அரசனுடைய ஆதரவையும் பெற்றார். முதலில் ஜைனனாக இருந்த அவ்வரசனும் ராமாநுஜர் பேரருளால் வைணவனானான். பிட்டி தேவன் கி.பி 1104 முதல் 1141 வரை ஆண்டதாக சரித்திரம் கூறுவதால் அவன் ராமாநுஜருடைய அன்புக்குப் பாத்திரனாகிய போது இளவரசனாக இருந்திருக்கலாம். ராமாநுஜருடைச சரித்திரம் கூறும் எல்லா நூல்களும் எம்பெருமானார்-திரு நாராயணனை பஹுதான்ய வருஷம் ப்ரதிஷ்டை செய்ததாகக் கூறுகின்றன. கி பி. 1098ம் வருஷம் பஹுதான்ய வருஷமாகிறது மேலும் ராமாநுஜருடைய நியமனத்தின் பேரில் பேலூர் நாராயணர் கோயிலை விஷ்ணுவர்த்தனுடைய ஆதரவில் முதலியாண்டான் ஹேவிளம்பி வருஷம் (சக 1039) ப்ரதிஷ்டிப்பித்தார் என்று பேலூர் கோயில் கல்வெட்டு கூறுகிறது. ஆக இது கி பி 1117ல் இதனிடையில் கி பி 1116ல் விஷ்ணுவர்த்தனன் அதிகமான் எனும் அரசனை (முதலாம் குலோத்துங்கனின் தோழன்) கங்கபாடி போரில் முறியடித்திருப்பது குறிப்பிடத் தக்கது. பிறகு கி பி 1118ல் குலோத்துங்கன் கழுத்தில் புண்ணாகிப் புழுத்து மாண்டபின் ஸ்ரீ ராமாநுஜர் மீண்டும் ஸ்ரீரங்கம் எழுந்தருளினார்

முதலாம் குலோத்துங்கனின் மகன் விக்ரம சோழன் தன் தந்தையினுடைய செயல்களுக்கு வருந்தினான் என்று சம்ப்ரதாய க்ரந்தங்களே தெரிவிக்கின்றன. திருச்சித்திர கூடம் கோயிலை இடித்த போது விக்ரம சோழன் தன் தந்தையிடம் 'கோயில்களை இடிப்பதினால் வைணவத்தை அழித்து விட முடியுமா? ஸ்ரீராமாயணமும் திருவாய்மொழியும் உள்ளவரை வைணவம் அழியவே அழியாது" என்றானாம். இவ் விக்ரமனுக்கு அகளங்கன் என்றொரு பெயரும் உண்டு எம்பெருமானார் இவனுடைய ஆதரவைப் பெற்று மீண்டும் இடிந்த கோயில்களைக் கட்டியிருக்கிறார். ஸ்ரீரங்கத்தில இவன் கட்டிய ஒருப்ராகாரம் இற்றைக்கும் அகளங்கன் திருச்சுற்று என்று விளங்குகிறது. எனவே நிர்பயமாக எம்பெருமானார் மீண்டும் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்தார் என்பது உண்மையாகிறது.

எம்பெருமானார் மேல் நாட்டிற் கெழுந்தருளியிருந்த காலத்தில் வீர சைவனான குலோத்துங்கன் தில்லைத் திருச்சித்திரக்கூடத்தில் கோவிந்தராஜர் ஸன்னிதியை இடித்துத் தள்ளி மூல விக்ரஹத்தையும் கடலில் எறிந்துவிட்டான். ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்ஸவரை மட்டும எப்படியோ காப்பாற்றிவிட்டனர் இது கி பி 1097லிருந்து 1118க்குள் அதாவது எம்பெருமானார் மேல்நாட்டில் எழுந்தருளியிருந்தபோது நடந்திருக்கவேண்டும் எம்பெருமானார் ஸ்ரீரங்கம் திரும்பிய பின்னர் (பலவாண்டுகள் கழித்து) ஸ்ரீ வைஷ்ணவர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸௌம்ய வருஷம் பங்குனி உத்தரத்திருநாளன்று திருப்பதியில் ஸ்ரீ பார்த்தஸாரதி கோயிலைப் பெரிதாக்கி அங்கு திருச்சித்திரகூடத்தெம்பெருமானான கோவிந்தராஜ (உத்ஸவ) ரையும் ஒரு மூலவரையும் ப்ரதிஷ்டிப்பித்தார். இது நடந்தது ஸௌம்ய வருஷம் என்று குருபரம்பரை முதலான நூல்கள் தெரிவிக்கின்றன அதாவது கி பி. 1130 இதில் இவருக்கு உதவி புரிந்தவன் கட்டி தேவயாதவராயன் என்கிற சிற்றரசனாவான். இவன் பனிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் என்று சரித்திரவாசிரியர்கள் கூறுகின்றனர். இவனுடைய காலத்தில் இவனுடைய காலத்தில் இவனுடைய ஆதரவுடன் உடையவர் கி பி. 1130 ல் கோவிந்தராஜரை ப்ரதிஷ்டை செய்வித்தருளினார் என்பது சரித்திரபூர்வமான உண்மையாகும்

ஆக எம்பெருமானாரைப்பற்றி ஸம்ப்ரதாய நூல்கள் தெரிவிக்கும் ஆண்டுகளும் சரித்திரத்தில் தெரிவிக்கப்படும் ஆண்டுகளும் ஒத்துப்போகின்றன. இவ்வாறு எம்பெருமானார் வாழ்க்கையில் நடந்த முக்கியமான நிகழ்ச்சிகள் சில :

| | |
|---|---|
| கி. பி. 1017—பிங்கள வரு.—அவதாரம் | 1096—மேல்நாடு எழுந்தருளல் |
| 1096முதல் 1118வரை—திருநாரயணபுரவாஸம், | 1098-பஹுதான்ய வரு திருநாராயணன் ப்ரதிஷ்டை |
| 1117-ஹேவிளம்பி—பஞ்சநாராயணர்கள் ப்ரதிஷ்டை | 1118—ஸ்ரீரங்கம் திரும்பல் |
| 1130-ஸௌம்ய-திருப்பதி கோவிந்தராஜன் ப்ரதிஷ்டை | 1137—திருநாடலங்கரித்தல் |

இக்கட்டுரை Dr. V. V. ராமாநுஜம் ஸ்வாமி ஆங்கிலத்தில் எழுதிய வ்யாஸத்தைத் தழுவி சுருக்கமாக வரையப்பட்டது. விரிவாக அங்கே கண்டு கொள்க.

Srivatsam



ஸ்ரீ ருக்மணி சமேத ஸ்ரீ வெங்கடகிருஷ்ணன்
உற்சவர் ஸ்ரீ பார்த்தசாரதி
திருவல்லிக்கேணி.



திருவல்லிக்கேணி — ஸ்ரீ பார்த்தசாரதி



ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீபெரும்பூதூர்.
With the best Compliments from N. Ganapathy, Triplicane.



ஜகதாசார்ய ஸிம்மாஸநாதிபதி மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ உ. வே. பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி.

Srivatsam



'' ஸ்தோத்ரமாலா '' மலர் வெளியீட்டு விழா.

# ஸ்ரீ பாஷ்ய ரஸாநுபவம்

மஹாமஹோபாத்யாய ஸ்ரீ. உ. வே. காஞ்சீ
ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

அகிலபுவந ஜந்ம ஸ்தேம பங்காதிலீலே விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே, |
ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திருபா. ||

இந்த ச்லோகத்தினால் ச்ரிய:பதியான எம்பெருமான் பக்கலில் பக்திரூபாபந்ந ஜ்ஞானத்தை ஸ்ரீபாஷ்யகாரர் விரும்புவதாக மேலெழக் காணும் பொருள். இதிலுள்ள ஐந்து விசேஷணங்களாலும் நம்மாழ்வாருடைய பெருமைகளை விளக்கி, அவர் திறத்துப் பக்தி யுண்டாம்படி ப்ரார்த்திப்பதாக உள்ளுறை பொருள். ஸகல லோகங்களையும் படைத்தளித்துத் துடைப்பதை லீலையாகவுடையவன்; தன்னை வணங்கின வெவ்வேறு வகைப்பட்ட ப்ராணி ஸமூஹங்களுக்கு முக்தியளிப்பதாகிற ரக்ஷணத்தைச் செய்வதையே விரதமாகக் கொண்டவன்; *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்று பெரியாழ்வார் அருளிச் செய்தபடி வேதாந்தங்களில் மிக விளங்குபவன்; ஸ்வரூபத்தாலும் திருக்குணங்களாலும் மிகப் பெரியவன்; திருமகள் கொழுநன்; இத்தகைய பெருமை வாய்ந்த பரமபுருஷன் பக்கலில் மதிநலமுண்டாக வேணுமென்பது எம்பெருமான் பரமான பொருள். இத்தால் சாஸ்த்ரார்த்த ஸூசனமும் பண்ணினபடி.

## இனி நம்மாழ்வார் பரமான பொருள் கேளீர் :

(அகிலபுவந ஜந்ம ஸ்தேம பங்காதிலீலே) இந்த விசேஷணம் ஆழ்வார்க்கு ஆகும்போது இரண்டுபடியாக யோஜனையாகும் (ஆதி) காரணபூதனை எம்பெருமானோடே லீலாரஸம் அநுபவிப்பவர் ஆழ்வார். "அகில புவந ஜன்மஸ்தேம பங்காநாம் ய: ஆதி: (ஸர்வேச்வர:) தேந ஸஹலீலா யஸ்ய தஸ்மிந்" என்று கொள்ளக் கடவது. திருவாய்மொழியில் (6–2) *என்னுடைய பந்துங்கழலும் தந்து போகுநம்பீ* *விளையாடப்போதுமி னென்னப் போந்தோமை* என்றிவை முதலான பலபல பாசுரங்களினால் ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் நிகழ்ந்த லீலைகள் வாசாமகோசரம். இதுவொரு யோஜனை; மற்றொரு யோஜனையாவது, அகிலம் — புவநஜந்மஸ்தேமபங்காதிலீலா யஸ்ய—என்று கொண்டு, எம்பெருமானையே எல்லாமாகவுடையவர் ஆழ்வார்; (அதாவது) *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்* என்றிருந்தவர் நம்மாழ்வார் என்றதாகிறது இப்படியிருந்தவர் ஆழ்வாரொருவரேயாதலால் இந்த யோஜனையும் மிகப் பொருந்தும். இதுவே முக்கியமான யோஜனை.

(விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே) விநத விவித பூதவ்ராதரக்ஷகத்வம் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்டாலும் *அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்* என்கிற ந்யாயத்தாலும் மந்த்ரரத்நப்ரக்ரியையாலும் அந்த ரக்ஷண பாரத்தை எம்பெருமானுடைய திருவடிகளே வஹிக்கும். அந்தத் திருவடிகளுக்கு ஸ்ரீ சடகோபனென்றும் ஸ்ரீ சடாரியென்றும் நம்மாழ்வாருடைய திருநாமமேயாயிற்று. ஆகவே இந்த விசேஷணம் நம்மாழ்வாரிடத்திலே மிகவெளிதாக அந்வயிக்கக் குறையில்லை. பாதுகாஸஹஸ்ரத்தில் ப்ரபாவபத்ததியில் (42) "ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணுமதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:" என்ற ச்லோகம் இங்குப்

பொருத்தமாக அநுஸந்தேயம். இந்த விசேஷணத்தில் ஆழ்வார் விஷயமான யோஜனையில் விவரிக்க வேண்டிய விசேஷங்கள் பலவுண்டு; விஸ்தரபயத்தாலே விடுகின்றதத்தனை.

(ச்ருதி சிரஸி விதீப்தே) ச்ருதி சிரஸ்ஸாவது உபநிஷத்து; அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார். எங்ஙனேயென்னில்; * தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ர்வாம்ஸஸ் ஸமிந்ததே * இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்கள் ஆழ்வாரையன்றோ ஓதுகின்றன. விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா: * என்கிறபடியே விப்ரத்வ ஸித்திபெற்றவர் ஆழ்வார், (விபந்யவ:) * பண ஸ்துதௌ* என்கிற தாதுவிலிருந்து நிஷ்பந்நமான சொல்லாகையாலே விசேஷித்து ஸ்துதிகர்த்தாக்களென்றபடி. "தேவிற்சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞன், பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே" என்றபடி எம்பெருமானுக்குத்தகுந்த ஸ்தோதா ஆழ்வார். (ஜாக்ர்வாம்ஸ:) * கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு மூண்டோ கண்கள் துஞ்சுதலே * என்று சொல்லி இந்நிலத்திலே உறக்கமற்றிருப்பவர் ஆழ்வாரே. 'ஸமிந்ததே' என்றவிடத்து (ஸம்) என்கிற உபஸர்க்கத்தை நோக்கியே இங்கும் (விதீப்தே) என்று ஸோபஸர்க்கமாக வருளிச் செய்தது.



இதற்கு மற்றொரு யோஜனையுமுண்டு; ச்ருத்யாம் தீப்த:, ச்ருதிசிரஸி விதீப்த: என்கிறதாகக் கொள்க. ச்ருதி யென்றது திருவாய்மொழி: அதில் தீப்தர் ஆழ்வார்: பதிகந்தோறும் நிகமனப்பாசுரத்திலே 'குருகூர்ச் சடகோபன்' என்று விளங்குபவரென்கை. இனி, ச்ருதி சிரஸ்ஸாவது கண்ணிநுண் சிறுத்தாம்பு திவ்யப்ரபந்தம். அது திருவாய்மொழியின் முடிவிலே நியமேந அநுஸந்திக்கப்படுவதால் ச்ருதி சிரஸ்ஸாயிற்று. அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார்; அந்த ப்ரபந்தம் முழுவதும் ஆழ்வார் விஷயமேயாதலால் அதில் விதீப்தரென்னக் குறையில்லையே.

(ப்ரஹ்மணி) "ஸர்வத்ர ப்ருஹத்த்வகுணயோகேந ஹி, ப்ரஹ்மசப்த:" என்ற ஸ்ரீ பாஷ்யத்தின்படி ப்ரஹ்மமென்றது மிகப் பெரிய வஸ்துவென்றபடி. ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்" என்கிற பாசுரத்தினால் — மிகப் பெரியவனான எம்பெருமானையும் தம்முள் ஒரு மூலையிலடக்கியிருக்கையாகிற பெருமை தமக்கேயுள்ளதென்று ஸோபபத்திகமாக நிரூபித்திருப்பதனால் ஆழ்வாரை ப்ரஹ்மமென்னத் தட்டில்லை. ஆழ்வார் தம்முடைய ப்ரஹ்மத்வத்தைத் தாமே உபபாதித்தருளியிருப்பது விசேஷம். அப்பாசுரத்தின்படி எம்பெருமான் ப்ரஹ்மமாகவும் ஆழ்வார் பரப்ரஹ்மமாகவும் தேறுதலால் இங்கு 'பரஸ்மிந் ப்ரஹ்மணி' என்றது ஆழ்வார்க்கு மிகவழகாகப் பொருந்தும்.

(ஸ்ரீநிவாஸே) * ஸது நாகவர: ஸ்ரீமாந் * * அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந் * லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந: * இத்யாதிஸ்தலங்களில் பகவத் கைங்கர்யருசியும் பகவத் பக்தியுமே ஸ்ரீயாகச் சொல்லப்படுகையாலே அந்த ஸ்ரீயானது ஆழ்வார் பக்கலிலே குறையற்றதாகையாலே ஸ்ரீநிவாஸத்வம் ஆழ்வார்க்கும் அநபாயம். ஆக இப்படிபட்ட ஆழ்வாரிடத்திலே தமக்கு பக்தியை வேண்டினாராயிற்று எம்பெருமானார்.

வேதம் கர்ம காண்டமென்றும் ப்ரஹ்ம காண்ட மென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்டமென்பது. பகவானுக்கு ஆராதந ரூபங்களான யஜ்ஞம் முதலிய கர்ம விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்மகாண்டமென்றும், அந்த கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்டம் (அதாவது உபநிஷத்து) என்றும் சொல்லிற்றாயிற்று. கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமினியென்னும் மஹர்ஷி யெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸை யென்று பெயர்.

ப்ரஹ்ம காண்டமென்னும் உபநிஷத்பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸரென்னும் மஹர்ஷியெழுந்து நான்கு அத்தியாயங்கள் கொண்ட வொரு சாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே சாரீரக மீமாம்ஸை யென்று பெயர். உத்தர மீமாம்ஸையென்றும் வழங்குவர். ப்ரஹ்ம ஸூத்ரம் என்பது இதனையே. ஒவ்வொரு அத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே நான்கு அத்யாயங்களையும் பதினாறு பாதங்களையுங் கொண்டது சாரீரகமீமாம்ஸை யென்றதாயிற்று.

இதில் ஒவ்வொரு விஷயத்தைப்பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரண மென்ற பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப் பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் ஐந்நூற்று நாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்தியாயங்களையும் பதினாறு பாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நாற்றுநாற்பத்தைந்து ஸூத்ரங்களையும் கொண்டது ப்ரஹ்ம ஸூத்ர சாஸ்த்ரம் (அல்லது) சாரீரகமீமாம்ஸா சாஸ்த்ரமென்றதாயிற்று.

தத்வ ஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்து கொள்வதற்கு உபநிஷத்துக்களே ஸாதனமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக் கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. ப்ரஹ்மஸூத்ரமென்கிற சாரீரக மீமாம்ஸையின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்து கொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்ம ஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார்.

மஹர்ஷி ப்ரணீதங்களான ஸூத்ரங்களின் பொருளை நம் போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம் போன்ற அல்ப மதிகளிடத்தில் பரம கருணை கொண்ட பூர்வர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம், அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை. இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக சங்கராசார்யர் பாஷ்யம் இயற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்ததீர்த்தர் (மத்வாசார்யர்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமானுஜாசார்யரென்கிற ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தார். வட இந்தியாவில் அதிக ப்ரஸித்தி பெற்றுள்ள வல்லபமதம் நிம்பார்க்கமதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவமதத்திற்காக ஸ்ரீகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்யமென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் கொண்டாடப்பட்டுலாவுவன.

விசிஷ்டாத்வைதிகளென்றும் ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் பகவத் ராமானுஜமதஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின ஸ்ரீ பாஷ்யமே ஜீவாதுவென்பது சொல்லாமலே விளங்கும். உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை விளக்கி ஸூத்ரகாரருடைய உள்ளத்

திற்கு அநுகுணமாக நிஷ்கர்ஷமாய் நிரூபிக்கப்பட்டது ஸ்ரீராமாநுஜபாஷ்யமே யென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அப்படிப்பட்ட ஸ்ரீபாஷ்யத்தில் ஒரு திவலையை அநுபவிப்போம். ப்ரஹ்மஸூத்ரத்தின் கடைசி ஸூத்ரத்திற்கு எம்பெருமானார் பணித்துள்ள வ்யாக்யானம் அத்யத்புதமானது. அதைச் சிறிது அநுபவிப்போம்.

முக்தனுடைய ஐச்வர்யம் பரமபுருஷாதீநமன்றோ அந்த பரம புருஷன் தான் ஸ்வதந்த்ரனாகையாலே அவன் தனது ஸங்கல்பத்தாலே ஒரு ஸமயம் முக்தனைப் பரமபதத்தில் நின்றும் இந்நிலத்திற்குத் திருப்பியனுப்பிவிடவுங் கூடுமாகையாலே மோக்ஷ புருஷார்த்தமும் அநித்யமாக வேண்டிவருமே என்கிற சங்கை உண்டாகும் அந்த சங்கைக்குப் பரிஹாரமாக (* அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்) என்கிற சரமஸூத்ரமவதரிக்கிறது. சங்காபரிஹாரப்ரகாரம் யாதெனில்; அநந்யதாஸித்தமான ச்ருதி வாக்யங்களைக்கொண்டே அறியக்கடவதான பொருளை சாஸ்த்ரம் சொன்னபடியேதான் அறிய வேண்டும். பரமபுருஷனொருவனுளனென்பதை நாம் எந்த சாஸ்த்ரங்கொண்டு அறிகின்றோமோ அந்த சாஸ்த்ரமே முக்தர்களுக்கு மீட்சியில்லை யென்பதையுமறிவிக்கின்றது; "ஸ கல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்ம லோகமபிஸம்பத்யதே நச புநராவர்த்ததே" இத்யாதி சாஸ்த்ரங்களை இங்கே அநுஸந்திப்பது. ஆக முக்தர்களுக்கு மீட்சியில்லை யென்பதை ஸூத்ரகாரர் சாஸ்த்ரத்தைக் காட்டி ஸ்தாபித்தார். பகவானே கேட்பாரற்ற ஸ்வதந்திரன். சாஸ்த்ரத்தையும் மீறிச் செய்வதற்கு அவன் அசக்தனல்லன். "ஸ்வாதந்த்ர்யமைச்வரமபர்யநுயோஜ்யமாஹு:" என்னப்பட்ட ஸ்வாதந்த்ரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப் புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்று சோத்யம் பண்ணினால் இதற்கு ஸூத்ரகாரர் சொன்ன ஸமாதானம் த்ருப்தியை விளைக்காது. சங்கராசார்யரும் தம்முடைய பாஷ்யத்தில் சாஸ்த்ரத்தை யெடுத்துக்காட்டினவளவோடு நின்றுவிட்டார். ஸ்வாமி யெம்பெருமானார் ஆழ்வாரருளிச்செயற் கடலில் ஆழ்ந்து அரும்பெரும் பொருள்களை யறிந்தவராகையாலே அவ்வருளிச்செயல் பரிமளம் கமழ இங்கு அருளிச்செய்திருக்கும் அர்த்த விசேஷம் ஸ்ரீபாஷ்யத்திற்குச் சிகரமாக விளங்குகின்றது. அவ்வர்த்த விசேஷம் கேண்மின்;

ஈச்வரன் ஸ்வதந்திரனேயானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன். ஸத்ய ஸங்கல்பனென்று பேர்பெற்றவன். தன்னுடைய மநோரதத்திற்கு மாறுபாடாக நடந்துகொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அப்பரமபுருஷன் என்ன பாடுபடுகிறான்! எவ்வளவு க்ருஷிபண்ணுகிறான்! அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ. எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநன் வந்துசேர, அவனை லபித்தபின்பும் இழப்பனோ? என்னுமபிப்ராயத்தை "நச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி" என்கிற இன்சுவையே வடிவெடுத்த திவ்யஸூக்திபாலே காட்டியருளி சங்காபரிஹாரத்தை மிகவழகாகத் தலைக்கட்டினார். இதில் "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்தி விந்யாஸமானது எம்பெருமானார் திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிறபடியை நன்கு காட்டுகின்றது. * யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன், தானொட்டிவந்தென் தனி நெஞ்சை வஞ்சித்து, ஊனொட்டி நின்று என்னுயிருள் கலந்து, இயல் வானொட்டுமோ இனியென்னை நெகிழ்க்கவே* என்றும், *வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம் பாரித்து, தானென்னை முற்றப் பருகினான், காரொக்குங் காட்கரையப்பன் கடியனே* என்றுமுள்ள திருவாய்மொழிப் பாசுரங்களின் திவ்யார்த்த ஸௌரபத்தோடே ஸ்ரீபாஷ்யம் தலைக்கட்டப்பட்டிருக்கின்றதென்பதை உபயவேதாந்த ரஸிகர்களே அறியவல்லார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஜீவாத்வைதம்

ந்யாய வேதாந்த வித்வான் கீர்த்திமூர்த்தி

**ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரியர் ஸ்வாமி**

(1965ல் ஸாதித்த ஒரு உபன்யாஸத்தின் ஸாரம்)

முமுக்ஷுவான சேதனன் தன்னைப்பற்றி முந்துற முன்னம் தெளிவாக அறிய வேண்டும். அதாவது, ஸ்வஸ்வரூப ஜ்ஞானம் இன்றியமையாதது. ஆத்மா தேஹத்தினின்றும் வேறுபட்டவன். உலகில் பலபல ஜந்துக்கள் பார்க்கப்படுகின்றன. இவைகளில் பலபல ஜீவாத்மாக்கள் இருந்து அந்தந்த சரீரங்களை இயங்கச் செய்கின்றனர். சரீரங்கள் பல பார்க்கப்பட்டாலும் எல்லாவற்றிலும் ஒரே ஆத்மாதான் உள்ளது என்பது அத்வைத மதம்—சங்கராசார்ய பக்ஷம். ஜீவர்கள் பலர் என்பது நம் ஸ்வாமி எம்பெருமானார் பக்ஷம். நமது ஸித்தாந்தம் வைதிக ஸித்தாந்தம். வேதங்களை உயர்ந்த ப்ரமாணமாக மதிப்பது. ஒரே ஒரு ஆத்மா தான் உண்டு என்று கூறும் வேதவாக்யங்கள் உண்டு; பல என்று கூறுமவையும் உண்டு. இப்படிப்பட்ட வாக்யங்களை எப்படி ஒருங்கவிடுவது என்ற கேள்வி எழுகிறது



வேதார்த்தமறுதியிடுவது ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களாலே என்று ஸ்ரீ வசனபூஷண ஸூத்ரம். புராணங்களில் பரமப்ரமாணமாக அங்கீகரிக்கப்பட்டது ஸ்ரீ விஷ்ணு புராணம். இதில் இரண்டாம் அம்சத்தில் ஜடபரதருடைய சரித்ரம் பார்க்கப்படுகிறது. இவர் ஏழு த்வீபங்களுடன் பூமண்டலத்தை ஆண்ட சக்ரவர்த்தி. பிறகு ராஜ்யத்தைத் துறந்து தன்னந்தனியாக இருந்து ஸாளக்ராமக்ஷேத்ரத்தில் பகவத் பஜனம் பண்ணிக் கொண்டிருக்கும்போது ஒரு மான்குட்டியை வளர்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு, பிறகு இறக்கும் போது அந்த மானையே நினைத்திருந்தால் மானாகவே புனர்ஜன்மமெடுத்து, அந்த சரீரத்திலே பூர்வஜன்ம ஸ்மரணத்துடன், ஸாளக்ராமக்ஷேத்ரத்திலேயே வாழ்ந்திருந்து, பிறகு ஜடபரதன் என்ற ப்ராஹ்மணோத்தமராக பிறந்து வாழ்ந்து சரீராவஸானத்தில் மோக்ஷமடைந்தார்.

மஹாஜ்ஞானியாக இருந்த இவர், ஒரு ஸமயம் ஸௌவீரன் என்ற அரசனுக்குப் பல்லக்கு சுமக்கும்படி நேரிடுகிறது. அந்த அரசனும் இவரோடு ஏதோ பேச முற்பட, இவர் மஹாஜ்ஞானி என்பதறிந்து இவரிடம் ஆத்ம விசாரம் பண்ண, இவர் அவனுக்கு ஆத்மாவைப் பற்றி உபதேசம் பண்ணுகிறார். எந்த முமுக்ஷு சேதனனுக்கும்,

ஸ்வஜ்ஞானம் ப்ராபகஜ்ஞானம் ப்ராப்யஜ்ஞானம் முமுக்ஷுபி: |
ஜ்ஞானத்ரயமுபாதேயம் ஏததந்யம் நகிஞ்சன ||

என்று தன்ஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம் இவை மூன்றும் அவச்யம் அறியப்பட வேண்டியவை. ஜீவாத்மாவைப் பற்றி விரிவாக உபபாதிக்கும் ஜடபரதர்.

தஸ்ய ஆத்ம பரதேஹேஷு ஸதோபி ஏகமயம் யத் |
விஜ்ஞானம் பரமார்த்தோஸௌ த்வைதிந: அதத்யதர்சிந: ||

என்று ஒரே ஒரு ஜீவனே உண்டு என்று தோற்றும் படி சொல்லுகிறார்.

மாயன் அன்று ஐவர் தெய்வத்தேரினில் செப்பிய ஸ்ரீ கீதையிலும்,

இதம் சரீரம் கௌந்தேய ! க்ஷேத்ரம் இத்யபிதீயதே !
ஏதத் ய: வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித /
க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம்வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ‖ 13—1, 2

என்று சொல்கிறான். இந்தச் சரீரத்தை க்ஷேத்ரமென்பர். இதனுள் குடியிருக்கும் ஆத்மாவை க்ஷேத்ரஜ்ஞனென்பர். எல்லாச்சரீரங்களிலுமுள்ள ஆத்மாவாக என்னை அறிந்து கொள் என்கிறான் கண்ணன். 'ஸர்வ க்ஷேத்ரேஷு' என்று பன்மையாகச் சொல்லி க்ஷேத்ரஜ்ஞன் என்று ஒருவனைச் சொல்லுகையால் எல்லா சரீரங்களிலும் ஒரே ஜீவனே இருப்பதாகக் கண்ணன் சொல்கிறான் என்று தோற்றும். இது தான் கண்ணன் கொள்கையா? இரண்டாமத்யாயத்தில் சாஸ்த்ராரம்பம் பண்ணுகையில் "நத்வேவாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமே ஜநாதிபா:" (2—12) என்ற ச்லோகத்தால் அஹம், த்வம், இமே என்று வெவ்வேறாகப் பிரித்து பல ஆத்மாக்களுள்ளதாகச் சொல்லவில்லையா? இப்படிச் சொன்ன கண்ணபிரான் மேலே 13-ம் அத்யாயத்தில் எல்லா சரீரங்களிலும் தானே ஆத்மாவாக இருப்பதாகச் சொன்னால் அதை எப்படி ஸமந்வயப் படுத்துவது என்ற கேள்விக்கும் பதில் காண வேண்டும்.

ஜடபரதர் சொன்ன ச்லோகத்தில், ஆத்ம, பரதேஹேஷு என்று, தன்தேஹம், பிறர் தேஹங்கள் என்று பல சரீரங்களைச் சொல்லி, ஸத: தஸ்ய– இவைகளில் இருக்கக் கூடிய அவனைப்பற்றி (ஆத்மாவைப்பற்றி) ஏகமயம் விஜ்ஞாநம் யத் அஸௌ பரமார்த்த - ஒன்றே என்ற தெளிவான அறிவே சீரிய அறிவு. த்வைதிந அதத்யதர்சிந: - இரண்டாக அறிபவர் (பேதஜ்ஞானமுள்ளவர்கள்) பொய்யைப் பார்ப்பவர்கள் (உண்மை உணராதவர்கள்) என்னபட்டது. மேல் காட்டிய கீதாச்லோகத்திலும், இந்த ஸ்ரீவிஷ்ணுபுராண ச்லோகத்திலும் ஒரே விஷயத்தை ஏகரீதியில் பேசுவது போல தோன்றுகிறது. சாந்தோக்யத்தில் வரும், 'ஐததாத்ம்யமிதம் ஸர்வம் ஸ ஆத்மா · தத்வமஸி ச்வேத கேதோ" என்ற வாக்யத்தையும் ஏகாத்மவாதத்துக்கு முக்ய ப்ரமாணமாகக் காட்டுவார்கள். த்வைத ஸித்தாந்தத்தவர்கள் " அதத்வமஸி ச்வேதகேதோ" என்று பதங்களை பிரித்துக் கொண்டு ஆத்ம பரமாத்ம பேதத்தை நிர்வஹித்தனர். நம் ஸ்வாமி எம்பெருமானார் பாஷ்ய மருளிச் செய்கையில் "தத்வமஸி" என்றே பதஸ்வரூபத்தை வைத்து அர்த்தம் சொல்லுகிறார். ஜடபரதர் வசனத்திலும் " த்வைதிந: அதத்யதர்சிந." என்று கொண்டே பொருள் நிர்வஹிக்கிறார்.

முன்பு காட்டிய கீதாச்லோகத்தில், க்ஷேத்ரஜ்ஞம் ச அபி என்பதால் க்ஷேத்ரஜ்ஞனாகவும் என்னை எண்ணுவாயாக என்பது கண்ணன் கூற்று என்று தெளிவாகத் தெரிகிறது. இந்த உம்மையினால் இரண்டு விஷயங்களைக் கண்ணன் மனதில் கொண்டுள்ளதாகப் பார்க்கிறோம். அதாவது க்ஷேத்ரமாகவும் (க்ஷேத்ரம் ச-சரீரமாகவும்) க்ஷேத்ரஜ்ஞனாகவும் (க்ஷேத்ரஜ்ஞம் ச—ஆத்மாவாகவும்) என்னை அறிவாயாக என்றபடி. சங்கரபக்ஷத்தில க்ஷேத்ரம்ச மாம்வித்தி என்று சரீரத்துக்கு க்ருஷ்ண ஐக்யம் சொல்ல இயலாது. நம் ஸ்வாமி தமது கீதாபாஷ்யத்தில சரீரம் க்ஷேத்ரம்), ஜீவன் (க்ஷேத்ரஜ்ஞன்), ஈச்வரன் (மாம்) மூன்றையும் ஸமாநாதிகரணமாகப் பேசி விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்கிறார். (இது எப்படி என்று மேலே தெளிவாகும்)

ஜடபரதர் வாக்கை ஸ்வாமி எம்பெருமானார் எப்படி நிர்வஹிக்கிறார் என்று பார்ப்போம். முதலில் ஆத்மதேஹே, பரதேஹே என்று மட்டும் சொன்னாலே போதுமே. எப்படியும் தேஹங்கள் பல என்பது பற்றி விவாதமுமில்லை. பின்னர் ஆத்மதேஹே என்றதுடன் பரதேஹே என்று ஏன் சொல்ல வேண்டும்? இப்படிப் பிரித்துச் சொல்வதால் ஜீவாத்மாக்களும் பல என்ற அபிப்ராயத்துடன் சொல்வதாகத் தான் தேறும்.

தர்சநம் பேத ஏவச என்று தேவப்பெருமாளே எம்பெருமானாருக்கு ஸித்தாந்தப்படுத்தி அருளினார். "நித்யோ நித்யாநாம் சேதநச்சேதநாநாம் ஏகோபஹூநாம் யோ விததாதிகாமாந் தம்

ஆத்மஸ்தம் யே அநுபச்யந்தி தீரா:தேஷாம் சாந்தி: சாச்வதீ நேதரேஷாம்'' என்று ச்ருதி வாக்யம். ஜீவாத்மாக்கள் பல; நித்யர்கள், அறிவுள்ளவர்கள்;—பரமாத்மா ஒருவன், நித்யன், அறிவுள்ளவன். இந்த பரமாத்மா பலவான இஜ்ஜீவர்களுக்கு இஷ்டங்களைக் கொடுத்து ரக்ஷிக்கிறான். ஜீவாத்மாவுக்கும் ஆத்மாவாய் இருக்கிறான் இப்படி அவனை அறிந்து பஜிப்பவருக்கு மோக்ஷம். மற்றவருக்கில்லை என்று ச்ருதி சொல்லுகிறது. நித்யாநாம், சேதநாநாம், பஹூநாம் என்று பன்மையில் சேதனர்களை (ஜீவாத்மாக்களை)ப் பற்றிச் சொல்லி, நித்ய சேதந:, ஏக: என்று பரமாத்மாவைப் பற்றிச் சொல்லிற்று. மேலும், ஆத்மஸ்தம் யே அநுபச்யந்தி தீரா: ஜீவாத்மாவுக்கும் ஆத்மாவாய் இருப்பவன் அவன் என்று அறிந்து (பார்த்து) பஜிப்பவருக்கு சாச்வதீ சாந்தி: மோக்ஷம் என்ற ச்ருதி வாக்யம் ஆத்ம பரமாத்ம பேதத்தை மிகவும் தெளிவாக ஸந்தேஹத்துக்கிடமில்லாமல் உபபாதித்துள்ளது. ஜடபரதர் ஞானியாகையால் ச்ருதிக்கு விரோதமாக அர்த்தம் ஒருகாலும் சொல்லமாட்டார். ஆகவே தஸ்ய ஆத்ம... இத்யாதி ச்லோகத்தையும் பேத பரமாகவே நிர்வஹிக்க வேண்டும்.

மஹாப்ரளய காலத்தில் எல்லாமே அழிந்து விட்டது என்று சொல்லலாம் போன்ற நிலையில், ''ஏகோஹவை நாராயண ஆஸீத்; நப்ரஹ்மா, நேசாந:, நேமேத்யாவப்ருதிவீ'' என்று ச்ருதி சொல்லும் காலத்திலும், ஜீவாத்மா, அசித் இரண்டும் உண்டு. ''நாராயண ஆஸீத்'' என்கையாலேயே இந்த அர்த்தம் கிடைக்கும் நாரம் இல்லாவிடில் நாராயணனும் இல்லை. நாராயண சப்தத்திற்கு நாரவிசிஷ்டனான பகவான் என்றே பொருள். நாரம் என்பது பரமாத்மாவை யொழிந்த ஸமஸ்தவஸ்துக்களையும் சொல்லும்பதம் என்பது தெரிந்த விஷயம். சித்தும் அசித்தும் ஸூக்ஷ்மமான அவஸ்தையில் அவனிடம் ஒன்றிக் கிடக்கும் ப்ரளய தசையில். ஸ்ருஷ்டி காலத்தில் இவை ஸ்தூலங்களாக—அதாவது நமக்குத் தோற்றும் பல பொருள்களாகப் பரிணமிக்கின்றன. இதுவே ப்ரளயகாலத்தில் ஒருவனாயுள்ள நாராயணனுக்கும் (ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டப்ரஹ்ம) ஸ்ருஷ்டித்த பிறகு பலவாய்த் தோற்றும் நாராயணனுக்கும் (ஸ்தூல சிதசித் விசிஷ்டப்ரஹ்ம) வாசி. முதலில் ஏகமாய் இருந்து 'பஹுஸ்யாம்' என்று ஸங்கல்பித்துப் பின்னர் பலவாக ஆகிறான் பரமபுருஷன். இப்படித் தோற்றமளிக்கும் பல பொருள்களிலும் அவன் வ்யாபித்து நின்று அவைகளை உள்ளனவாகச் செய்வது அவனுடைய அதிசய சக்தியால். மேலும், ப்ரளய நிலையிலும் நம் கர்மம் அழிவதில்லை. ச்ருஷ்டி காலத்தில் பலவிதமான தேஹங்களில் ஜீவாத்மாக்களைச் சேர்க்கையில் அந்தந்த ஜீவனுடைய கர்மமடியாக தேவ, மநுஷ்ய, திர்யக் முதலான சரீரங்களில் ஏதாவதொன்றில் புகுத்தும்படி அமைகிறது. அந்தந்த தேஹம் அமைவது அவரவர் சேமித்துள்ள புண்ய பாபங்களையிட்டே. எம்பெருமானுக்கு ஜீவர்களிடைய ஏற்றத்தாழ்வு பார்க்க வேண்டிய அவச்யம் எதுவும் இல்லை. ஆத்மா ஒன்றேயாக இருந்தால் இந்த விஷம ஸ்ருஷ்டிக்கு இடமே இல்லையன்றோ?

ஆத்மா ஒருவனேயாயிருந்தால் இவன் முக்தன், இவன் பத்தன் என்றெல்லாம் எப்படி விபாகம் பண்ண முடியும்? ஒரே ஒரு ஆத்மாவே உண்டானால், ஒரே ஸமயத்தில் அவன் பத்தனாகவும் முக்தனாகவும் எப்படி இருக்க இயலும்? கண்ணன் அத்வைத ஞானமுள்ள ஆசார்யனாயிருந்தால் ''கௌந்தேய!'' என்று ஏன் கூப்பிடுகிறான்? கண்ணாடியில் நம்மைப் பார்த்துக் கொண்டால் ப்ரதிபிம்பம் (இதுஒரு நிழல் உருவம்) தெரிகிறது. அத்வைதிகள் கண்ணாடிக்கு வெளியிலுள்ள வஸ்துவை ப்ரஹ்மத்துக்கும், கண்ணாடியை அவித்யைக்கும், ப்ரதிபிம்பத்தை ஜீவனுக்கும் ஒப்புச்சொல்லுவர்கள் கண்ணாடியில் காணும் நிழலுருவம் உண்மையன்று; அப்படியே நாம் காணும் பொருள்களும் உண்மையன்று என்பது அவர்கள் பக்ஷம் அப்படியானால் கண்ணன் கண்ணாடியில் தன் நிழலுருவத்தைப் பார்த்து ''கௌந்தேய!'' என்றழைக்கிறானா? சிறுகுழந்தைகள் தங்கள் உருவைக் கண்ணாடியில் கண்டு ''பாப்ப ! ரொம்ப கன்னாயிருக்கையே!'' என்பது போல் தானா கீதோபதேசம்? ஜீவன் ஒருவனே என்று ஜீவாத்வைதத்தை ஒத்துக கொண்டால் பத்தமுக்தாவஸ்தை கூடாது; சிஷ்யசார்ய வ்யவஸ்தையும் கூடாது.

"நிரஞ்சந: பரமம் ஸாம்யமுபைதி" என்ற ச்ருதியும் "மம ஸாதர்ம்ய மாகதா:" என்ற ஸ்ரீ கீதா வசனமும் மோக்ஷ நிலையைப் பற்றி பேசுமவை. இங்கு ஐக்யம் பேசப்படவில்லை. ஜீவபர ஸாம்யமே தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒத்தவராகிறார்கள் என்றபடி. ஜீவன் ஒருவனே என்றால் இந்த இரண்டு வாக்யங்களும் அர்த்தமற்றவைகளாகப் போய்விடும்

ஆனால் ஜடபரதருடைய அபிப்ராயம் தான் என்ன? இதை ஒரு உதாரணம் கொண்டு உபபாதித்துக் காட்டலாம். ஒரு கிராமத்தில் பல க்ருஷிகர்கள் தங்கள் விளைநிலங்களில் நெல் சாகுபடி செய்கின்றனர். ஒரு ஸமயத்தில், சம்பா, கார் முதலான பலரகமான நெல்லைப் பயிரிடாமல் எல்லாரும் ஒரே ரகமான (சீரகச்சம்பா என்று கொள்க) நெல்லையே பயிரிட்டு நல்ல அறுவடையாகி எல்லா அகங்களிலும் கொண்டு சேர்த்துள்ளனர். எல்லா வீடுகளிலும் ஒரே நெல் உள்ளது என்று சொல்லலாம். இதன் பொருள் என்ன? வீடுகள் பன்மை. ஒரே நெல் என்பது ஒருமை. எண்ணிக்கையில் ஒரே ஒரு நெல் (தான்யம்) என்று பொருள் கொள்ளலாகுமா? ஒரே ரகத்தைச் சேர்ந்த எண்ணிறந்த தான்யங்கள் என்பதே ஸரியான பொருள் அன்றோ? எல்லா நெல் தான்யங்களும் ஒன்றுக்கொன்று மாறுபாடில்லாமல் ஒரே மாதிரி இருக்கும். அப்படியே ஞானாகாரத்வம், ஞானஸ்வரூபத்வம் என்பவை பற்றி ஜீவாத்மாக்கள் எல்லாம் ஒரே மாதிரி இருக்கும். ஒரே தர்மத்தைப் பற்றி இருப்பதால் ஜடபரதர் ஏகமயம் என்கிறார். எல்லாம் ஒத்த வஸ்துக்கள் என்றபடி. ஞான ஏக ஆகாரம் என்று சொல்லப் பொருந்தும்.



ஜடபரதர், அரசனிடம், "நான் பல்லக்கு சுமப்பவனுமல்லேன்; நீ சுமக்கப்படுபவனுமல்லை" என்கிறார். இங்கு நான் என்பது ஆத்மாவை. பல்லக்கைச் சுமப்பது சரீரம். பல்லக்கில் உள்ளது அரச சரீரம். சரீரங்களுள் பேதம் சொல்லி அறியவேண்டியதில்லை. ஸ்வதஸ்ஸித்தம். கர்மபலனாக அந்தந்த ஆத்மாவுக்கு வெவ்வேறு சரீரம் கிட்டுகிறது. ஆக, விதவிதமான சரீரங்களைப் பெறுவது கர்மபலத்தினால். ஒரே ஒரு ஆத்மாதான் உள்ளது என்றால் கர்மமடியாக பலபல விதமான சரீரங்கள் இருப்பதேன்? தேவ, மனுஷ்ய, திர்யக் என்று பல விதங்களான சரீரங்கள் பார்க்கப்படுகிறபடியால் இப்படிப்பட்ட சரீரங்களில் அவரவர் கர்மத்துக்கேற்ப பல ஜீவத்மாக்கள் விதவிதமான சரீரங்களில் இருந்து கொண்டு கர்மபலன்களை புஜிக்கிறார்கள் என்று ஒத்துக் கொண்டாக வேண்டும்.

ஆத்மாவின் சுத்த ஸ்வரூபத்தைப் பார்த்தால், அரசதேஹத்திலுள்ள ஆத்மா ஜடபரதர் தேஹத்திலுள்ள ஆத்மாவிடமிருந்து வித்யாஸமில்லாதது. அரச சரீரத்திலுள்ளதால் அந்த ஆத்மஸ்வரூபம் வேறு என்றும் பரத சரீரத்திலுள்ளதால் இந்த ஆத்மஸ்வரூபம் வேறு என்றும் அறிபவனை த்வைதி என்கிறார் பரதர். இவர்கள் உண்மையைப் பார்க்கவில்லை. உண்மையில் எல்லா ஆத்மாக்களும் சுத்த ஸ்வரூபத்தில் (ஞானாகாரம், ஞானாச்ரயத்வம்) ஒரே மாதிரி உள்ளமையால் ஏகமயம் என்று பேசினார். அரசன், தன் தேஹம், ஆத்மா இவையிரண்டும் ஒன்று என்ற எண்ணத்தில் (அதேபோல் பரதருடைய தேஹமும் ஆத்மாவும் ஒன்று என்று கொண்டு) "நீ என்னைச் சுமக்கிறாய்" என்றனன். இந்த த்வைதப் பேச்சு அறியாமையின் விளைவு என்று ஜடபரதர் சுட்டிக் காட்டுகிறார். த்வைதிந: அதத்யதர்சிந: என்று. பலபல ஜீவாத்மாக்கள் இருந்தாலும் ஆகாரத்தாலே ஒன்றுபட்டவர்களாகவே இருப்பார்கள். அரசன், பரதர் என்ற வ்யக்திபேதமிருந்தாலும் ஆத்ம ஆகாரபேதம் இல்லை. தேவத்வ மநுஷ்யத்வாதி பேதங்கள் சரீரத்துக்கேயுள்ளது. இதை ஆத்மாவிலே ஏற்றிப்பார்ப்பது அஜ்ஞானமாகும். இதுதன்னையே "த்வைதிந: அதத்யதர்சிந:" என்ற வாக்யம் கூறுகிறது. அரசன், பரதன் என்ற வைஷம்யம் ஆத்மாவுக்கில்லை. தேவசரீரத்திலுள்ள ஆத்மா தேவனென்றும் மனித சரீரத்திலுள்ள ஆத்மா மனிதனென்றும் சொல்லுவதற்கில்லை. எல்லா ஜீவாத்மாக்களும் நித்யர்களே; அணுக்களே ஞானஸ்வரூபர்களே; ஞானகுணகர்களே; பகவச்சேஷ பூதர்களே. இப்படி வேற்றுமையற்றிருத்

தல்பற்றி ஜீவாத்வைதம், ப்ரகாராத்வைதம் என்கிறார்கள். ப்ரகாரேண அத்வைதம்- ப்ரகாராத்வைதம். ஜ்ஞாநத்வ, ஜ்ஞாத்ருத்வ, பகவச்சேஷத்வரூப ப்ரகாரங்களாலே வந்த ஒருமை என்றபடி. பல முத்துக்கள் எல்லாம் ஒரே தரமானவையாய், ஒரே வடிவுள்ளவையாய் ஒரே அளவுள்ளவையாய் இருக்குமானால் எல்லாம் ஒரே முத்து என்பர். இதனால் எண்ணிக்கையில் ஒன்றே என்று பொருளல்ல. இதே போல பல ஆத்மாக்களைப் பலபல தேஹங்களில் (அவரவர் கர்மாநுகுணமாக) பார்த்தாலும், நித்யன், அணு, ஞானமுள்ளவன், பகவச்சேஷபூதன் என்ற ஆகாரங்களில் எல்லா ஆத்மாக்களும் ஒருபடிப் பட்டுள்ளமையால் தேறும் அத்வைதத்தையே (ஒருமைப்பாட்டையே) ஜீவாத்வைதசப்தம் சொல்லுவதாகத் தெளிவாக அறிய வேண்டும். எண்ணிக்கையில் ஆத்மாக்கள் ஒன்றே என்று பொருளல்ல. எண்ணிலடங்காமலே இருக்கும்,

எந்த விஷயத்தை உபபாதித்தாலும் நமது பாஷ்யகாரர் ப்ரமாணங்களைப் பார்க்கும் விதம் விலக்ஷணமாக இருக்கும். ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணங்கள் இவைகள் ஒவ்வொன்றுகளுள்ளும், இவைகளெல்லாவற்றையும் ஒன்றாகவும் முன்னும் பின்னும் பார்த்து ஒரு கோர்வையாகவே அர்த்தம அருளிச் செய்வது இவரின் தனிச் சிறப்பு. ‘பார்த்தான் அறு சமயங்கள் பதைப்ப'' என்று அமுதனார் அருளிச் செய்துள்ளபடி, இவர் ப்ரமாணங்களைப் பார்க்கும் வகையைக் கண்டவாறே ப்ரதிபக்ஷிகள் பதைபதைத்து மாண்டுபோவர். எந்த ஶ்ருதியாயிருந்தாலும் மற்றஶ்ருதிகளுடன் விரோதம் வராமலும், ச்ருதிக்கும் அதன் விவரணமான ஸ்ம்ருதி, புராணம் இவைகளுக்குள் விரோதம் வராமலும் நிர்வஹிப்பது பாஷ்யகாரருடைய இயல்பு; அஸாதாரண ஸாமர்த்யம். சித்திரையில் செய்ய திருவாதிரை நாளைப் பொய்யிலாத மணவாள மாமுனிகள் “சதுமறை வாழ்ந்திடு நாள்” என்று கொண்டாடுவது சாலப் பொருத்தமுடைத்தாயிருப்பது ஒவ்வொரு வேதத்திலும் ஒவ்வொருவாக்யமும் ஸ்வாமி நோக்கில் அநர்த்தமாகப் போகாமல் வாழ்வதால் என்றுணர்க.

ஏடுபடுத்தியது— Dr. V. V. ராமாநுஜம்.





Srivatsam



ந்யாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு

**வேங்கடாசாரியர் ஸ்வாமி**

Srivatsam



ந்யாய வேதாந்த வித்வான்
வாகம்ருதவர்ஷீ ஸ்ரீ. உ. வே. வேளுக்குடி
**வரதாசாரீயர் ஸ்வாமி**

# எம்பெருமானார் திருநாவீறு

ந்யாய வேதாந்த வித்வான்
ஸ்ரீ உ.வே. வாகம்ருதவர்ஷீ வேளுக்குடி K. வரதாசார்யஸ்வாமி

உலகத்தில் இருளைப்போக்கும் பெருமை பகலவன் என்னும் ஆதித்யனுக்கு உண்டு. அதே போல் உள்ளிருளாம் அஜ்ஞானத்தைப் போக்கித் தன் அனுஷ்டானத்தாலே ஒளி அளித்த பெருமை ராமதிவாகரனுக்கு உண்டு. பின்பு தன் உபதேசத்தாலே (ஸ்ரீகீதா சாஸ்த்ரத்தாலே) ஆந்தரமான அந்தகாரத்தைப் போக்கிய பெருமை அச்யுதபானுவான கண்ணனுக்கு உண்டு. இவர்களுக்கு மேலே நம் ஸம்ப்ரதாயத்தில் க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமென உதித்த வகுளபூஷண பாஸ்கரரான நம்மாழ்வாருடையவும், லோகதிவாகரரான கலியனுடையவும் பெருமை அளத்தற்கரியது. எல்லார்க்கும் மேலே நம் குருபங்திஹாரத்தின் நாயகரத்னமான ஸ்ரீராமானுஜரின் வைபவம் வாசாமகோசரம்.

ஸ்ரீபாஷ்யகாரரான ராமானுஜர் அருளிச்செய்த பாஷ்ய க்ரந்தங்களில் மற்ற பாஷ்யகாரர்கள் காட்டாததாய் விசேஷித்துக் காட்டியருளிய அம்சங்கள் யாவை என்பதை, செவ்விய முறையில் ஆசார்யர்களின் திருவடி நிழலில் இருந்து பங்க்திகளை பக்தியோடு காலக்ஷேபம் செய்தாலல்லது உணர்வது அரிது. ஸாக்ஷாத் ஆதிசேஷாம்சபூதரான சேஷராமானுசன் தவிர மற்ற எவராலும் சேஷிராமானுசனான கண்ணனுடைய திருவாக்கான கீதையின் செம்மைப் பொருள் தெரியப்பேச இயலாது என்பது திண்ணம். அதுபோல், "யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்—யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி" என்றும் "அன்னமாய் முனிவரோடு அமரரேத்த அருமறையை வெளிப்படுத்த அம்மான்" என்றும் புகழப்படுகிற சேஷிராமானுசனே அந்த உபநிஷதர்த்தங்களைச் சொல்ல முடியும். "வ்யாஸரூபாய விஷ்ணவே" என்று அவனே அனுப்ரவேசம் செய்து அநுக்ரஹித்த சாஸ்த்ரமான ப்ரஹ்மஸூத்ரங்களையும் அவன் ஒருவனே வ்யாக்யானிக்க ஸமர்த்தன். "தஸ்மை ராமானுஜார்யாய நம: பரமயோகிநே | ய: ச்ருதிஸ்ம்ருதி ஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமசீசமத்" என்று ஸ்வாமி எம்பெருமானார் எப்படி பகவதம்சமாக அவதரித்து பகவானையே வக்தாவாகக் கொண்ட ப்ரஸ்தான த்ரயத்துக்கும் பாஷ்யமருளி அவற்றின் ஜ்வரத்தை சமனம் செய்து ஸதர்த்த ப்ரதிஷ்டாபனம் செய்தருளினார் என்பதையும் பின்னோர்கள் பரக்க அனுபவித்தார்கள். "வேதார்த்த ஸங்க்ரஹம்" மூலம் ச்ருத்யர்த்தங்களையும், "ஸ்ரீபகவத் கீதாபாஷ்யம்" மூலம் ஸ்ம்ருதியான கீதையின் பரமார்த்தங்களையும் "ஸ்ரீபாஷ்யம்" "வேதாந்த தீபம்" "வேதாந்த ஸாரம்" மூலம் ப்ரஹ்ம ஸூத்ரங்களின் ஸகலார்த்தங்களையும் தனித்தனியாகவும் சேர்த்தும் ரக்ஷித்துக் கொடுத்தார் என்பது மிகவும் ஸாரமான விஷயம்.

ப்ரஹ்மஸூத்ர பாஷ்யாரம்பத்தில் ஸ்ரீ சங்கராசார்யர் தம் உள்ளத்தில் ஓடும் அர்த்தமான அத்வைதம்தான் ஸூத்ரப்ரஸ்தானத்தின் பரமதாத்பர்யம் என்று அத்யாஸ பாஷ்யம் பண்ணுகிறார். ஆனால் நம் ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யாரம்பத்தில், "வேதவ்யாஸ சிஷ்யரான போதாயனருடைய வ்ருத்திக்ரந்தத்திலுள்ள அர்த்தங்களை பூர்வாசார்யர்கள், சுருக்கிக் காட்டியருளிய வழியில் [தந்மதாநுஸாரேண] ஸூத்ராக்ஷரங்கள் வ்யாக்யானிக்கப்படுகின்றன" என்று முதல் பங்க்தியில் அருளுகிறார். "அகிலபுவந" என்னும் மங்கள ச்லோகத்திலே, தான் விசதீகரிக்கப்போகும் ஸகல அர்த்தங்களையும் ஆச்சரியமாக ஸங்க்ரஹித்துள்ளார். அதிலுள்ள "சேமுஷீ பக்திரூபா" என்னும் பதங்களால் ஆழ்வாரின் "மதிநலம்" அல்லது "நலமான மதியை" சொல்லுகிறார். "தத்வமேகோ ஹரி: நாராயண:

பர:'' ''த்யேயோநாராயண ஸதா'' என்பதனை ''ஸர்வ ச்ருதிஷு அநுகதம்'' என்னும் பெருமை படைத்ததான புருஷ ஸூக்தத்திலும் ச்ருத்யர்த்தஸ்மாரகமான பகவத்கீதையிலும் சேர்த்து அர்த்த கடனம் பண்ணுகிறார். வேதாந்தம் சொன்ன சேமுஷீ என்பதும் கீதை சொன்ன பக்தியும் சேர்ந்தால் ''பக்தி ரூபாபந்நஜ்ஞானம்'' ஆகும். ஜ்ஞான தர்சன ப்ராப்திகளுக்கு பக்தி உபாயம் என்பது சாஸ்த்ர ஸித்தம். ''தமேவம் வித்வான் அம்ருத இஹ பவதி; நாந்ய பந்தா அயனாய வித்யதே'' ''தமேவ விதித்வா'' முதலான உபநிஷத்வாக்யங்களில் சொல்லப்பட்ட ஜ்ஞானத்துக்கும், ''பக்த்யாது அநந்யயா சக்ய'' என்னும் கீதா வாக்யங்களில் சொல்லப்பட்ட பக்திக்கும் ஸாமஞ்ஜஸ்யத்தைக் காட்டும் வகையில் ஸ்வாமீயின் ஸ்ரீஸூக்திகள் ஹ்ருதயங்கமமாகவும் சலசித்தவ்ருத்தி விநிவர்த்தநௌஷத மாகவும்அவதரித்துள்ளன.

ஸ்ரீ சங்கராசாரியர், ஸ்வாமி எம்பெருமானாருக்கு முற்பட்டவர். அவர் முதலில் ப்ரஸ்தானத்ரயத்துக்கும் அத்வைதரீதியாக வ்யாக்யானம் பண்ணினார். பிற்பட்டவரான ஸ்வாமி ராமாநுஜர் விசிஷ்டாத்வைத ரீதியில் பாஷ்யமருளினார் ஆனந்த தீர்த்தர் த்வைதரீதியில் வ்யாக்யானித்தார் நம் மதம் விசிஷ்ட அத்வைதமேயொழிய விசிஷ்டத்வைதமுமல்ல; வசிஷ்டாத்வைதமுமல்ல. இம்மூன்று மதாசார்யர்களும் தங்கள் தங்கள் மதத்திற்கு அனுகுணமாகவே ஸூத்ரஸங்க்யைகளைப் பண்ணியிருப்பது மிகவும் ரஸமான ஒரு விஷயம் தத்வம் ஒன்றுதான் என்னும் சங்கரர் 555 ஸூத்ரங்கள் என்கிறார். தத்வங்கள் மூன்றும் வேறுதான் என்னும் பேதத்தையே ப்ரதானமாகப் பேசிய மத்வர், 564 ஸூத்ரங்கள் என்கிறார். தத்வங்கள் மூன்றில் சித், அசித் எனும் இரண்டையும் தனக்கு சரீரமாக கொண்டு தான்சரீரியாக உள்ளது பரமதத்வம்; மற்றொன்று கிடையாது என்னும் பேதாபேத கடனத்தை ப்ரகடனம் செய்த ராமாநுஜர் 545 ஸூத்ரங்கள் என்கிறார்.



ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமாத்யாயத்திற்கு ''பகவத்குணதர்ப்பணம்'' என்னும் ஆச்சர்யமான வ்யாக்யானம் செய்யப்புகா நின்ற ஸ்ரீ பராசரபட்டர், பாஷ்யாரம்பத்தில் ஒரு விஷயத்தை அருளிச் செய்தார். ''நான் இரண்டு மதங்களைச் சொல்லுகிறேன்; அதில் எது ஸங்கதம் என்று படுகிறதோ அதை உபாதேயமாகக் கொள்ளுங்கோள்'' என்று, மேலே விஷயத்தைச் சொல்கிறார். நாமரூப குணங்கள் இல்லாத சுத்த புத்த வஸ்து ப்ரஹ்மம் ஒன்றுதான் உள்ளது (ஸத்யம்); இருப்பனவாகத் தோற்றும் மற்றவையெல்லாம் மாயா (அவித்யா); ஸம்பந்தத்தால் ப்ரஹ்மத்திற்கு ஏற்பட்ட ப்ரமிப்பு அதனால் பொய் (மித்யை அல்லது அஸத்யம்); ப்ரஹ்மத்தின் இந்த அவித்யை ஆத்மாவின் ஜ்ஞானத்தால் ஒழிந்து ப்ரஹ்மத்திற்கு மோக்ஷம் ஏற்படுகிறது. இது சங்கர மதமான அத்வைதம். ''சேதனர்களான ஜீவாத்மாக்களையும் அசேதனமாகிற ப்ரக்ருதியையும் தனக்கு சரீரமாகவும், தான் அவற்றினுள் வர்த்தித்து அவற்றை இயக்கும் சரீரியாகவும் உள்ள ப்ரஹ்மம் ஒருவனே; அவன் ஸத்ய ஜ்ஞானாநந்தாதி அனந்த கல்யாண குணங்களோடு கூடிய புருஷோத்தமன்; பக்தியாலே அடையப்படுபவன்; அவனுடைய அருளாலே முமுக்ஷுவான ஜீவாத்மா பரமாத்ம பக்தியின்மூலம் மோக்ஷம் பெறுகிறான். இது ராமநுஜருடைய மதமான விசிஷ்டாத்வைதம்; இவற்றிலே எது ஸங்கதம் என்பது படிப்போர்க்குப் புலனாகும்.

சங்கரருடைய அத்வைதம்போல் நம்முடையதும் ஒரு அத்வைதம்தான் சங்கரரைப் போலவே ஸ்வாமீயும் ஒரு ப்ரஹ்மாத்வைதமும் ஒரு ஜீவாத்வைதமும் ஆச்சரியமாக ஸாதிக்கிறார். இதற்கு ப்ரமாணமாக ஸ்ரீ விஷ்ணு புராணத்திலிருந்து இரண்டு சது:ச்லோகிகளை உதாஹரிக்கிறார். இதைத்தான் ப்ரகார்யத்வைதம் என்றும் ப்ரகாராத்வைதம் என்றும் நிர்தேசித்து அருளுகிறார் நம் ஸ்வாமி ராமாநுஜர். இது விசிஷ்டாத்வைதத்தின் ப்ரதான ப்ரதிதந்த்ரமான சரீர சரீரி பாவத்தை ஆதாரமாக வுடையது இந்த பாகத்திறதுண்டான ஸ்ரீ பாஷ்யபங்க்திகளுக்கு ச்ருதப்ரகாசிகா பட்டர் விபுலமாக வ்யாக்யானம் அருளியுள்ளார். இதனாலேயே ஸ்ரீ பாஷ்யம் பூர்த்தி செய்யும்பொழுது ஸ்வாமி ''இதி ஸர்வம்ஸமஞ்ஜஸம்'' என்று வேதாந்த வாக்யங்களுக்கும், கீதா வாக்யங்களுக்கும், ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கும் ஸர்வவித ஸாமஞ்ஜஸ்யமும் உள்ளபடி தெரிவிக்கப்பட்டது என்று அருளுகிறார். பேதச்ருதிகளை மாத்ரமே கொண்டு வ்யாக்யானிப்பது மத்வமதம். அபேதச்ருதிகளையே கொண்டு வ்யாக்யானிப்பது அத்வைத மதம். அபௌருஷேயமான ச்ருதிவாக்யங்களிலல்லவோ பேதமும்

அபேதமும் சொல்லப்பட்டிருக்கிறது; அவற்றில் ஒன்றை மற்றொன்று பாதிக்கும் எனக்கொள்ள ஆகாது; இவற்றிற்கு கடகங்களான ச்ருதி வாக்யங்களும் உள்ளன; அவற்றையும் சேர்த்துப் பார்த்தால் ஸர்வ வாக்யார்த்த ஸாமஞ்ஜஸ்யம் ஏற்படுகிறது என்கிறார்.

'ப்ரஹ்மம் ஒன்றே'—இது ப்ரஹ்மாத்வைதம்; 'ஜீவன் ஒன்றே'—இது ஜீவாத்வைதம், இரண்டையும் இரண்டு பாஷ்யகாரர்களும் தங்கள் திருவுள்ளமாகத் தங்கள் ஸத்தாந்தத்திற்கு அநுகுணமாக ஸாதிக்கிறார்கள். இவை இரண்டு சது:ச்லோகிகளில் கிடைக்கின்றன. பராசர மைத்ரேய ஸம்வாதரூபமான ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் வராஹாவதார ப்ரகரணத்தில் தேவர்களும் மஹரிஷிகளும், ஆவிர்ப்பவித்த மஹாவராஹப் பெருமானை நான்கு ச்லோகங்களில் ஸ்துதிக்கிறார்கள். அதில் ப்ரஹ்மாத்வைதம் சொல்லப்படுகிறது. ஒன்றுக்குமேலே இரண்டாவது தத்வம் கிடையாது; "ந இஹ நாநாஸ்தி கிஞ்சந" "ம்ருத்யோஸ் ஸம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பச்யதி" என்பது அத்வைத மதம். ப்ரக்ருதம் ச்லோகம் இதுதான். 'பரமார்த்தஸ்த்வமேவைக: நாந்யோஸ்தி ஜகத: பதே' பொருள்: "நீ ஒருவனே பரமார்த்தம்; நீ தவிர வேறு எதுவும் கிடையாது" விவரணம்: வேதாந்த ரீதியில் தத்வத்ரயம் உண்டு; சித். அசித், ஈச்வரனென; பரமாத்மாவைக் காரணமாகச் சொன்னார். மற்றவை இரண்டையும் கார்யமாகச் சொன்னார். கார்யத்வத்தை சித்துக்கும் அசித்துக்கும் சொன்னால் இவற்றிற்கு நித்யத்வம் சொல்லமுடியாது ஜீவாத்மாவாகிற சித்து போக்தா என்றும் ப்ரக்ருதியாகிற அசித்து போக்யம் என்றும் பரமாத்மா நியந்தா என்றும் கூறப்படுகிறது. ப்ரளயகாலம் ஸ்ருஷ்டி காலம் வாசியற இருக்கும் வஸ்து காட்டப்படும் முறையில் ஸத்கார்யவாதமாக ஸ்வாமி அருளுகிறார். இது "ததநந்யத்வ" என்று ஆரம்பணாதிகரணத்தில் நிர்தேசிக்கப்படுகிறது. காரணகாலத்தில் இருப்பதுதான் கார்யகாலத்தில் இருக்கிறது; வஸ்துபேதம் இல்லாமல் அவஸ்தாபேதம் மாத்ரம் உள்ளது; இதுதான் விசிஷ்டாத்வைதத்திற்கு முக்யார்த்தம். ப்ரக்ருதி என்னும் ஒரு தத்வத்திலிருந்து பஞ்சபூதங்கள் தன்மாத்ரைகள் முதலான விவிதவிகாரத்தை (ஸ்வரூப அன்யதா பாவம்) உண்டாக்குகிறான். பானையாயிருந்தாலும் பிண்டமாயிருந்தாலும் மண்தான் என்பது போல. ஜீவாத்மாவுக்கு ஸ்வரூபத்தில் விகாரம் கிடையாது. ஆனால் ஞான ஸங்கோச விகாஸரூபமான ஸ்வபாவ விகாரத்தை உண்டாக்குகிறான். அசித்து, ஸ்வரூபத்தில் அன்யதாபாவம் அடைவது போக்யமாயிருப்பதால்; சித்து, ஸ்வபாவத்தில் (ஞானத்தில்) மாத்ரம் அன்யதாபாவம் அடைவது போக்தாவாயிருப்பதால். மேல் ச்லோகத்தில், 'ஜகத: பதே" என்றொரு சப்தம் "நாந்யோஸ்தி" சப்தத்திற்குப் பிறகு உள்ளதைப் பார்த்தால், ஸ்வம் இல்லாத ஸ்வாமி கிடையாது, ஸ்வாமி இல்லாத ஸ்வம் கிடையாது; ஸ்வாமியாயும், ஆதாரமாயும், நியந்தவாயும், அசேஷமும் சேஷமாய்க் கொண்ட சேஷியாயும், ப்ரகாரியாயும் சரீரியாயும் நீ தவிர மற்றொருவன் கிடையாது, என்பதுதான் ஸாரம். ஸ்ரீ ஆளவந்தாருடைய ஸித்தித்ரயம் ஸ்ரீ பாஷ்யத்துக்குக் கைவிளக்கு. அதில் 'சோள ஸம்ராட் தவிர வேறொன்றும் கிடையாது' என்னும் உதாரணத்தின் மூலம், அவனைப் போல ஐச்வர்யவானாகவும் வீர்யவானாகவும் மற்றொருவ ஸாம்ராட் கிடையாது என்று அர்த்தம் பண்ணுகிறார். அதேபோல, ஸ்வஸஜாதீய த்விதீய ராஹித்யமுள்ளதாய், ஸ்வேதர ஸமஸ்தவஸ்துவிலக்ஷணமாய், ஸ்வதந்த்ரனாய், விசேஷ்யமாய், ப்ரகாரியாய் ஸகலசேதநா சேதனத்தையும் தனக்கு ப்ரகாரமாய்க் கொண்டுள்ளவன் பரமாத்மா என்று ஏற்படுகிறது. தண்டகுண்டலங்கள் போல் அன்றிக்கே வஸ்த்ரத்தின் வெண்மைபோல் அவனிலிருந்து பிரிக்கமுடியாத முறையில் பிணைக்கப்பட்ட ப்ரகார ப்ரகாரிபாவம் இதையே "குருகூரதனுள் பரன், திறமன்றி மற்று இல்லை" என்று ஆழ்வார் ஸாதிக்கிறார். இதுதான் ப்ரகார்யத்வைதம்—ப்ரஹ்மாத்வைதம்.



இனி ஜீவாத்வைதம் என்னவென்று பார்ப்போம். ஜடபாதர் ரஹூகணனுக்குப் பல்லக்குத் தூக்கிக் கர்மத்தை அநுபவிக்கும்போது, பகவத்குணானுபவத்தில் தள்ளாடி ஸரியாகத் தூக்காததால், ராஜா தண்டிக்க, அவர் பேச்சிலே தத்வம் நிறைந்திருக்கக் கண்டு அவரிடம் ஸந்தேஹம் தெளிவிக்க ப்ரார்த்தித்தான். மூன்று ப்ரச்னங்களைக் கேட்டான் - 1 நீர் யார்? 2 நீர் எதற்கு வந்தீர்? 3 நீர் எங்கு வந்தீர்? என்று அதற்கு அவர், "இக்கேள்விகளைக் கேட்காதே" என்றுரைத்து நான்கு ச்லோகங்களாலே ஸமாதானம் சொல்லுகிறார். நாம் ப்ராஹ்மணனோ, க்ஷத்ரியனோ, ஸ்த்ரீயோ, புருஷனோ, ஆகாரத்தால் பேதமுண்டாயினும் ப்ரகாரத்தால் பகவத்சேஷம் என்னும் அத்வைதமே நமக்குண்டு.

இதைத்தான், "வேணு ரந்த்ர விபேதேந பேத: ஷட்ஜாதி ஸம்ஜ்ஞித:" "த்வைதிந: அதத்யதர்சிந:" என்னும் விஷ்ணுபுராண ச்லோகங்கள் சொல்லுகின்றன. "ஒத்து ஒவ்வாத பல்பிறப்பு" என்று திருமழிசையாழ்வார் அருளிச் செய்தது போல், ஜடபரதரும், வேணுவின் த்வாரங்களின் வழியாக ஸஞ்சாரம் செய்யும் காற்று ஒன்றுபோலிருந்தாலும் த்வார பேதத்தாலே ஸ்வரபேதமும், அந்த காற்றுக்கு ஷட்ஜாதி நாம பேதங்களும் ஏற்படுகின்றன; பேதகாகாரங்கள் சரீரமாத்ரவிச்ராந்தமே. ஆத்மஸ்வரூபத்துக்குள்ளது பகவத் சேஷத்வமாகிற ஏகாகார வைசிஷ்ட்யம் (பரகாரத்தாலே). இதையே "வித்யா விநய ஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி, சுநிசைவ ச்வபாகேச பண்டிதா: ஸமதர்சிந:" என்று கீதையிலும் காண்கிறோம். இத்தால் அவன் ப்ரகாரீ, நாம் ப்ரகாரம் என்னும் ஞானம் பிறக்குமேயானால் ப்ரஹ்லாதாழ்வான் போல், "பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ர கதா குத:" என்ற க்ரமத்தில் எல்லாமே பரமாத்மாவுக்கு சரீரமாகையால் எதையும் வேண்டுதல் வேண்டாமையிலாது, அவன் விபூதி விஸ்தாரத்தில் விஷமபுத்தி பண்ணுதொழுக ப்ராப்தமாகும். இப்படி ஜீவாத்வைதமாகிற ப்ரகாராத்வைதவிஷயமாய் எம்பெருமானார், முதலாக எல்லா பூர்வாசார்யர்களுடைய திருவுள்ளக் கருத்தும் ஒருங்கே அமைந்து உள்ளன.

நம் பாஷ்யகாரரான எம்பெருமானார் இவ்வாறு ப்ரகார ப்ரகார்யத்வைதார்த்தங்களை ச்ருதி ஸ்ம்ருதி ஸூத்ரங்களின் பரமதாத்பர்யமாக நிர்த்தாரணம் பண்ணியதாலேயே ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் ஸம்ப்ரதாயார்த்தங்கள், அத்யாபி ஸுரக்ஷிதமாக இருந்து பிற்பட்ட பூர்வாசார்யர்களாலும் நன்கு பரிபாலிக்கப்பட்டு இன்றுள்ள நம்போல்வாரையும் நம்பெருமாள் திருவடிகளில் கைங்கர்யருசி உள்ளவர்களாக்கி உஜ்ஜீவிப்பிக்கின்றன.

*ஸ்ரீ ஸ்வாமி அருளிச்செய்த உபன்யாஸங்களிலிருந்து*
ஸ்ரீ உ. வே. N. *வீரராகவாசார்யாரால்* தொகுக்கப்பட்டது.

# ஸ்ரீமத் கீதாபாஷ்ய ஸாரம்

ந்யாய வ்யாகரண சிரோமணி, உபயவேதாந்தாசார்ய, வித்யாபூஷணம், பிருந்தாவனம்
ஸ்ரீரங்கஜீ தேவஸ்தாந வித்வான்,

## திருநாங்கூர் ப்ர. ப. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி



ஆரெனக்கென்று நிகர் சொல்லில் மாயனன்றைவர் தெய்வத்தேரினில் செப்பிய கீதையின் செம்மைப்பொருள் தெரியப்பாரினில் சொன்ன விராமாநுசனைப் பணியும் நல்லோர் சீரினில் சென்று பணிந்தது, என்னாவியும் சிந்தையுமே.

நம்பிராமாநுசனருளிய கீதா பாஷ்யத்தின் ஸாரமான சில பொருள்களைக் காட்ட முயல்கின்றனனிங்கு. நிறைஞானத் தொருமூர்த்தியான கண்ணபிரான் பார்த்தஸாரதியாக நின்று அறத்தில் கலங்கினவனாய் சரணமடைந்த தனஞ்சயனை வ்யாஜமாக்கி கீதையின் வாயிலாக உலகெல்லாமுய்ய நெறியெல்லா மெடுத்துரைத்தனன். ஆயன் துவரைக்கோனாய் நின்றமாயனன்றோதிய தைவ வாக்கான கீதை "ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தந: | பார்த்தோ வத்ஸோ சுதீர் போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ||" எனச் சொல்லப்படுகையாலே எல்லாவுபநிடதங்களின் திரண்ட ஸாரமாகும். எனவே ஒப்புயர்வற்ற சாத்திரமாக இது "ஏகம் சாஸ்த்ரம் தேவகீ புத்ரகீதம்" என்றெல்லாராலும் துலாவப்படாநின்றது. இந்த கீதா சாஸ்த்ரத்தை "தத்வோபதேசம்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் அழகியமணவாளப்பெருமாள் நாயனார் குறிப்பிட்டார். பரதத்துவமான கண்ணனருளிய உபதேசம் என்றபடி. கண்ணனும் கீதையில் "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய" என்று சொல்லித் தன்னை மேலான தத்துவம்- பரமபொருள் என்று தானே நிலை நாட்டியருளினான்- பரமாசார்யரான ஸ்ரீ ஆளவந்தாரும் கீதார்த்தஸங்க்ரஹத்தில் ஆரம்பத்திலே "ஸ்வதர்மஜ்ஞானவைராக்யஸாத்யபக்த்யேக கோசர: | நாராயண: பரம் ப்ரஹ்ம கீதா சாஸ்த்ரே ஸமீரித: ||" என்று கண்ணனாயவதரித்த ஸ்ரீமந் நாராயணனே கீதையில் வருணிக்கப்பட்ட பரம் பொருள் என்றருளிச் செய்தார்.

கீதைக்குக் கர்மயோகத்திலே நோக்கு என்கின்றனர் சிலர், சிலர்; ஞானயோகத்திலே நோக்கென்பர். திருவாய் மொழியைப்போல பக்தி சாஸ்த்ரமான கீதையும் ஸாத்யபக்தியைப் பிரதிபாதிக்கிறது என்று நம்பூர்வர்கள் திருவுள்ளம் பற்றினார்கள். எம்பெருமானார் ப்ரபத்தியையும் பக்திக்கு அங்கமாக்கி ஸாதநபக்தியில் நோக்கென்று கீதாபாஷ்யத்தில் நிர்வஹித்தருளினார். நாயனாரும் 'வேதநோபாஸநஸேவாத்யாநாதிகளென்று சொல்லுமது ஸாத்யஸாதந பக்தியாக சாஸ்த்ரஸித்தம்' என்று ஸாதநபக்தி பரமாக கீதா சாஸ்த்ரத்தையும் திருவுள்ளம் பற்றினார். சரமச்லோகம் ஸ்வதந்த்ரமான ப்ரபத்தியை விதிக்கிறது என்னும் ரஹஸ்யார்த்தத்தை கத்யத்ரயத்திலே வெளியிட்டருளினார் எம்பெருமானார்.

கீதைக்கு பலர் பலபாஷ்ய வ்யாக்யைகளைச் செய்திருந்தபோதிலும் நம்பிராமாநுசனருளிச்செய்த பாஷ்யமே கீதாசார்யனின் திருவுள்ளக் கருத்தையுள்ளபடி உரைத்த பாஷ்ய நூலாகும். எல்லா பாஷ்யங்களையும்கூட வைத்துக்கொண்டு பார்ப்பவரினுள்ளத்தில் இக்கருத்து தானே உதிக்கும். ஆனது பற்றியே அமுதனார் "கீதையின் செம்மைப் பொருள்

தெரியப்பாரினில் சொன்ன விராமானுசன்" என்று கொண்டாடுகிறார். ஸ்ரீமத் வேதாந்தாசார்யரும் தாத்பர்ய சந்திரிகையின் உபக்ரமத்திலே இவ்விஷயத்தை குறிப்பிட்டார்.

யதிபரிப்ருடோயத்கீதாநாமதர்சயதஞ்ஜஸா
நிகம்பரிஷந்நேதீயாம்ஸம்நிராமயமாசயம் |
ஜநபதவீ யாதாயாத ச்ரமாபஹராம்தியம்
ஜயது ஸமே தேவ: ஸ்ரீமான் தநஞ்ஜயஸாரதி: ||

வேதாந்தங்களோடு மிகவும் நெருங்கியதாய் நிர்தோஷமான கீதாசார்யனின் திருவுள்ளக் கருத்தை எம்பெருமானார் உள்ளபடியே கீதாபாஷ்யத்திலருளிச் செய்தார் என்று தேசிகன் திருவுள்ளம் பற்றியருளிச் செய்த சுலோகமிது. ஆழ்வார் மூலமாக ஸ்ரீமந்நாத முனிகள் வாயிலாக உபதேச பரம்பராப்ராப்தங்களான கீதையின் செம்மைப் பொருள்களை பரமாசார்யர் ஆளவந்தார் கீதார்த்தஸங்கிரஹத்தில் சேமித்து வைத்தார். ஸங்கிரஹத்தை யடிப்படையாகக் கொண்டு ஸ்வாமியருளிச்செய்த பாஷ்யமாகையால் இதில் செம்மைப் பொருள்கள் குறையின்றிப் பரிபூர்ணமாக மிகவும் விளங்கா நின்றன.

கீதை 3 ஷட்கமாய் 18 அத்யாயங்களைக் கொண்டது (ஷட்கமாவது 6 அத்யாயங்களைக் கொண்ட பாகம்). பார்த்தன் 18 தினங்கள் தரித்து நின்று போர் புரியப் பாங்காகக் கண்ணன் 18 அத்யாயங்களைப் பகர்ந்தனன் போலும். அவாப்தஸமஸ்த காமனான ஸர்வேச்வரனும் ஆசார்யபதத்தை விரும்பியிருப்பன் என்று பெரியோர் பணிப்பர். ஆதலில் பூர்ணமாகக் கீதாசார்யனாக மாயவன் திருவல்லிக்கேணியில் திகழா நிற்கிறான். முதல் ஷட்கம் கர்மகாண்டம் என்றும், நடுவில் ஷட்கம் உபாஸனாகாண்டம் என்றும், கடைசி ஷட்கம் ஞான காண்டம் என்றும் சிலர் கருதினார்கள். முதல் ஷட்கத்திலேயே ஞானயோகத்தைப் பரக்க நிரூபித்திருக்கிறபடியால் அந்திம ஷட்கம் ஞானகாண்டம் என்பதைப் பரமாசார்யர் ஆதரிக்கவில்லை. மேலும் உபாஸநாரூபமான ஞானமே உயர்ந்தது என்று நம் ஸித்தாந்தம். ஆகையால் உபாஸனத்தைக் காட்டிலும் உயர்ந்த ஞானத்தை ப்ரதிபாதிக்கிறது அந்திம ஷட்கம் என்று பிறர் கூறும் கூற்று பொருத்தமற்றது எனத் திருவுள்ளம் பற்றி "பூர்வசேஷோந்திமோதித:" என்று ஸங்க்ரஹத்தில் அருளிச் செய்தார். கடோபநிஷத்தில் 3 வல்லியோடு கூடிய முதல் அத்யாயத்தில் சிதசிதீச்வர தத்வத்ரய விவேகத்தைச் செய்து கர்ம ஞானங்களை அங்கமாகக் கொண்டவுபாஸநாரூப பக்தியோகத்தை மோக்ஷத்திற்கு ஸாதநமாக உபதேசித்து இரண்டாமத்யாயத்தில் கீழ்ச்சொன்ன வர்த்தங்களை விளக்கினாற்போல இங்கும் கீழ் இரண்டு ஷட்கங்களில் சொன்ன வர்த்தங்களை விளக்கி அவைகளுக்கு உபயுக்தமான வற்றையும் காட்டா நின்றது அந்திம ஷட்கம் என்று பரமாசார்யரின் திருவுள்ளம். எம்பெருமானாரும் பரமாசார்யர் பணித்த கட்டளையிலேயே கீதா பாஷ்யத்தில் நிர்வஹித்தருளினார்.

இனி அத்யாயங்களிலுள்ள சில முக்கியமான ஸாரப் பொருள்களுக்கு ஸ்ரீ பாஷ்யகாரரின் திருவுள்ளத்துக்கிணங்க விளக்கம் தருகிறேன்.

முதல் அத்யாயத்திற்கு அர்ஜுநவிஷாத யோகம் என்னும் பேர் வழங்கப்படுகிறது. மோக்ஷோபாயத்திலே யோகசப்தம் ஸ்வரஸமாக ப்ரயோகிக்கத்தகும். அப்படியிருந்தாலும் கண்ணன் யோகங்களை உபதேசிக்கக் காரணமானது பற்றி அர்ஜுனனுடைய விஷாதத்தையும் யோக சப்தத்தாலே உபசரித்துச் சொல்லுகிறது என்று கொள்க. பார்த்தனுக்கு விஷாத முண்டானது இதில் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. துர்யோதனுக்கும் ஒரு விதமான சோகம் உண்டாயிற்று என்று "பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த:ஸர்வ ஏவஹி" என்கிறவிடத்தில் பாஷ்யத்தில் ஸ்வாமி யருளிச் செய்கிறார். "அபர்யாப்தம்" என்கிற ஶ்லோகத்திற்கு ஸ்வரஸமாகக் கிடைக்கக்கூடிய பொருளையே பாஷ்யத்தில் காட்டினார். இவ்விடத்திய பாஷ்யம், "துர்யோதந: ஸ்வயமேவ பீமாபிரக்ஷிதம் பாண்டவாநாம் பலம் ஆத்மீயம் ச பீஷ்மாபிரக்ஷிதம்

பலமபிவிகாங்க்ஷ்ய, ஆத்மவிஜயே தஸ்ய பலஸ்ய பர்யாப்ததாம் ஆசார்யாய நிவேதயாஞ்சகார் விஷண்ணோபவத்'' என்றுள்ளது. இவ்விடத்திய தாத்பர்யசந்திரிகையை ஸேவிக்கவும். துர்போதனன் சோகத்திற்கும் அர்ஜுனன் சோகத்திற்கும் நெடுவாசியுண்டு. ஆஸுரத்தன்மைபடியாக உண்டானது சுயோதனன் சோகம், தைவத்தன்மையடியாகப் பிறந்தது சுவேதனின் சோகம். தைவ சம்பத்தை யுடையவனாய் போகங்களில் விரக்தியுடைய் முமுக்ஷுவானவனே ஆத்மஞானோபதேச ஸத்பாத்ரமாவான். இவது அத்யாயத்தில் அர்ஜுனனுடைய விஷாதத்தைக் காட்டுகிற முகத்தால் கீதோபதேசத்தைப்பெறத் தகுந்த வதிகாரபூர்த்தி நிரூபிக்கப்பட்டதாகிறது.

2-ம் அத்யாயத்தில் ''நத்வேவாஹம் ஜாது நாஸம்'' என்று கண்ணன் உபதேசிக்கத் தொடங்குகிறான். ஓர் அர்ஜுனா! ஸர்வேச்வரனான நான் எப்படி எக்காலத்திலும் உளனோ அப்படியே நியமிக்கத் தகுந்த நீயும் இவ்வரசர்களும் எப்போதும் உளர். ஆகையால் இவர்கள் போரில் அழிவார்களே என்று நீ சோதிக்க வேண்டா என்கிறான். இவ்விடத்தில் கண்ணன் நித்தியமான தன் தன்மையைச் சொல்ல வேண்டியதற்கு ப்ரஸங்கமில்லை. பாஷ்யகாரர் உதாஹரணமாகத் தன்னுடைய தன்மையைச் சொல்லுகிறான் கிருஷ்ணன் என்று நிர்வஹித்தார். தத்துவோபதேசம் பண்ணத் தொடங்கின ஸர்வேச்வரன் கிருஷ்ணன் நான், நீ, இவர்கள் என்று ஜீவர்களுக்குப் பரஸ்பர பேதத்தையும் ஜீவர்களுக்கும் ஈச்வரனான தனக்கு முண்டான பேதத்தையும் குறிக்கிறபடியால் பேதம் ''தர்சநம் பேத ஏவ ச'' என்கிறபடியே உண்மையே; பொய்யன்று எனத் திருவுள்ளம் பற்றுகிறான் என்று மெய்ம்மதிக்கடலான நம் பாஷ்யகாரர் அருளிச் செய்தார்.



ஒரே ப்ரஹ்மமே நாநாஜீவர்களாகத் தோற்றுகிறது என்றும் ஜீவன்முக்தியடைந்தளவில் ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறான் என்னும் வாதங்களை பாறுபாறுக்கினார் பாஷ்யகாரர். அத்வைத மதத்தின்படி கீதோபதேசமே பொருந்தாது. ஏன் என்னில் உபதேசிக்கிற கண்ணனோ தத்துவதர்சி. வேறாகத் தோற்றுவதெல்லாம் பொய்யென்று நன்கு உணர்ந்தவன். அப்படியிருக்கப் பொய்த்தோற்றமானவர்ஜுனனைக் குறித்து எப்படி உபதேசிக்கக் கூடும்? உண்மையெனக் கருதி உபதேசிக்க அதத்துவதர்சியாவான், என்றிப்புடைகளிலே பரக்கப்பேசிப் பரமதத்தை நிரஸித்தருளினார்.

3-ம் அத்யாயத்தில் ஞானயோகத்துக்கு அதிகாரிகளானாலும் சிஷ்டர் என்று பேர்பெற்ற பெரியோர்கள் உலக நன்மைக்காகக் கர்மயோகத்தையே யனுஷ்டிக்கவேண்டும் என்று பகவான் வற்புறுத்துகிறான். பாஷ்யகாரரும் இத்தனையே நிலைநாட்டினார். 'ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்ததே'' என்பதற்குப் பிறர் கூறும் சுவையற்ற பொருளைவிட்டு ''மேலையார் செய்வனகள் வேண்டுவன'' என்கிற நாச்சியார் ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளத்திலே கொண்டு சிஷ்டர்கள் க்ரியைகளை எவ்வளவாக அனுஷ்டிக்கிறார்களோ, அவ்வளவே ஏனையோரும் அனுஷ்டிக்கிறார்கள் என்று பொருள்பணித்தார்.

4-ம் அத்யாயத்தில் கண்ணன், நானே இந்த கர்மயோகத்தைக் கல்பத்தினாதியில் சூரியனுக்கு உபதேசித்தேன் என்பதைக் கேட்டு அர்ஜுனன் பரிப்ரச்நம பண்ணுகிறான். ''அபரம பவதோ ஜந்ம ........த்வமேதத் ப்ரோக்தவானிதி'' என்று (பரிப்ரச்னமாவது கேட்க வேண்டியதை நேராகக் கேட்காமல சுற்றி வளைத்துக் கேட்பது) கண்ணன ஸர்வாந்தர்யாமியாய் உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிபவனாகையால் அர்ஜுனனுடைய வுட்கருத்தை யறிந்து ''பஹூநி மே வ்யதீதாநி'' என்று தொடங்கி ''ஜந்ம கர்ம ச மே திவ்யம்'' என ஹுமளவாக விடை கூறுகிறான்.

அவதார ரஹஸ்ய மென்ன என்று அர்ஜுனன் அறிய விரும்பிக் கேட்டபடி அதாவது அவதாரம் பொய்த்தோற்றமா அல்லது நிஜமானதா, அவதாரத்தில குணங்களுக்கும ஐச்வர்யத்

திற்கும் குறைவு ஏற்படுகிறதா, இல்லையா, அவதாரரூபம் ப்ராக்ருதமானதா அல்லது திவ்யமானதா, அவதாரத்திற்குக் காரணம் யாது, அவதார காலம் எது, அவதாரத்திற்கு ப்ரயோஜனமென்கொல்? இதுகளுக்குப் பதில் சொல்லுகையால் முதலில் பகவான் உன்னுடைய ஜந்மம் போல் என்னுடைய ஜந்மமும் நிஜமானதே என்கிறான். "பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவசார்ஜுந" என்கிற ச்லோகத்தில். மேல் சுலோகங்களில் அவதாரத்திலும் குணைச்வர்யங்களுக்குக் குறைவில்லை. அவதாரரூபம் மாயிகமன்று, திவ்யமானது, அவதாரத்திற்குக் காரணம் இச்சையும் கிருபையுமே, அவதாரத்திற்குக் கால நியதியில்லை. தர்மத்திற்கு வாட்டமும் அதர்மம் தலையெடுப்பும் எப்போதோ அதுவே அவதாரத்திற்குக் காலம், ஸத்புருஷர்களை இரட்சிப்பதும் தர்மத்தை நன்கு நிலை நாட்டுவதுமே முக்கியமான பலன். அவதாரலீலைகளும் திவ்யங்களே என்று கூறி இப்படி அவதார ரகஸ்யத்தை உள்ளபடி யறிந்தவனுக்கு மறுபிறவி கிடையாது. அவன் என்னையே அடைகிறான் என்றும் அருளிச் செய்தான். பிறப்பிலியான நான் பிறக்கச் செய்தே இவர்களும் பிறக்கவேண்டுமோ என்று கண்ணன் திருவுள்ளம் போலும்- அத்வைதமதத்தில் "ஜந்மகர்மச மே திவ்யம்" என்றது எப்படிப் பொருந்துமோ?

5-ம் அத்யாயத்தில் கர்மயோகமே ஞானயோகத்தைக் காட்டிலும் சீக்கிரத்திலேயே ஆத்மஸாக்ஷாத்காரமான யோகத்தை உண்டாக்கும் என்று கர்மயோகத்தின் சிறப்பை எடுத்துரைத்தான்.

6-ம் அத்தியாயத்தில் யோகப்ரஷ்டனுக்கும் நற்கதி நாளடைவில் உண்டு என்று சொல்லி யோகமனுஷ்டிக்கும் க்ரமத்தையும் உபதேசித்துக் கடைசியில் கைவல்யார்த்தியான ஞான யோகியைக காட்டிலும் தன்னையே யடைய வேண்டி பக்தியைச் செய்யும் ஞானியான பக்தி யோகியே சிறந்தவன் என்ற அருளிச் செய்தான். பக்தனைக் காட்டிலும் ஞானியையே சிறந்தவனாக மதிக்கும் மதமானது கண்ணனுடைய திருவுள்ளக் கருத்துக்கு முரண்பட்டதென்பது சொல்லாமலே விளங்குமாயிற்று.

முதல் ஷட்கத்தில் கர்ம யோகத்தையும் ஞான யோகத்தையும் பரக்க உபதேசிக்கிறான். பரமாசார்யர் ஸங்க்ரஹத்தில "கர்மயோகஸ்தபஸ்தீர்த்த தாநயஜ்ஞாதிஸேவநம் | ஜ்ஞாநயோகோ ஜிதஸ்வாந்தை: பரிசுத்தாத்மநி ஸ்திதி: | பக்தியோக: பரைகாந்த்யப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்திதி: ||" என்று மூன்று யோகங்களின் ஸ்வரூபத்தை யுமருளிச் செய்தார். கீதையில் ஸாரமானது நடுவில் ஷட்கம்.

7-ம் அத்யாயத்தில் கண்ணன் தன்னுடைய பெருமைகளைப் பேசி, ஐச்வர்யார்த்தியும், கைவல்யார்த்தியும், தன்னையே அடைய விரும்புமு ஜ்ஞாநியும் தன்னையே உபாஸித்து அவரவர் விரும்பும் பயனையடைகிறார்கள் என்று சொல்லி, இவர்கள் எல்லாரும் உதாரர்களே. இவர்களுக்குள் ஜ்ஞாநி என்னுடைய ஆத்மா- உயிர்நிலை என்றான். வேதாந்தங்கள் எம்பெருமானையே எலலாப் பொருள்கட்கும் ஆத்மாவாகச் சொல்லியிருக்கக் கண்ணன் ஜ்ஞாநி தனக்கு ஆத்மா என்பது எப்படிப் பொருந்தும் என்கிற சங்கை இங்கு எழக் கூடியதே. இதற்குப் பரிஹாரமாகவே கண்ணன் "மே மதம்" என்றான். இவ்விடத்திற்கு பாஷ்யகாரருடைய வியாக்யானம் சுவைமிககது. ஜ்ஞானிகள் தன்னைவிட்டு க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதாப்போலே நானும் அவர்களை விட்டு க்ஷணகாலமும் தரிக்க மாட்டேன். ஆகையால் அவர்கள் எனக்கு ஆத்மா- தாரகர்கள் என்று எம்பெருமானின் திருவுள்ளம் என்று விளக்கியருளினார். இவ்விடத்தில கைவல்யார்த்தியை ஜிஜ்ஞாஸு என்று குறப்பிட்டு பகவானையே அடைய விரும்பும் அதிகாரியை 'ஜ்ஞாநீ" என்று பாஷ்யகாரர் குறிபபிடுகிறார். ஜ்ஞாநீ என்பதற்கு "பகவச் சேஷைகரஸாத்மஸ்வருப வித்" என்று பொருளுரைத்தார். கேவலாதிகாரிக்கு பகவச்சேஷத்வஜ்ஞான மிருந்தும் சேஷத்வத்தில் ரஸம்- ருசியில்லை. பகவத்ஸம்பந்தத்தை இவன் சாணிச்சாறுபோதி தன்னுடைய சுத்திக் குறைப்பாகவே கருதுகிறான். சுக்ருததாரதம்யத்தால்

ஜ்ஞானியோவென்னில் பகவச்சேஷத்வத்திலே ரஸஜ்ஞ: ருசியுடையவனா யிருக்கிறான்' ஆகையால் ஜ்ஞானியே ச்ரேஷ்டன் என்று எம்பெருமானுக்கும் எம்பெருமானாருக்கும் திருவுள்ளம். "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்கிற விடத்திற்கு எல்லாம் வாசுதேவனே. வாசுதேவனைத் தவிர மற்றொன்றில்லை என்று அறிபவனே ஞானி என்றும் பிறர் கூறும் பொருளை அநுவருத்துத் தள்ளி "வாசுதேவனே எனக்கு எல்லாம்" என்றறியும் ஜ்ஞானியே மிகவுமுயர்ந்தவன். இப்படிப்பட்ட வதிகாரி மிகவும் துர்லபன் என்று பகவானே வருந்தப்படுவதாக ரஸவத்தரமாக வியாக்யை யருளிச் செய்தார் எம்பெருமானார்.

8-ம் அத்யாயத்தில் கீழ்ச்சொன்ன மூன்று அதிகாரிகள் பகவானை உபாஸிக்கும் ப்ரகாரத்தையும், அந்திமஸ்ம்ருதியையும், ஐச்வர்யார்த்திக்கு புநராவ்ருத்தி (அதாவது பலத்தை அனுபவித்த பிறகு மறுபடியும் பிறப்பது) யையும், கேவலனுக்கும் பகவானை அடைந்தவனுக்கும் புநராவ்ருத்தி இல்லை என்னுமிடத்தையும் அருளிச்செய்தான் கண்ணன்.

9-ம் அத்யாயத்தில் "மன்மநாபவ மத்பக்த:" என்கிற சுலோகத்தில் பூர்ணமான பக்தி யோகத்தை உபதேசிக்கிறான். இதின் பாஷ்யத்தை சேவிக்குமவர்களுடைய வுள்ளத்தில் ஸ்ரீ பாஷ்யகாரருக்குப் பகவானுடைய திருக்கல்யாண குணங்களிலும் திவ்யமான திருமேனியிலும் எவ்வளவு ஈடுபாடு இருக்கிறதென்பது விளங்கும். பகவான் மநுஷ்யாவதாரத்திலும் தன்னுடைய பரத்வத்தை "மாநுஷீம் தநுமாச்ரிதம் பரம்பாவம்" என்று சுட்டிக்காட்டுகிறான். திண்ணன் வீடு திருவாய்மொழிக்கு இதுவே அடியானது. பகவான் தன்னுடைய பஜனத்தினினிமையை "ஸுஸுகம் கர்த்துமவ்யயம்" என்கிறவிடத்தில் தெரிவித்தான். சுகமாகத் தன்னைப் பக்தர் பஜிப்பதற்கு உறுப்பாகத் தன்னுடைய ஸ்வாராத்யதையையும் பக்தர்களிடம் தாரதம்யம்பாராத ஸமத்வநிலையையும் "பத்ரம் புஷ்பம்" என்கிற சுலோகத்திலும் "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்கிற சுலோகத்திலும் வெளியிட்டருளினான்.

10-ம் அத்யாயத்தில் பகவானுடைய திருக்குணங்களை யநுஸந்திக்க பகவானிடம் பக்தி உண்டாகும் என்றும் விபூதிகளைப் பரக்க அநுஸந்திக்க பக்திவெள்ளம் பெருகும் என்றும் கூறப்படுகிறது. பகவான் தன்னுடைய விபூதிகளை இதில் பரக்கப் புகழ்ந்து பேசுகிறான்.

11-ம் அத்யாயத்தில் அர்ஜுனன் கண்ணனுடைய விச்வருபத்தைக்காணவிரும்பி ப்ரார்த்திக்கக் கண்ணன் கிருபை கூர்ந்து திவ்யமான கண்ணை அவனுக்குக் கொடுத்துத் தன் விச்வருபத்தைக் காட்டியருளினன். மேலும் அவனைக் குறித்து பக்தியினாலேயே என்னை உள்ளபடி அறியவும் காணவும் அடையவும் முடியும் என்றருளிச்செய்தான். வேதாந்தத்தில் ப்ரஹ்மப்ராப்திக்கு சாதனமாகச் சொன்ன ஞானம் பக்தி ருபமான உபாஸநாஜ்ஞானமேயாகும் என்று பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யத்தில் லகுஸித்தாந்தத்தில் நிலைநாட்டி பக்திசம்ப்ரதாயத்திற்கு வழிகாட்டியாக விளங்குகின்றார்.

12-ம் அத்யாயத்தில் அதிகாரிகள் தம்தம் சக்திக்கநுகுணமாக உபாயங்களைப் பற்றும் படியைக் கூறினான்.

13-ம் அத்யாயத்தில் க்ஷேத்ரமென்று நிர்தேசிக்கப்பட்ட தேகத்திற்கும் க்ஷேத்ரஜ்ஞனென்று குறிப்பிடப்பட்ட ஆத்மாவுக்கும் பலபடியாலும் வைலக்ஷண்யத்தை உபபாதித்து க்ஷேத்ரஜ்ஞனும் க்ஷேத்ரமும் தனக்கே சேஷபூதம் என்று நிரூபித்தான். "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம்வித்தி" என்கிறவிடத்தில் அபிசப்தம் க்ஷேத்ரத்தைக் குறிப்பிடுகிறது என்று பாஷ்யத்தில் அருளிச்செய்தார். ஸமாநாதி காரணமாக (அபேதமாக) நிர்தேசிக்கப்பட்டது "ஸர்வம் ஸமாப்நோஷிததோஸிஸர்வ:" என்கிற வசனத்தில் சொல்லுகிற ப்ரகாரம் சரீராத்மபாவத்தாலே

என்றும் நிரூபித்தார். மேலும் இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் அவதாரிகையில் பேதசுருதிகளால் சித், அசித், ஈச்வரன் என மூன்று தத்துவங்கள் தேறுகின்றன என்றும், அந்தர்யாமி ப்ராம்ஹணத்தால் சேதநாசேதநமான ஜகத்துக்குப் ஈச்வரனுக்கும் சரீராத்மபாவம் ஸித்திக்கிறது என்றும், சரீராத்மபாவத்தாலேயே "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "அயமாத்மா ப்ரஹ்ம" இத்யாதிகளில் அநந்யமாக நிர்தேசிக்கப்பட்டிருக்கிறது என்றும் நிரூபித்து சிதசித்தைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மம் ஒன்றுதான் என்று விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலை நாட்டினார்.

14-ம் அத்யாயத்தில் பிரகிருதியின் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களால் சீவனுக்கு ஸம்ஸார பந்தம் ஏற்படும் பிரகாரத்தை நிரூபித்து குணததாலுண்டான பந்தம் தொலைய பக்தியே சிறந்த சாதநம் என்றருளினான்.

15-ம் அத்யாயத்தில் "மந்மநாபவ மத்பக்த." என்கிறவிடத்திலே பஜநீயனைச் சொன்ன தானே புருஷோத்தமன் என்று தன்னுடைய மேன்மையைக் கூறினான். க்ஷரசப்தத்தால் சொல்லப்பட்ட பத்தர்களைக் காட்டிலும் அக்ஷரசப்தத்தால் சொல்லப்பட்ட முக்தர்களைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தவன் நான் என்கிறான் கண்ணன். முக்தாத்மாவும் பிரஹ்மமும் ஒன்றே என்கிற மதத்தில் புருஷோத்தமத்வம் எப்படிக் கூடும் என்பதை ஆராயவேண்டும்.

16-ம் அத்யாயத்தில் தைவாஸுர பேதத்தை நிருபித்து ஆஸுரசம்பத்தான காமக்ரோத லோபங்களை விட்டு ஆஸ்திகனாய் சாஸ்த்ர விதிப்படி நடக்க வேண்டும் அதுவே நலம் தரும் என்றான்.

17-ம் அத்யாயத்தில் ச்ரத்தையுடன் செய்யும் காரியம் தான் பலிக்கும். சாஸ்த்ரீயமான நல்ல காரியங்களிலேயே ச்ரத்தை செய்ய வேண்டும் என்று போதித்தான்.

18-ம் அத்யாயத்தில் ரஜஸ்தமஸ்ஸுக்களைக் கழித்து ஸத்வத்திலே ஒன்றி நின்று ஸாத்விகமான பலனைக் கருதி ஸாத்விகமான உபாயங்களைச் செய்பவனுக்கு நல்ல பலன் கிடைக்கும் என்று நிருபித்தான். கடைசியில் ஈச்வரனே எல்லாரையும் ஆட்டிவைக்கிறான்; ஆதலில் அவனடிகளில் பணிந்து அவன் விதித்த பேக்ஷோபாயத்தைப் பின் பற்றி ஒழுகினால் ஸம்ஸார பந்த நிவ்ருத்தியையும் பரமபதத்தையும் பெறலாம் என்றான் கண்ணன்.

கண்ணன் தன்னையே "ஈச்வரன்" என்று படர்க்கையில் குறிப்பிடுகிறான். மேலே சரமச்லோகத்தில் தன்னையே நேராக சுட்டிக் காட்டி "மாமேகம் சரணம் வ்ரஜ அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச; என்றருளிச்செய்தான். எவனைத் தஞ்சமாகப் பற்றியிருக்கிறானோ அவனுடைய சொற்படியே அவச்யம் அவனைப் பற்றினவன் செய்ய வேண்டும் என்பது தன்னடைவே தேறும். கண்ணனையே தஞ்சமாகப் பற்றின அர்ஜுனன் சரமச்லோகத்தைக் கேட்டுத் தெளிந்து "ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ ! கரிஷ்யே வசநம் தவ" என்று சொல்லி யுத்தம் செய்யத் தயாராய் தனுர்தாரியாய் எழுந்தான். கண்ணனுடைய கிருபையினால் அர்ஜுனனுடைய பக்ஷத்தில்தான் ஜயமென்பது திண்ணம்.

ஸ்ரீ பாஷ்யகாரர் ஜீவனுக்குக் கர்மத்தினால் ஏற்பட்ட பந்தம் பொய்யன்று. ஸம்ஸாரம் பொய் என்று நினைத்தால் அது தொலையாது. எவனுடைய மாயையினால் கட்டுண்டானோ அவனுடைய தாள்களையே தஞ்சமாகப் பற்றி பத்தியைச் செய்தால் தான் அவனின்னருளால் விடுபெற்று வாழலாம் என்று நிருபித்து பக்தி நெறியை கீதா பாஷ்யத்தில் நிலைநாட்டியருளினார். இதுவே கீதா பாஷ்யத்தின் ஸாரமாகும்.

# கத்யத்ரயம்

ஸ்ரீ. உ. வே. தி. அ. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி
ஸ்ரீரங்கம்



**எம்பெருமானார் அருளிய க்ரந்தங்கள் ஒன்பது:** ஸ்வாமி எம்பெருமானாரால் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானம் வாழ்ந்து போவதற்காக, நவரத்தினங்கள் போலவும், நவ நிதிகள் போலவும், ஒன்பது திவ்யக்ரந்தங்கள் அருளிச் செய்யப்பட்டன. இவைகளில் "வேதார்த்த ஸங்க்ரஹம்" என்னும் க்ரந்தம், உபநிஷத் வாக்யங்களுக்கு அர்த்தங்கொள்ளும் முறையைக் காட்டுமது. "ஸ்ரீபாஷ்யம்" "வேதாந்ததீபம்" "வேதாந்தஸாரம்" என்றும் மூன்றுக்ரந்தங்கள் பகவதவதாரமான வேதவ்யாஸர் அருளிய சாரீரக ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு வ்யாக்யானங்களாய் அமைந்தவை. மற்றொன்றான "ஸ்ரீகீதாபாஷ்யம்" என்றும் க்ரந்தம் ஸ்ரீ கீதைக்கு வ்யாக்யானம். "நித்யம்" என்றும் மற்றொருக்ரந்தம், எம்பெருமானை அர்ச்சையில் ஆராதிக்கும் முறையைக் காட்டுவது. எம்பெருமானார் ஸாதித்த ஒன்பதுக்ரந்தங்களில் இனியுள்ள "சரணாகதிகத்யம்" ஸ்ரீரங்ககத்யம்" "ஸ்ரீவைகுண்டகத்யம்" என்கிற மூன்று க்ரந்தங்களும், மந்த்ர ரத்னமான த்வய விவரணமாய் இருக்கும். ஆகையாலேயே இவைகள் மூன்றையும் ஒன்று சேர "கத்யத்ரயம்" என்று ஒரு க்ரந்தம் போலவே வழங்குவர் பெரியோர்.

**ஸம்ப்ரதாயத்தில் சிறந்த அர்த்தம் கொள்ளும் வகை:** நம் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தில் ஓர் அர்த்தம் மிகச்சிறந்ததாகக் கொள்ளப்பட வேணுமேயானால் அந்த அர்த்தம் ரஹஸ்யத்ரயத்தில் காட்டியிருத்தல் வேண்டும். ரஹஸ்யத்ரயமாவது "திருமந்த்ரம்" "த்வயம்" "சரமச்லோகம்" என்கிற மூன்று ரஹஸ்யங்கள்.

**திருமந்திரத்தின் ஸாரார்த்தம்:** இவை மூன்றில் முதலாவதான திருமந்த்ரம் ஜீவாத்மஸ்வரூபத்தை உள்ளபடி காட்டித்தருகிறது. அதாவது ஸகலஜகத்துக்கும், காரணமாய், ஸ்ரிய: பதியாய் ஸர்வரக்ஷகனாயிருக்கும் ஆகாரத்தால் சொல்லப்படும் எம்பெருமானுக்கே, சேஷப்பட்டவன், அறிவை வடிவாக வுடையனாயும் அறிவை குணமாக வுடையனாயுமிருக்கிற மகாரத்தால் சொல்லப்படுபவன் ஜீவாத்மா. "இவன் தனக்குத்தானும் ரக்ஷகனன்று, இவனுக்குப் பிறரும் ரக்ஷகர்களன்று, எம்பெருமானையே, ரக்ஷகனாக உடையவனாகிறான்" என்று நம:பதத்தால் தெரிவிக்கப்படுகிறது. மூன்றாவதான "நாராயணாய" என்னும் பதம், எம்பெருமானை ஸர்வாதார பூதனாய்க் காட்டி அவன் திறத்திலேயே இந்த ஜீவாத்மா ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யங்களையும் அவனுகப்புக்காகவே செய்துபோரக் கடவன் என்னும் பலத்தைக் காட்டுகிறது.

**த்வயத்தின் ஸாரார்த்தம்:** இரண்டாவதான த்வயம் என்னும் ரஹஸ்யம் இரண்டு பாகமாய் அமைந்திருத்தலால் "த்வயம்" (இரண்டு) எனப்பெயர் பெற்றிருக்கிறது. எம்பெருமானை உபாயமாகப் பற்றும் போது பிராட்டியை புருஷகாரமாக முன்னிட்டே பற்ற வேண்டுகையாலே, அம்முறையைக் காட்டுவதாய், "ஸ்ரீயை புருஷ காரமாகக் கொண்டு நாராயணனை உபாயமாகப் பற்றுகிறேன்" என்கிற அர்த்தம் கொண்டதாகிறது பூர்வபாகம்.

உத்தரபாகமோ வென்னில், இந்த எம்பெருமானுடைய உபாயம் எல்லா பலத்தையும் ஸாதித்துக் கொடுப்பதானாலும், என் நிலைக்குச்சேர பிராட்டி எம்பெருமான் இருவருமான சேர்த்தியில் அவர்களை உகக்கும் எல்லா அடிமைகளையும் செய்யப் பெறுவேனாகவேணும், அந்த அடிமையில் "எனக்கு" என்னும் நினைவும் குலையவேணும்" என்றும் அர்த்தத்தைக் கொண்டிருக்கிறது.

**சரமச்லோகத்தின் ஸாரார்த்தம்:** மூன்றுவதான ரஹஸ்யம் "சரமச்லோகம்". இது த்வயத்தின் விவரணமாக பார்க்கப் படுகிறது. அதாவது, எம்பெருமானை உபாயமாகப் பற்றும் வகையையும், பற்றப்பட்ட எம்பெருமான் தன்னையே உபாயமாகப் பற்றினவனுக்குச் செய்யும் கார்யத்தையும் தெளிவுபடுத்துகிறது.

"அப்படி உபாயமாகப் பற்றப்பட்ட எம்பெருமான் தன்னை உபாயமாகப் பற்றின சேதனனுக்கு அடையப்படும் பேறான கைங்கர்யத்தின் இடையூறுகளை அவைகள் தாமே அகன்று போகும்படி செய்கிறான்." என்று த்வயத்தின் உத்தரகண்டார்த்தத்தை சரமச்லோத்தின் உத்தரார்த்தம் நன்கு விளக்குகிறது.

**த்வயமே ப்ரதானம்–இதன் விவரணம் கத்யத்ரயம்:** ஆக, ரஹஸ்யங்கள் மூன்றிலும் எம்பெருமானே "உபாயம் உபேயம்" என்று தேறுவதால் அதனை ஸ்பஷ்டமாகக் காட்டும் த்வயமே மூன்றிலும் ப்ரதானமாகிறது ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு. ஸ்வாமி எம்பெருமானார் மூன்று கத்யங்களாலும் இந்த த்வயத்தையே விவரிக்கிறார். முதல் கத்யம் "சரணாகதி கத்யம்"; இதற்கு "ப்ருது கத்யம்" (பெரியகத்யம்)என்றும் பெயருண்டு. இரண்டாவது ஸ்ரீரங்க கத்யம் இதை "மித கத்யம்" (சின்ன கத்யம்) என்றும் அழைப்பர். மூன்றுவது ஸ்ரீவைகுண்டத்தின் வர்ணனையைக் கொண்டிருப்பதாலே "ஸ்ரீவைகுண்டகத்யம்" எனப் பெயர் பெற்றது.

**கத்யத்ரயம் அவதரித்த விதம்:** கத்யவ்யாக்யானத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி: "இது தான் அவதரித்தபடி எங்ஙனே என்னில்; ஒரு பங்குனி உத்திர நாளிலே பெருமாளும் நாச்சியாருமாகப் புறப்பட்டு ஒருபருளா நிற்குமளவிலே, எம்பெருமானார் எழுந்தருளித் திருவடி தொழா நின்றார், அஸ்யாம் அவஸ்தாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீதி நடையாட, திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கவதுக்குப் பாசுரமிட்டபடி ........ ஆக ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாக கைங்கர்ய ஸித்திக்குப் பெரிய பெருமாள் திருவடிகளிலே சரணம் புகுகிறார்." என்று. பிறகு அது க்ரந்தமாக்கப் பட்டது.

**க்ரந்தமாக்கப் பட்டதற்குக் காரணம்:** இதற்கு முக்ய காரணம் தமக்குப் பின்புள்ளாரும் இதன்படி அநுஷ்டித்து வாழ்ந்து போக வேணுதென்பதே. இதனை பெரியவாச்சான்பிள்ளை தம் மூன்று கத்யவ்யானயாகப்ரவேசத்திலும் காட்டி அருளுகிறார். சரணாகதி கத்ய வ்யாக்யான ப்ரவேசத்திலும்–ஆக இப்படி வேதாந்த ஸித்தமுமாய் ஸ்வரூபப்ராப்தமுமாய், ஆசார்யருசி பரிக்ருஹீதமுமாய் சரண்யஹ்ருதயா நுஸாரியுமாயிருக்கையாலே, பக்தியிலும் இதுவே அநுஷ்டேயமென்னுமிடத்தைத் தம்மை விச்வஸித்திருக்கும் ஸாத்விகர் இழக்கவொண்ணாதென்று பார்த்து, தாமும் பெரியபெருமாளும் அறிந்ததாக அநுஸந்தித்து விட அமைந்திருக்க, தம்முடைய ப்ரமக்ருபையாலே கத்யமுகேந வெளியிடுகிறார். என்றும், இதுபோலவே ஸ்ரீரங்க கத்யவ்யாக்யான ப்ரவேசத்திலும்– இதில், பெரியகத்யத்திலே விஸ்த்ருதமாக அநுஸந்தித்த அர்த்தத்தை- ச்ரோதாக்களுக்கு ஸுக்ரஹமாகவும், பெருமாளுக்குத் திருச்செவிசாத்த ஏகாந்தமாகவும், அந்தத்வயத்தினுடைய அர்த்தத்தைப் பாசுரப்பரப்பறத் திருமுன்பே விண்ணப்பம் செய்யலாம்படி ஸங்க்ரஹேண அருளிச் செய்கிறார் என்றும், அது போலவே ஸ்ரீ வைகுண்ட கத்யவ்யாக்யாந ப்ரவேசத்தில்- பாஷ்யகாரர் தம் திருவுள்ளக் கருத்தில் அறுதியிட்ட அர்த்தம்

பனை நிழல் போல தம் மொருவரளவிலே பர்யவஸிபாதே, கல்பகதருச்சாயை போலே பரோபகாரார்த்தமாக உபாயோபேயங்களை அநுஷ்டிப்பான் என்று பரோபதேஸ ப்ரவ்ருத்தராகிறார் ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே.

பெரிய கத்யத்தில் ஸாமாந்ய பகவத் விஷயமாக அவரை நோக்கி ஸ்வப்ரார்த்தனையாக அருளிச் செய்தார். ஸ்ரீரங்க கத்யத்தில் ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமான பெரிய பெருமாள் விஷயமாக அவரை நோக்கி ஸ்வப்ரார்தனையாக அருளிச் செய்தார். ஸ்ரீவைகுண்ட பரத்வத்துக் கெல்லை நிலமான ஸ்ரீவைகுண்டநாதன் விஷயமாகப் பிறரை நோக்கிக் கர்தவ்யோபதேசம் பண்ணுகிறார்.

**தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தின் சிறந்த ஓர் அர்த்தம் :** ஸ்ரீவைஷ்ணவ தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில் ஓர் அர்த்தம் மிகச் சிறந்ததாகக் கொள்ளப் படடிருக்கிறது. அது எது என்றால் —ப்ரபத்தியை அநுஷ்டிக்க முக்யமாக வேண்டியது அத்யவஸாயம். அதாவது ஊற்றம். அதில்லாமல் போனால் ப்ரபத்திபலியாது. ப்ரபத்திடைப் பற்றி அறிவிக்கும் பிள்ளைலோகாசாரியர், அத்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போஜநம் போலே. என்று அருளிச்செய்கிறார். அதாவது "களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றிருக்கவேணும். அதை ஸம்ஸாரிகளான நாம், பெறவே முடியாது. அது ஆழ்வார்களுக்கும், நம்பூர்வாசார்யர்களுக்குமே உண்டாயிற்று. பக்த்யாத்யுபாயங்களுக்கோ நாம் எவ்விதத்திலும் தகுதியற்றவர்கள். ஆகவே நாம் மோக்ஷமடையும் வகை எது? அது ஆசார்யாபிமானம்தான். இதனை மணவாளமாமுனிகள் தம் உபதேச ரத்தினமாலையில் "ஞானமநுட்டான மிவைநன்றாகவே உடையனான குருவை அடைந்தக்கால், மாநிலத்தீர் தேனார் கமலத் திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்" என்று காட்டியருளினார்.

பிள்ளை உலகாரியரும் ஸ்ரீவசநபூஷண திவ்யக்ரந்தத்தை அருளிச்செய்ததே "ஆசார்யாபிமானமே உத்தாரகம்" என்னும் இவ்வர்த்தத்தைக் காட்டத்தான். அதின் முடிவில் '**பக்தியில் அசக்தனுக்கு ப்ரபத்தி, ப்ரபததியில் அசக்தனுக்கு இது, இது ப்ரதமம் ஸ்வரூபத்தை பல்லவிதமாக்கும், பின்பு புஷ்பிதமாக்கும், அநந்தரம் பலபர்யந்தமாக்கும்.**" என்றருளிச் செய்திருக்கிறார்.

ஞானமநுட்டானமிவை நன்றாகவே உடைய குருவை நாம் எங்குத்தேடிப்போவது? ஆகவே "இந்த ஆசார்யாபிமாநமாகிற உபாயத்தாலும் நாம் கடைத்தேற வகையில்லையே நமக்கு கதியாது?" என்று நாம் கவலைப்படாமல் நமக்கும் மோக்ஷம் அதாவது பகவதநுபவ கைங்கர்யங்கள் நிச்சயமுண்டு என்று மார்பில் கைவைத்து உறங்கலாம். எங்ஙனே என்னில் எம்பெருமானார் விண்ணப்பித்த கத்யத்ரயத்தைக் கேட்ட (அல்லது சரணாகதிகத்யங் கேட்ட) அழகிய மணவாளன் பிராட்டியால் தூண்டப்பட்டு, "வாரீர் எம்பெருமானாரே! இன்று முதல் உமக்கு "உடையவர்" என சிறப்புபெயர் விளங்கட்டும், நீர் செய்த இந்த ப்ரபத்தியையே உம்முடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் ப்ரபத்தியாக்கி நான் அவர்களைக் கைக்கொள்ளுகிறேன்" என்றருளிச் செய்தான்.

இதற்கு ஆதாரம்- சரணாகதிகத்யத்தில் மூந்துற முன்னம் பிராட்டியை புருஷகாரமாக வேண்டிச் சரணம்பற்றுகிறார், எம்பெருமானார். அந்த சரணாகதிக்கு உகந்த பிராட்டியும், இவருக்கு ஓர் 'ப்ரதிவசநம்' அருளிச்செய்கிறாள். "அஸ்துதே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" உமக்கு அப்படியே உண்டாயிடுக. அப்படிப்பட்ட உபாயந் தன்னாலேயே ப்ரபத்தி தொடக்கமாக கைங்கர்யமீறாக நடுவுள்ள தசைகளடைய உண்டாகக்கடவது என்ற; இந்த பாகத்துக்கு வ்யாக்யாநமிடும் ச்ருதப்ரகாசகாசாரியர், ஸ்வஸம்பந்தி ஸம்பந்தி திஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம் — தன் ஸம்பந்தி ஸம்பந்திகளின் மோக்ஷமடைதலும், இங்கு ஸர்வசப்தத்துக்கு அர்த்தம் என அருளிச்செய்கிறார். அதாவது உமது ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் நீர் செய்யும்

இந்த சரணாகதியே மோக்ஷஸாதகமாகட்டும் என்று பிராட்டி அருளிச் செய்ததாகத் தேறுகிறது. ஆகவேதான் எம்பெருமானார் தமது சிஷ்யர்களில் 74 திருநாமங்களை ஸிம்ஹாஸநாதிபதிகளாக ஏற்படுத்தி அவர்கள் பரம்பரையில் வந்தவர்களை நாமும் பரம்பரையாக ஆச்ரயிப்பதன் மூலம் தம் ஸம்பந்தம் பெற வழிவகுத்து வைத்தார்.

ப்ரபத்தியாவது பகவத்ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியில் கை வையாமை இதையே அர்ஜுனனுக்குக் கண்ணன் அருளிச்செய்தான் मामेकं शरणं व्रज; माशुच: (மாமேகம் சரணம் வ்ரஜ - மாசுச:) என்று.

ஸத்வகுணமே வடிவான எம்பெருமானார் இந்தப்ரபத்தியைத்தாமும் கைகொண்டு தம்மைப்பற்றினவர்க்கும் கத்யமுகேன உபதேசித்ததில் வியப்பொன்றுமில்லை.

**எம்பெருமானார் பெற்ற சரமச்லோகார்த்தம் ப்ரபத்தியே** — கீதோபநிஷத்தில் இறுதியில் கண்ணன் அருளிச்செய்த சரமச்லோகத்தின் அர்த்தமாக இந்தப்ரபத்தி சாஸ்த்ரத்தைத் திருக்கோட்டியூர் நம்பியிடம் மிகவும் பரிச்ரமப்பட்டு எம்பெருமானார் பெற்றார். ஸம்ஸாரிகள் படும் துக்கம் கண்டு பொறுக்கமாட்டாதே இந்தச் சீரிய பொருளை ஆசை யுடையோர்க்கெல்லாம் உபதேசித்தார். அந்த ப்ரபத்யர்த்தத்தை கத்யத்தில் அநுஷ்டித்துக் காட்டினார்.

**பக்திக்கு அதிகாரிகள்:** ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்ட ஸாதன பக்திக்கு அதிகாரி நியமமுண்டு. பக்திநிஷ்டன் ஸத்வம் ஓரளவு தலையெடுத்தவன். ரஜஸ் முழுதும் தலைசாயாமல் தமோ குணமில்லாதவன். இவன் ஆத்மாவின் ஜ்ஞாத்ருத்வத்தை ப்ரதானமென்றும் சேஷத்வத்தை அப்ரதானமாகவும் அறிந்தவன். ஆத்மா ஜ்ஞாதா (அறிபவன்) வாகையால் கர்த்தாவுமாக வேண்டும்; கர்த்தா (செய்பவன்) ஆகையால் போக்தா (செய்கைப் பயனுண்பவன்)வும் ஆக வேண்டும் என்றறிபவன். பகவச் சேஷத்வமுமுண்டு என்றிருக்குமவன்.

**பக்தி நிஷ்டருக்கு ப்ரபத்தி ருசியாது;** "தாங்கள் ஒன்றைச் செய்தே பயன் பெற வேண்டும்" என்றே பக்திநிஷ்டர் எண்ணுவதால் ப்ரவ்ருத்தி (முயற்சி) யுடையவர்களாய் இருப்பார்கள். ஒன்றும் செய்யாமல் அவனருளையே எதிர்நோக்கி நிற்கும் ப்ரபத்தி இவர்களுக்கு ருசியாது. ஸ்வப்ரவ்ருத்தர்களான இந்த அதிகாரிகள் வாழ்வதற்காக பக்தி விதிக்கப்பட்டது. பக்திமார்க்கம் இப்படி முயற்சியுடையவர்க்கே என்று ஸ்ரீகீதையில் "த்ரைகுண்ய விஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந" (2-29) என்ற ச்லோகத்திலிருந்து அறியலாம்.

**ப்ரபத்தி ஸர்வாதிகாரம்:** பக்திக்கு வேதமோத அதிகாரம் படைத்த முதல் மூன்று வருணத்தவரே அதிகாரிகள். அப்படியின்றிக்கே ப்ரபத்தி தேச, கால, பல, அதிகாரி நியமங்களின்றிக்கே இருப்பது. (விஷய நியமம் மட்டுமுண்டு; ஸர்வலோக சரண்யனிடமே ப்ரபத்தி பண்ண வேண்டும்). ப்ரபத்தியை யாரும் அநுஷ்டிக்கலாம். அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராஜ மாமுனிவர் யாவரும் வாழும்படி இந்தப்ப்ரபத்தி சாஸ்த்ரத்தை கத்யமுகேன அருளியுள்ள இதுவே நம் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில் மிக்கசீரிய அர்த்தம்.

**எம்பெருமானாரும் கத்யத்ரயமுமே நமக்குத் தஞ்சம்.** பெரிய பெருமாள் தொடங்கி மணவாள மாமுனிகள் பர்யந்தமாகப் பார்க்கப்படும் நம பூர்வாசார்ய பரம்பராஹாரத்தில் நடுநாயகமான ஸ்வாமி எம்பெருமானார், வேதபுருஷனும் ஆழ்வார்களும் நமது பூர்வாசார்யர்களும் தமக்கும் தம்முடையார்க்கும் தஞ்சமாகக் கொண்டு, அநுஷ்டித்து, தம் ஸம்பந்தம் பெற்ற நாமும் வாழ்ந்துபோம்படி, தம் அநுஷ்டானத்துக்கு ப்ரகாசகமாக கத்யத்ரயம் என்னும் இந்தத் திவ்ய க்ரந்தமிட்டு உபகரித்தாராகையாலே, இந்த எம்பெருமானார் ஸம்பந்தமே நமக்கு உத்தாரகம்.

அதாவது நம்மைக் கரை ஏற்றுமது. எம்பெருமானார் உகப்புக்காகவும் ஸ்ரீரங்கநாதன் உகப்புக்காகவும் நம் ஆசார்யன் வழியாக எம்பெருமானார் ஸம்பந்தம் பெற்றிருக்கும் நாம் இந்த கத்யத்ரயத்தை தினமும் அர்த்தத்துடன் அநுஸந்தித்து ஸ்வரூப சிறம் பெறுவோமாக.

நவீன காலத்தில் கிளம்பிய ஒரு ஆக்ஷேபம்: ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதி வேதாந்தக்ரந்தங்களில் பக்தியையே மோக்ஷோபாயமாகப் பரக்கக் காட்டியுள்ள இராமாநுசர், அந்த பக்தியாகிற உபாயத்தை விட்டு எம்பெருமானையே உபாயமாகப் பற்ற வேண்டியுள்ள ப்ரபத்தியை, ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தக்களுக்கு மாறாகக்காட்டி அதைத்தாமும் அநுஷ்டித்துப் போந்ததாக கத்யத்ரயம் என்ற க்ரந்தமிடுகை ஆசார்ய ஸார்வபௌமரான ஒருவர்க்கு அழகாகாது. ஆகையால் கத்யத்ரயம் இவர் க்ருதியன்று என்றும் பிற்பட்டவர் யாரோ பணித்தது என்றும் இதுகைக் கொள்ளத்தகாதது என்றும் சிலர் கூறத்துணிந்துள்ளனர்.

இந்த ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம்: இந்த ஆக்ஷேபம் ஸரியானதன்று. இந்தப்ரக்ருதி மண்டலத்திலுள்ளவர்கள் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களை உடைத்தாயிருக்கின்றனர். இதில் ஸத்வம் தலையெடுத்து மற்ற இரண்டும் தலைசாயப்பெற்றவர்கள் தங்களை எம்பெருமானுக்கே பரதந்த்ரராய், அவனிட்ட வழக்காய், பேற்றுக்கு அவனே உபாயமாகிறான் என்ற உண்மை நிலையை உணர்ந்து ஸ்வப்ரவ்ருத்தியிலே கைவையாமலிருப்பார்கள். இவர்களுக்கு, சாஸ்த்ரம் விதித்த ஸாதன பக்தி (தங்கள் முயற்சியே ப்ராதானமாகக் கொண்ட உபாஸனம்) ருசிக்காது. இத்தகையவருக்கு ஸ்வப்ரவ்ருத்தியைத் தவிர்த்து எம்பெருமானையே உபாயமாக அவன் அருளையே நோக்கி நிற்கும் ப்ரபத்தியை விதித்தது. இதையே கத்யத்ரயத்தில் எம்பெருமானார் வெளியிட்டருளினார். இது ரஹஸ்யமாகப் பேணி உபதேசிக்க வேண்டுவதொன்றாகையால் பாஹ்ய குத்ருஷ்டி நிரஸனத்துக்கு இதைக் கையாளவில்லை.

கத்யத்ரயம் பாஷ்யகாரரால் அருளிச் செய்யப் பட்டது: பரமதநிரஸனத்துக்கும் தத்வங்களை உள்ளபடி அறிவிக்கைக்கும் ப்ரவ்ருத்திபரர் அநுஷ்டிக்கைக்காகவும் ஸ்ரீபாஷ்யத்தை அருளிச்செய்து கேவலம் கருணையாலே யாவரும் வாழ்ந்து போம்படி கத்யத்ரயத்தை அருளிச்செய்தார். மேலும் அவரவர் தேஹ நிலைக்குத் தகுந்தாப்போல வைத்யன் மருந்தும் சிகித்ஸையும் விதிப்பது போலவே சாஸ்த்ரமும் அவரவர் நிலைக்குப்படி சிலருக்கு பக்தியையும் சிலருக்கு ப்ரபத்தியையும் விதித்தது. ஆகவே ஸ்ரீபாஷ்யம், கத்யத்ரயம் இரண்டையும் ஸ்வாமி அருளிச்செய்தது ஒன்றுக்கொன்று முரண்பாடாகாது. நம் பூர்வாசார்யர்களனைவரும் ஒருமுகமாக இதை எம்பெருமானார் க்ருதி என்று அபிமானித்து இதற்கு வ்யாக்யானமருளிச் செய்துள்ளார்கள். மேலும் தாமருளிச் செய்த நித்யத்திலே கத்யத்தில் சொன்னபடி சரணாகதி அநுஷ்டானத்தை விதிக்கிறார் என்பதும் அறியத்தக்கது.

எம்பெருமானார் தர்சனஸ்தரான நமக்கு இந்த கத்யத்ரயமே தஞ்சமான க்ரந்தம் என்றால் மிகையாகாது.

வாழி நம்மிராமாநுசன் பொன்னடி!

Srivatsam



இளையாழ்வாரும் எம்பெருமானாரும் ( ஸ்ரீபெரும்பூதூர் )

This page - space has been donated by a well wisher.



ஸ்ரீ உ. வே. திருமலை நல்லான், ராமகிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி.

This page space has been donated by
Sri U. Ve. S. R. SRINIVASA IYENGAR

ஸ்ரீ:

# நித்ய க்ரந்தம்

ஸ்ரீ. உ. வே. ஆழ்வார்திருநகரி நல்லான் சக்ரவர்த்தி
ராமக்ருஷ்ணய்யங்கார் ஸ்வாமி*

**முன்னுரை:**—நம் ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்துள்ள ஒன்பது க்ரந்தங்களுள் நித்ய க்ரந்தம் என்பது ஒன்று. நித்யமும் (அநுதினமும்) அநுஷ்டிக்க வேண்டிய விஷயங்களை விவரிக்கும் இந்த க்ரந்தம் நித்யக்ரந்தம் என்ற பெயரைப் பெற்றது. இந்த க்ரந்தத்தில் ஸ்வாமி முக்யமாக பகவதாராதனக்ரமத்தை நமக்கு உபதேசிக்கிறார். நாம் நமது ஆசார்யனிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெறும்போது இதைப் பெறுகிறோம். இதை யாகம் (இஜ்யை) என்பர். எம்பெருமானாரை அநுவர்த்தித்து வங்கிபுரத்து நம்பி திருவாராதனக்ரமம் உபதேசமாகப் பெற்று அவரும் ஒரு க்ரந்தமாக ஸாதித்துள்ளார். வடுகநம்பிக்காக உடையவர் நியமனத்தின் பேரில் சரமோபாய நிஷ்டைக்கேற்ப ஆழ்வான் ஒரு நித்யக்ரந்தம் ஸாதித்தாகத் தெரிகிறது. இது இப்போது லுப்தம். பட்டரும் பகவதாராதனக்ரமம் ஒன்று ஸாதித்துள்ளார். தற்காலம் அதிகமாக நம்மிடை அநுஷ்டானத்திலுள்ளது மணவாளமாமுனிகள் ஸாதித்தருளிய ஜீயர்படி என்ற ப்ரயோகமே.

**ஒரு ஐதிஹ்யம்.**—பெரிய திருமொழி (10-7-4) 'ஒளியாவெண்ணெய்' பாசுர வ்யாக்யானத்தில் ஒரு ஐதிஹ்யமருளிச் செய்யப்படுகிறது. "(ஆப்புண்டு) வங்கிபுரத்து நம்பி, பலகாலும் 'திருவாராதனக்ரமமருளிச் செய்யவேணும்' என்று போருமாய், அவஸரஹாநியாலே அருளிச் செய்யாதே போந்தாராய், திருமலையிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, ஆழ்வானுக்கும் நம்பி ஸ்ரீ ஹநுமத்தாஸர்க்கும் அது தன்னை அருளிச் செய்தாராய்ச் சமைந்தவளவிலே நம்பி தோற்ற, திருவுள்ளம் துணுக்கென்றஞ்சி, அப்போதருளிச் செய்தவார்த்தை: "என்றுமுள்ள இச்சம்சயம் தீரப்பெற்றோமாகிறது—'நியாமகன் நியாம்யங்களிலே சிலர்க்கஞ்சிக் கட்டுண்டு அடியுண்டு அழுது நின்றான்' என்றால் இது கூடுமோ? என்றிருந்தோம்; இரண்டு இழவுக்கும் அஞ்சி நோந்தபடியால் அதுவும் கூடும் என்று" என்பதே அவ்வைதிஹ்யம்.

வங்கிபுரத்து நம்பி உடையவரைப் பலகாலும் அநுவர்த்தித்து ஒருரு திருவாராதனக்ரமம் அருளிச் செய்ய வேணும் என்று ப்ரார்த்தித்தும் அவகாசமின்மையால் அவருக்குச் சொல்ல முடியவில்லை உடையவருக்கு. ஒரு ஸமயம் திருமலையில் எழுந்தருளியிருந்த போது ஆழ்வானுக்கும் ஸ்ரீஹநுமத்தாஸர்க்கும் திருவாராதனக்ரமம் அருளிச் செய்வதாக ஆரம்பிக்கையில் அங்கே வங்கிபுரத்து நம்பி வர, உடையவருக்கு மனம் துணுக்கென்றதாம். வங்கிபுரத்து நம்பி பலகாலும் அநுவர்த்தித்துக் கேட்டும் அவருக்குச் சொல்லவில்லை. இப்போது ஆழ்வானுக்கும் ஸ்ரீஹநுமத்தாஸர்க்கும் சொல்லும் போது அவரையும் கூட்டி வைத்துக் கொண்டு சொல்லியிருக்கலாம்; அதுவும் செய்யவில்லை. இரண்டு தவறுகளுக்கும் உடையவர் நொந்து, "பகவான் (பாலக்ருஷ்ணனாக) யசோதையிடம் பயந்தான் என்பது பொருந்துமோ? என்றிருந்தேன்; ஆசார்யனான நான் சிஷ்யரான உம்மிடம் இப்போது மிக பயந்ததால் அதுவும் கூடும் என்று அறிந்தேன்" என்று சொன்னாராம்.

**வைஷ்ணவர்கள் மூன்று வகை:** 'ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டப மார்க்க தாயீ" என்று போற்றப்படும் எம்பெருமானார் ஸ்ரீவிஷ்ணுலோக மணி மண்டபத்துக்குக் காட்டிய மார்க்கம் எது? எனில் அது ப்ரபத்தி என்று சொல்லுவதே பொருத்தமாகும். ப்ரபன்னராகிய நாம் அவர் காட்டிய வழியைப்பற்றி ஒழுகக்கடமைப்பட்டுள்ளோம். பொதுவாக வைஷ்ணவர்கள்

---

* 11-12-77 அன்று திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் ஸாதித்த உபந்யாஸத்தின் ஸாரம். எடுபடுத்தியது டாக்டர் வி. வி. ராமாநுஜம்.

அவரவர் நிலைக்குத் தக்கபடி மூன்று வகைகளில் பேசப்பட்டுள்ளனர்— வைஷ்ணவன், ஏகாந்தி, பரமைகாந்தி என்று.

இவர்களுள் வைஷ்ணவன்; பலன்வேறு, உபாயம்வேறு என்று கொண்டு நாராயணனை உபாஸிப்பவன். இவனுடைய லக்ஷணங்களை

யஸ்து உபாயதயா நித்யம் நித்யநைமித்திகாதிகம் |
ஸத்க்ருத்யம் குருதே விஷ்ணோ: வைஷ்ணவஸ்ஸ உதாஹ்ருத: ||

என்ற ச்லோகம் காட்டுகிறது.

ஏகாந்தி— பகவானே உபாயமும் பலனுமாக ஆகிறான் என்றறிந்து, பகவதாஜ்ஞையான சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டுள்ள நித்ய நைமித்திக கர்மாக்களை அவன் முகமலர்த்திக்காக கைங்கர்யரூபேண செய்யவேணும் என்றிருப்பவன். அநுஷ்டிக்கப்பட்ட கர்மா பகவதாராதன ரூபமாய் அவன் விஷயத்தில் செய்யப்பட்ட வகுத்த கைங்கர்யம் என்றெண்ணும் வைஷ்ணவோத்தமன் இவன்

விஷ்ணோராஜ்ஞா தயா யஸ்து ஸத்க்ருத்யம் குருதே புத: |
ஏகாந்தீதி ஸமுநிபி: ப்ரோச்யதே வைஷ்ணவோத்தம: ||

பரமைகாந்தி எனப்படும் அதிகாரி இவ்விருவரிலும் மேம்பட்டவன். ஏக; அந்த: என்று ஒரே முடிவை (குறிக்கோளை) உடையவன் ஏகாந்தி. அதாவது பகவானே உபாய உபேயம் என்றுள்ளவன். இவனிலும் மேம்பட்டவன் பரமைகாந்தி பகவானை உபாயமாகக் கருதாமல் பலமாகமட்டும் கருதுபவன் இவன். அநுஷ்டிக்கும் கர்மாவை பகவதாஜ்ஞா கைங்கர்யம் என்று செய்வதாக எண்ணாமல் அந்த கைங்கர்யம் போகரூபமாயிருக்கையால் செய்பவன். இவனுக்கு பகவானைத்தவிர வேறு ப்ராப்யமில்லை. பகவத் கைங்கர்யம் பண்ணாமல் தரித்திருக்க முடியாது இந்த அதிகாரிக்கு. பகவான் பரம போக்யனாதலால் கைங்கர்யமும் பரம போக்யமாயிருக்கும்.

யஸ்துபோகதயா விஷ்ணோ: ஸத்க்ருத்யம் குருதே ஸதா |
ஸ ஏவ பரமைகாந்தீ மஹாபாகவதோத்தம: ||

இப்படி வைஷ்ணவன், வைஷ்ணவோத்தமன், மஹாபாகவதோத்தமன் என்று அதிகாரியை மூன்று வகையாகப் பிரித்து, முதல் அதிகாரி விஷயத்தில் நித்ய நைமித்திக கர்மாதி என்று எந்த ஸதாக்ருத்யத்தைச் சொல்லிற்றோ அதை ஏகாந்தி பரமைகாந்தி விஷயத்தில் நித்யநைமித்திகம் என்று விசேஷியாமல் ஸத்க்ருத்யம் என்றே பேசிற்று. இந்த அதிகாரி கைங்கர்ய புத்த்யா எல்லா காரியங்களைச் செய்தாலும் ஸாதநபுத்த்யா ஒரு துரும்பைக் கூட நறுக்குவதில்லை.

இத்தகைய பரமைகாந்திக்கு பகவதாராதனக்ரமத்தைச் சொல்லுகிறேன் என்ற ஸங்கல்பத்துடன் நித்யக்ரந்தத்தை ஆரம்பித்தருளுகிறார் நம் ஸ்வாமி.

நித்யக்ரந்தம் ப்ரபத்யநுஷ்டானம் பிறந்தவனுக்கே। अथ परमैकान्तिनो भगवताराधनप्रयोगं वक्ष्ये । அத பரமைகாந்திநோ பகவதாராதநப்ரயோகம் வக்ஷ்யே என்று முதல்வாக்யம் அமைந்துள்ளது. அத- பிறகு; எதற்குப்பிறகு? சாரீரக சாஸ்த்ரத்தில் अथ (அத) என்ற ஆரம்பத்துக்கு "கர்மவிசாரமான பிறகு" என்று கூறுகிறது ஸ்ரீபாஷ்யம் இங்கு அத என்ற சப்தம், கத்யத்திலே ப்ரபத்தியை அநுஷ்டானபர்யந்தம் உபபாதித்த பின்பு என்று பொருள்படும். இதனால் கத்யம் அருளிச்செய்த பிறகு நித்யக்ரந்தம் அருளிச்செய்யப் பட்டது என்று புலனாகிறது. சரணாகதி நிஷ்டை ஏற்பட்டவனுக்காக இந்த நித்யக்ரந்தம் அருளிச்செய்யப்பட்டது என்றதாயிற்று.

த்யமருளிச் செய்த பிறகு நித்யம் அருளிச்செய்தது என்று க்ரந்த அவதாரக்ரமம்; கத்யங்களும் ஸ்வாமியுடைய க்ருதிகள்தாம் என்றதும் ஊர்ஜிதமாகிறது. (நவீன புலவர்களில் சிலர் பாஷ்யாதிகளில் பக்தியை முக்ய உபாயமாகச் சொன்னவர் ப்ரபத்தியை உபாயமாகச் சொல்லியிருக்கமாட்டார்; ப்ரபத்யநுஷ்டானமும் இவரிடம் இருந்திருக்க முடியாது; கத்யங்கள் பாஷ்யகாரர் க்ருதிகளன்று என்று கூறத்தலைப்பட்டுள்ளனர்) கத்ய ஸ்ரீஸூக்திகள் கொண்டு ப்ரபத்தி பண்ணவேணுமாக ஸ்வாமி இங்கு நியமிக்கிறார் மேலே காண்க.

பரமைகாந்தியின் நித்யாநுஷ்டானக்ரமம்: தினமும் அநுஷ்டானம் பண்ண வேண்டிய க்ரமத்தில் அபிகமநம், உபாதாநம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்று ஐந்து விஷயங்கள் க்ரமமாக கூறப்பட்டன. அபிகமனம் என்பது முதல் கைங்கர்யம் இரண்டாவது பகவத் கைங்கர்யத்துக்குப் பொருள் தேடி ஸித்தப்படுத்துவதான உபாதானம் மூன்றாவது இஜ்யை (திருவாராதனம்). நான்காவது ஸ்வாத்யாயம். சாஸ்த்ர விசாரம், வேதாந்த விசாரம் பகவத் விஷயவிசாரம் முதலியன; கற்றல், கற்பித்தல் முதலியன. ஐந்தாவது யோகம் மனதை ஒருமைப்படுத்தி பகவத்த்யானம் செய்தல். இவைகளும் நித்யக்ரந்தத்தில் ஸூசனமாகக் காட்டப் பட்டுள்ளன. இவை எல்லாம் ஸத்க்ருத்யங்கள்.

ஸ்வாமி க்ரந்தாரம்பத்தில் "பகவதாராதனக்ரமம் வக்ஷ்யே" என்றே ஸங்கல்பம் பண்ணியுள்ளார்; அபிகமநேத்யாதி ஐந்து விஷயங்களைப் பற்றிப் பேச்சே இல்லை ஆயினும் ஸத்துக்கள் "பஞ்சகாலபராயணா:" என்று பேசப்படுவது அறிந்ததே. நித்யக்ரந்தத்தில் இவை எப்படி ஸூசிப்பிக்கப்பட்டுள்ளன? என்பதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். முதலில் ஸ்நானம் பண்ணி அத்துடன் செய்ய வேண்டிய நித்யகர்மாக்களை முடித்துக் கொண்டு அபிகமந ஆராதனத்துக்கு வரவேண்டியவன் பரமைகாந்தி. ஸ்நான பாநாதிகளையும் (பாநமென்பது அபிமந்த்ரித்த தீர்த்தத்தைப் பருகுவது) தேவ, ரிஷி, பித்ரு தர்ப்பணம் இவைகளையும் சொல்லியுள்ளமையால் இவை அநுஷ்டித்த உடன் செய்யும் கைங்கர்யமாய் முதல் ஆராதன ரூபமான அபிகமனமும் பேசப்பட்டு விட்டதாகக் கொள்ளவேணும்.



பகவதாரதனத்திற்கு வேண்டிய தீர்த்தம், கந்தம் (சந்தனம்), புஷ்பம், இதர பூஜாத்ரவ்யங்கள் இவைகளை ஸித்தப்படுத்தி மந்த்ரங்களாலும் தந்த்ரங்களாலும் சுத்திகரித்து உபயோகம் கொள்வதைப் பேசுவதாலே உபாதானம் பேசப்பட்டதாயிற்று. இஜ்யை என்னும் திருவாராதனம் இங்கு பேசப்படும் ப்ரதான விஷயம் ஸ்வாத்யாயம் சரணாகதி, அநுஷ்டானத்தை கத்ய அநுஸந்தான மூலம் விதித்ததனால் பேசப்பட்டதாயிற்று. கத்யத்தை அநுஸந்தித்து "ச ணாபகச்சேத்" என்று நம்மை நியமிக்கிறார் கத்யம் த்வயவிவரணம். "த்வயம் அர்த்தாநுஸந்தாநேநஸஹ ஸதைவம் வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நம்பெருமாள் நியமனமாகக் காட்டித்தந்துள்ளமையால் த்வயத்தின் அர்த்தாநுஸந்தானமான (நம் ஸம்ப்ரதாயத்தில் எல்லா க்ரந்தங்களும் த்வய விவரணங்களே) ஸ்வாத்யாயத்தைப் பேசியாயிற்று. யோகமும், "ஏவம் சரணமுபகம்ய தமேவ பகவந்தம் த்யாயந் ஆஸீத" என்ற நியமனத்தினால் பேசப்பட்டுவிட்டது.

பகவதாரானத்துக்காக ஸ்நானம்: நித்யக்ரந்தத்தில் விடிவோரை எழுந்ததும் முதலில் ஸாத்விகத்யாகம் விதிக்கப்படுகிறது. "எம்பெருமானே தனக்குச்சேஷபூதனான அடியேனைக் கொண்டு தனக்கு ப்ரீதி விளைவிக்கும் கார்யங்களைச் செய்விக்கிறான்" என்று மனதில் கொண்டு அப்படியே அநுஸந்திப்பது. ஸாத்விகத்யாகம் எனப்படும் இதைத் திரும்பத் திரும்ப விதிக்கிறார் ஸ்வாமி பிறகு கைகால் சோதித்துக் கொண்டு மூலமந்த்ரத்தால் (திருவஷ்டாக்ஷரத்தால்) அபிமந்த்ரித்து மண்ணை எடுத்து அதில் ஒரு பாகம் கொண்டு உடம்பை சுத்தப் படுத்திக் கொள்ளுதல். பிறகு ஆசமனம், பகவத்த்யானத்துடன் ப்ராணாயாமம்; மீதியிருக்கும் மண்ணை மூன்றுபாகமாக்கி ஒன்றினால் திக்பந்தனம்; இதற்கு அஸ்த்ரமந்த்ரத்தை அநுஸந்திப்பது (ஸஹஸ்ரோல்காய ஸ்வாஹா; வீர்யாய அஸ்திராய பட்—என்பது அஸ்த்ரமந்த்ரம்); ஒன்றை கங்காதீர்த்தத்துக்கு பீடம் (ஆஸனமாக) ஸமர்ப்பித்து மற்றதை நீரில் சேர்த்து (நாம் அவகா

ஹித்து ஸ்நானம் செய்யும் தீர்த்தம் எதுவாயினும் அதில் மாநஸீகமாய் கங்கையை எழுந்தருளப் பண்ணி அந்த தீர்த்தத்தையே கங்கையாக அபிமானித்து ஸ்நானம் பண்ண வேணும்.) நீரில் மூழ்கி மூச்சடக்கி, முடிந்தவரையில் மூலமந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு நீருக்குள் இருந்து, பிறகு எழுந்துவந்து (உடம்பைத்துடைத்து) வெண்மையான வஸ்த்ரத்தையும் உத்தரீயத்தையும் தரித்து உசிதஸ்தானங்களில் க்ரமமாக அததற்கான மந்த்ர உச்சாரணத்துடன் த்வாதச ஊர்த்த்வ புண்ட்ரங்களைத் தரிப்பது. பிறகு பகவத்த்யானத்துடன் மூலமந்த்ர உச்சாரணத்துடன் தீர்த்தத்தைப் பானம் பண்ணி, ஆசமனம், ப்ரோக்ஷணம், இவைபண்ணி பகவத்பாதாரவிந்தத்தில் விடுவதாக ஒரு உதகாஞ்சலி (அர்க்யம்) ஸமர்ப்பிப்பது. இதற்கடுத்தது ஜலதர்ப்பணம். ஆதாரசக்தி முதல் பரமபதம் வரை படிப்படியாக; பிறகு தேவ, ரிஷி, பித்ருதர்ப்பணம். பிறகு வஸ்த்ரங்களை துவைத்தெடுத்துக்கொண்டு திருவாராதனத்துக்கான திருமஞ்சனத்துடன் யாகபூமிக்குச் (பகவத் ஸந்நிதானத்துக்கு) சென்றடைவது.

எம்பெருமானிடம் கத்யஸ்ரீஸூக்திகள் கொண்டு சரணடைதல்: மறுபடியும் கை கால் சோதித்துக் கொண்டு, சுத்தனாய், நன்றாக அலங்க்ருதனாய், அழகாயும் நிச்சப்தமானதுமாய் உள்ள ப்ரதேசத்தில் (இது பகவான் எழுந்தருளியுள்ள கோவிலாழ்வார் எழுந்தருளப் பண்ணியுள்ள இடம் எப்படி இருக்கவேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது) குரு பரம்பரை மூலம் பரமகுருவான எம்பெருமானை ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் ஸகலவிபூதிகளும் ஸமஸ்த கல்யாண குணங்களுடன் கூடிய ஸ்வரூபனாய் அநுஸந்தித்து அகிலேத்யாதி மந்த்ரபூர்வமாக சரணமடைய வேண்டும்

இங்கு "அகிலேத்யாதிநா" என்றது சரணாகதி கத்யத்தில் பிராட்டியிடம் புருஷகாரப்ரபத்தியான உடன், "அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைக தாந" என்று தொடங்கி, "அநந்ய சரண: த்வத் பாதாரவிந்த யுகலம் சரணமஹம் ப்ரபத்யே" என்று த்வயாநுஸந்தாநத்துடன் முடியும்(5வது) சூர்ணை. தாம் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு சரணம் பற்றும்படி நியமிக்கிறார். ஆகையால் இது இவருக்கு மிகவும் அபிமதம் என்று அறியலாகிறது. தமது அநுஷ்டானத்தையே சிஷ்யர்க்குச் சொல்வது ஆசார்யக்ருத்யம். எம்பெருமானார் சரணாகதி நிஷ்டர் என்பதும் இங்கு தெளிவாகிறது. கத்யம் ஸ்வாமியுடைய க்ருதி என்றும் ஸ்தாபிக்கப் பட்டதாயிற்று. நித்யக்ரந்த முடிவிலும் "பகவந்தம் அஷ்டாங்கேந ப்ரணாமேந ப்ரணம்ய சரணமுபகச்சேத்" என்றும், குறிப்பாக, "சரணாகதிப்ரகாரச்ச பூர்வோக்த:" என்று உணர்த்தி ஸமாப்தி பண்ணுவதும் குறிக்கத்தக்கது

ஸக்ருத் ப்ரணாமம், திருமணிஸேவப்பது விஷயங்கள்: ப்ரஸங்காத், ஸக்ருத்ப்ரணாமமே நித்யக்ரந்தத்தில் விதிக்கப் பட்டுள்ளது; ப்ரதக்ஷிணம் இருமுறை பண்ண வேண்டும் என்று குறிப்பாக விதிக்கிற ஸ்வாமி ப்ரணாமத்தை ஒருமுறையே விதித்துள்ளனர். (இருமுறை செய்யாதே என்று நிஷேதிக்கவில்லை!). திருமணி ஸேவித்தலும் இந்த திருவாரதன ப்ரயோகத்தில் சொல்லப்படவில்லை என்பதும் குறிக்கத்தக்கது. அதைப்பற்றிய ப்ரஸ்தாவமே இல்லை.

திருவாராதனம் என்னும் யாகம்: பெரிய கத்ய (சரணாகதி கத்ய) ஸ்ரீஸூக்திகளை அநுஸந்தித்து எம்பெருமானைச் சரணம் பற்றி அவனருளால் அவனை ஸர்வேச்வரேச்வரனாகவும் ஸர்வஸ்வாமியாகவும், மிகவும் ப்ரியனாகவும், ப்ரத்யக்ஷமாக இருக்குமவனாகவும் த்யானம் பண்ணி, பரமப்ராப்யனும் போக்யனுமான அவனிடம் உண்டான (அநுபவ ஜநித அதிமாத்ரப்ரீதி காரித பரிபூர்ண கைங்கர்யரூப பூஜாம் ஆரபேத) அதிமாத்ரப்ரீதியினால் தூண்டப்பட்டு கைங்கர்ய ரூபமான திருவாராதனத்தைத் தொடங்கவேண்டும்.

திருவாராதனம் தொடங்குமுன், ப்ராக்ருதமான இந்த சரீரம் லயக்ரமத்தில் விடுபட்டதாகவும் அப்ராக்ருதமான பஞ்சோபநிஷன் மயமான சரீரத்துடன் (அவன் கைங்கர்ய யோக்யமானதாய்) அவன் திருவடிகளுக்குக் கீழிருந்து வந்ததாக பாவனை பண்ணி மந்த்ரோச்சாரணத்துடன் அங்கந்யாஸம் செய்வது. பிறகு தன்னை பகவத் ஸ்ரீபாத தீர்த்த தாரையில் ஸ்நானம் செய்து த்வாதச ஊர்த்வபுண்ட்ரங்களைத் தரித்தவனாக த்யானம் பண்ணுவது.

மறுபடியும் ஸாத்விக த்யாகம் பண்ணி திருவாராதனத்துக்கு வேண்டிய ஸாமக்ரியைகளை ஸித்தப்படுத்தி, ஏலாதிலவங்க பரிமளத்துடன் (சுத்தோதகம் தவிர்த்து) தீர்த்தத்தை பாத்ரங்களில் பூரித்து (சுத்தோதகபாத்ரத்தில் நன் நீர் மட்டுமே) சேர்த்து வைப்பது.

மேலே திருவாராதனத்துக்குப் பூர்வாங்கமான ப்ரணாமங்கள். அஸ்மத் குருப்யோ நம: என்று ஆசார்யனை நன்றாக பூஜித்து அவரது மதி கொண்டு பகவதாராதனத்தை ஆரம்பிக்க வேண்டும்.

ஸ்ரீவைகுண்டத்தில் ஆதிசேஷனாகிற ஸிம்ஹாஸனத்தில் புண்டரீகதலாமலாயதாக்ஷனாய், கிரீட மகுட கேயூர ஹார கடகாதி ஸர்வாபரணபூஷிதனாய் ஒரு திருவடியை தொங்கவிட்டு, மற்றதை ஆஸனத்திலே மடித்து வீற்றிருக்குமவனாய், ஒரு திருக்கையை முழங்கால் மேலும் ஒரு திருக்கையை ஆஸனத்தின் மேலும் ஊன்றியவனாய், இரு கைகளில் திருவாழி திருச்சங்கங்களை ஏந்தியவனாய் உள்ள திவ்யமங்கள விக்ரஹத்துடன் எழுந்தருளி திருவாராதானம் கண்டருள வேணும் என்றும் மூல மந்த்ரத்தை அநுஸந்தித்து தண்டன் ஸமர்ப்பித்து, திருவாராதனம் முடியும் வரை ஸாந்நித்யம் பண்ணியருள வேணும் என்றும் யாசிக்கவேணும்.

வலதுபுறத்தில் பெரியபிராட்டியார், இடதுபுறத்தில் பூதேவி, நீளாதேவி இவர்களை ப்ரணாமபூர்வகமாக எழுந்தருளப் பண்ணி (ஆவாஹநம்) ஒவ்வொரு திவ்யாபரணம், ஒவ்வொரு திவ்ய ஆயுதம் (நித்யஸூரிகள் ஆபரணங்களாகவும் திவ்யாயுதங்களாகவும் உள்ளனர்; ஸுதர்சனாழ்வான், பாஞ்சஜன் யாழ்வான் என்பது போலவே ஒவ்வொரு விஷயத்திலும்) இவர்களைத் தனித்தனியே நமஸ்கரித்து, "ஓம் ஸர்வேப்யோ பகவத் பூஷணேப்யோ நம:" என்ற ஸமஷ்டியாய் திவ்யாபரணங்களை தண்டன் ஸமர்ப்பித்து, "ஸர்வேப்யோ பகவத் திவ்யாயுதேப்யோ நம:" என்று தண்டன் ஸமர்ப்பித்து, அநந்த கருட விஷ்வக் ஸேனர் முதலான பரிஜனங்களைத் தனித்தனியாகவும் மொத்தமாகவும் ப்ரணாமம் பண்ணவேணும்.



பிறகு முறையே மந்த்ராஸனம், ஸ்நாநாஸனம் அலங்காராஸனம் இவைகளில் எழுந்தருள ப்ரார்த்தித்து அந்தந்த ஆஸனங்களில் பண்ணவேண்டிய உபசாரங்களை ஸமர்ப்பிப்பது. பிற்கு புஷ்பாஞ்சலி (மந்த்ரபுஷ்பம்). இதன் பிறகு அருளிச்செயலநுஸந்தானம் ("ச்ருதி ஸூக்தை: ஸ்தோத்ரை: ஸ்துத்வா" என்று நியமனம்; அருளிச் செயலநுஸந்தானத்தை இத்தால் நியமிக்கிறார் என்று நம் பூர்வர்கள் இசைந்துள்ளனர்). பிறகு அஷ்டாக்ஷரமந்த்ர ஜபம்.

பிறகு போஜ்யாஸனத்திற்கு எழுந்தருளப் பண்ணி முதலில் பாலமுது கண்டருளப் பண்ணி, பிறகு நெய்சேர்த்த ப்ரஸாதம், வ்யஞ்சனங்கள், பக்ஷணங்கள், பழங்கள் (சாஸ்த்ர விருத்தமான வஸ்து ஸம்பந்தமெதுவுமில்லாதவைகளாக) இவைகளைக் கண்டருளப் பண்ணுவது. இதற்கடுத்து மந்த்ராஸனம் மேலே பர்யங்காஸனத்தில் மாலை திருவாபரணங்களைக் களைந்து விஷ்வக்ஸேனரிடம் ஸமர்ப்பித்து முன் போல ச்ருதிஸூக்தமான ஸ்தோத்ரங்களை விண்ணப்பித்து ஸாத்விகத்யாகம் பண்ணி பால், பழம் கண்டருளப்பண்ணி தண்டன் ஸமர்ப்பிப்பது. (பகவந்தம் அஷ்டாங்கேன ப்ரணாமேந ப்ரணம்ய சரணமுபகச்சேத்; சரணாகதிப்ரகாரச்ச பூர்வோக்த:)

அநுயாகம்: பகவதாராதனத்தை முடித்து, அதிதிஸத்காரத்துடன் பெருமாளமுது செய்த ப்ரஸாதத்தை ஸ்வீகரிப்பது அநுயாகம் எனப்படும். இதுவும் பகவதாராதனத்தில் சேர்ந்ததே.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

# எதிகட்கிறைவனும் எதிராஜனும்

(முதற்பகுதி)

பேராசிரியர் Dr. V. V. ராமாநுஜம்,

யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தாzசேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமிதம் ॥
பரம்ப்ரஹ்மைவாஜ்ஞம் ப்ரமபரிகதம் ஸம்ஸாதிதத்
பரோபாத்யலீடம் விவசமசுபமஸ்யாஸ்பதமிதி ।
ச்ருதிந்யாயபேதம் ஜகதிவிதிதம் மோஹநமிதம்
தமோயேநாபாஸ்தம் ஸஹி விஜயதே யாமுநமுநி ॥

''எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம் கதி பெற்றுடைய இராமாநுசன்'' என்று திருவரங்கத்தமுதனார் எதிராஜனான ராமாநுஜரைத் தமது நூற்றந்தாதியில் போற்றுகிறார். ஸத்ஸம்ப்ரதாயத்தில் ஆளவந்தார் என்று அழைக்கப்படும் பரமாசார்யரே யமுனைத்துறைவன் என்றும் யாமுநமுனி என்றும் மேலே காட்டிய ச்லோகத்திலும் பாசுரத்திலும் குறிக்கப்படுகிறார். ராமாநுஜர் தம்முடைய வாழ்நாளில் இவரை நேரில் ஸேவித்து அநுபவிக்கும்படி பகவத்ஸங்கல்பம் அமையவில்லை. முதன்முறை இவரைத் தரிசிக்கவேண்டுமென்று பெரியநம்பியுடன் ஸ்ரீரங்கம் அடைந்தபோது இவர் பரமபதமடைந்து, இவருடைய விமலசரம விக்ரஹத்தை (*ஜீவன் பிரிந்த சரீரம்*) மட்டுமே காவேரிக் கரையில் ஸேவிக்க வாய்த்தது திருமேனியை ஸேவிக்கையில் ஒரு கையில் மூன்று விரல்கள் முடங்கியிருக்கக்கண்டு விசாரிக்கையில், அவருக்குமூன்று காரியங்கள் செய்யவேணுமென்ற பாரிப்பு இருந்ததாகவும் அவைகளைச் செய்து முடிக்காததால் ஏற்பட்ட குறையினால் விரல்கள் முடங்கியிருக்கலாம் என்று அங்குள்ளார் தெரிவிக்க, ராமாநுசர் அவ்வாசார்யர் அருள் தமக்குக் கிட்டுமானால் அவற்றைத்தாம் தலைக்கட்டி முடிப்பதாக சபதம் செய்ய, யாமுனருடைய விரல்கள் நிமிர்ந்தனவாம். இந்த முக்குறைகளிலொன்று சாரீரக சாஸ்த்ரத்துக்கு போதாயனர் முதலான பூர்வர்களைத்தழுவி பாஷ்யமருளிச் செய்தல். இதைத்தம் முக்கியமான பணியாக ராமாநுஜர் மேற்கொண்டார். ஆளவந்தாரின் ஐந்து முக்கிய சீடர்களிடம் அடிபணிந்து ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும், பாகவத நெறியின் பலசீரிய பொருள்களையும் அறிந்தார் என்று குருபரம்பரை நூல்கள் கூறுகின்றன. இந்த ஆசார்யர்களிடம் வடமொழி வேதாந்தம் வாசித்ததாக எந்த நூலும் கூறவில்லை.

இளையாழ்வாரான நிலையில் ராமாநுஜர் யாதவப்ரகாசனுடைய வேதாந்தப் பள்ளியில் மாணாக்கராக வாசித்துக் கொண்டிருந்தபோது இவரைப்பற்றிக் கேள்வியுற்ற ஆளவந்தார், இவரைக் காணவென்று கச்சியம்பதிக்கு எழுந்தருளினார். கச்சி வையமாளிகையில் தேவப்பெருமாளைத் திருவடி தொழுது வெளிச்சுற்றில் விற்றிருந்தபோது இளையாழ்வார் யாதவனுடைய சிஷ்யர்கள் குழாத்தில் ஒருவராய் வர, திருக்கச்சி நம்பி காட்டக்கண்டு, ''ஆமுதல்வன் இவன்'' என்று குளிர கடாக்ஷித்து அநுக்ரஹித்தார். திருவாய்மொழி 7—9—3 'ஆமுதல்வன்' பாசுரத்து ஈட்டில், ''திருப்புற்றுக்குக் கீழே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபாநத்திலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க உடையவர் திருப்புற்றுக்குக்குக் கிழக்காக எழுந்தருளியிருக்க உடையவரைக்கண்டு, 'ஆமுதல்வன் இவன்' என்று அருளிச்செய்தாராம்'' என்று அருளிச்செய்யப்பட்டுள்ளது காண்க. 'திருக்கச்சி நம்பிக்கு ஆப்தரான இளையாழ்வாரை அப்போதே அழைத்து உரையாடி ஏன் தம் சீடராக ஆக்கிக்கொள்ளவில்லை?'' என்ற கேள்வி எழுகிறது. அதிபால்யராய் இருந்த இளையாழ்வாரை அப்போது திருவரங்கத்துக்கு அனுப்ப தேவப்பெருமாளுக்குத் திருவுள்ளமிசையவில்லை என்றே கொள்ளவேண்டும்.

ஆளவந்தாரும், அப்போது இளையாழ்வாருடன் அளவளாவ வாய்ப்பில்லாமல் "இவரைத் தர்சனப்ரவர்த்தகராக உருவாகும்படி அநுக்ரஹிக்க வேணும்" என்று தேவப்பெருமாளைச் சரணம் புகுந்து வேண்டிக்கொண்டு திருவரங்கமே சென்றடைந்தார். இதன் பிறகே ஆளவந்தாரைப் பற்றிக் கேள்வியுற்று இளையாழ்வார் அவரைக்காணச் சென்று, திருமேனியை மட்டுமே ஸேவித்துத் திரும்பியது. இதன்பின்னர் அந்த பரமாசார்யரிடம் இவருக்கு பக்தி வளர்ந்து வந்தது. "ஆளவந்தாருக்கு நாம் ஏகலவ்யன் அன்றோ?" என்றும், "ஆளவந்தாருடன் ஒரு நாளாகிலும் கூடி இருந்தேனாகில் பரம பதத்துக்குச் சுருளும்படியும் கட்டியிருப்பேன்" என்றும் ஸ்வாமி அருளிச்செய்ததாக ஐதிஹ்யமுண்டு. ஆளவந்தார் விஷயமாக நாமநுஸந்திக்கும் "யத்பதாம்போருஹத்யாந" தனியன் ஸ்வாமி ஸாதித்ததே.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டும் வடமொழி நூலான ஸ்ரீபாஷ்யமே பகவத் ராமாநுஜருடைய மிகமுக்கியமான க்ரந்தமாகும். இந்த திவ்யக்ரந்தத்தின் அருமைபெருமைகளைக்கண்டே காச்மீரத்தில் சாரதாதேவியார் இதை ஸ்ரீபாஷ்யம் என்றும், இதை எழுதிய நம் ஸ்வாமியை பாஷ்யகாரர் என்றும் கொண்டாடினாள். ஸ்ரீ பாஷ்யம் பெரும்பாலும் வடமொழி வேத வேதாங்கங்களையே ப்ரமாணமாகக் கொண்டு அருளிச் செய்யப்பட்டது. பூர்வபக்ஷ (அத்வைதம் முதலியன) வேதாந்தத்தை மட்டும் ஸ்வாமி யாதவப்ரகாசனிடம் பயின்றார். அப்போதே ச்ருதி வாக்யங்களுக்குப் பொருள் கொள்ளும் விஷயத்தில் பல இடங்களில் சீடர் குருவிடம் பிணங்கி வேறு பொருள் கொண்டமையால் குருவைவிட்டு விலகும்படியாயிற்று.

ஸ்ரீ பாஷ்யத்தில் எம்பெருமானார் காட்டியுள்ள அர்த்தங்கள் முற்றும் புதியவையல்ல. இந்த ஸித்தாந்தம் அநாதியாக வந்ததே. வ்யாஸ்பகவானின் ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு போதாயன முனிவர் என்ற மஹரிஷி "வ்ருத்திக்ரந்தம்" என்ற பேருரை ஒன்றை இயற்றி இருந்தார். இவ்வர்த்தங்களை டங்கர், த்ரமிடர், குஹதேவர் முதலான ஆசார்யர்களும் சுருக்கமாக க்ரந்தரூபமாக வெளியிட்டிருந்தனர். ராமாநுஜர் கூரத்தாழ்வானுடைய துணை கொண்டு காச்மீரம் சென்று போதாயனவ்ருத்தியை அங்கேயே வாசித்து அதில் கூறியுள்ள உண்மைகளை அறிந்து வந்தார். ஆளவந்தாருக்கு "ஏகலவ்யனாய்" இருந்து அவருடைய க்ரந்தங்களைத் தாமே பயின்றார் என்றே கொள்ளவேண்டியுள்ளது.

நம் ஸ்வாமி ராமாநுஜர் அருளிச்செய்த முதல் நூல் வேதார்த்தஸங்க்ரஹம் என்பது. முக்கியமான வேதவாக்யங்களுக்கு விசிஷ்டாத்வைத அடிப்படையில் பொருளை ஸ்வாமி இதில் கூறியுள்ளனர். இந்த க்ரந்தம் இவரால் ஸ்வதந்த்ரமாக அருளிச்செய்யப்பட்டது. திருமலைக்கு முதன் முதலாகச் சென்றபோது திருவேங்கடமுடையான் திருமுன்பே இந்தக்ரந்தத்தை அவனே திருச்செவி சாய்க்க, உபந்யாஸமாய் வெளியிட்டார். இதற்கடுத்து வேதாந்த ஸாரம் என்ற சுருக்கமான ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானத்தை அருளிச்செய்தார். பின்னர் போதாயன வ்ருத்தியை ஸேவித்து, அதிலுள்ள கருத்துக்களை உட்கொண்டு ஸ்ரீ பாஷ்யத்தையும் அதன் சுருக்கமான வேதாந்த தீபத்தையும் அருளிச்செய்தார் என்பது வரலாறு.

வேதார்த்த ஸங்க்ரஹம், வேதாந்த ஸாரம், ஸ்ரீ பாஷ்யம், வேதாந்த தீபம் இவை விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டும் க்ரந்தங்கள். இந்த ஸித்தாந்தமே மாயன் அன்று தெய்வத் தேரினின்றும் செப்பிய கீதோபநிஷத்திலும் பேசப்பட்டுள்ளது என்பதை ஸ்தாபிக்க கீதாபாஷ்யத்தை அருளிச்செய்தார். இவை தவிர கத்யத்ரயம் (சரணாகதி கத்யம், ஸ்ரீ ரங்க கத்யம், ஸ்ரீ வைகுண்ட கத்யம்) என்ற மூன்று கத்யங்களும், நித்யக்ரந்தம் என்ற பகவதாராதன க்ரமமும் ராமாநுஜ முனிவரால் அருளிச்செய்யப்பட்டுள்ளன இவை மொத்தம் ஒன்பது க்ரந்தங்கள் ஆகும்.

ஆளவந்தாருக்கு "ஏகலவ்யனாக" இருந்து அவரநுக்ரஹ விசேஷத்தினாலேயே ராமாநுஜர் கற்றறிந்தவை யாவை? அந்த க்ரந்தங்கில் உள்ள விஷயங்கள் என்ன? ஆளவந்தாருடைய

ஸ்ரீ ஸூக்திகள் எதை எதை அடிப்படையாகக் கொண்டு எந்த எந்த பகவத் ராமாநுஜ ஸூக்திகள் அவதரித்துள்ளன என்று ஆராய்வோம். நமக்கு இப்போது ஆளவந்தாருடைய திவ்யஸூக்திகள் எல்லாம் பூர்த்தியாகக் கிடைக்கவில்லையாயினும் எம்பெருமானாருக்கு அவை பூர்ணமாகக் கிடைத்தே இருக்கவேண்டும். இப்போது நாம் அநுபவிக்கக் கிடைத்துள்ளவை சதுச்லோகீ என்ற ஸ்ரீஸ்துதி, ஸ்தோத்ரரத்நம், கீதார்த்த ஸங்க்ரஹம், ஆகமப்ராமாண்யம், ஸித்தித்ரயம் (ஆத்மஸித்தி, ஈச்வரஸித்தி, ஸம்வித்ஸித்தி என்ற மூன்று பிரிவுகள்—இவை பூர்த்தியாக நமக்கு கிடைக்கவில்லை) என்பவை. புருஷநிர்ணயம் என்ற நூலிலிருந்து ஆசார்யர்கள் ப்ரமாணங்களாகக் காட்டும் மேற்கோள்களை நாம் காணமுடிகிறது. இந்த க்ரந்தம் லுப்தமாய்விட்டது.

இவைகளில் புருஷநிர்ணயம், நாராயணனே பரம்பொருள்—பரப்ரஹ்மம்—பரதத்வம் என்று உபநிஷத்துக்கள், ஸ்ரீ விஷ்ணு புராணம் போன்ற ஸாத்விக புராணங்கள், மற்றும் பகவத் கீதை போன்ற ப்ரமாணங்களையும் கொண்டு ஸ்தாபிப்பதற்காக அருளிச்செய்யப் பட்டது என்று தெரிகிறது

ஆகமப்ராமாண்யம் என்பது பாஞ்சராத்ர ஆகமங்கள் வேதங்களோடு ஒக்க ப்ரமாணமாகக் கொள்ளத்தகுந்தவை என்று ஸ்தாபிப்பது. ஆளவந்தாருக்கு முந்தியவர்களான குமரில பட்டர் என்ற மீமாம்ஸகர், இந்த ஆகமங்கள் வேதங்களுக்குப் புறம்பானவை (பாஹ்யம்) என்றும், ஆதிசங்கரர் இவை வேதத்துடன் முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டவை என்றும் சொல்லி வைத்தனர். பகவானான வாஸுதேவன் வாயிலாக வந்த க்ரந்தங்கள் இவை; வேதக்கருத்துகளுக்கு ஒத்த கருத்துக்களையே இவைகளும் பகர்கின்றன; வேதத்தைப் போலவே ப்ரமாணங்களாகக் கொள்ளத் தக்கவை என்பதை இந்நூலில் பரமாசாரியர் நிலை நாட்டியுள்ளார்.

ஸித்தித்ரயம் முன் சொன்னபடி மூன்று நூல்கள் கொண்டதாகும். ஸ்ரீபாஷ்யம் இந்நூலை ஆதாரமாகக் கொண்டே ஸாதிக்கப்பட்டுள்ளது. ஒரு விஷயத்தை ஆழ்ந்த ஆராய்ந்து காணும் முடிவு ஸித்தாந்தம் அல்லது ஸித்தியாகும். இஷ்டஸித்தி முதலான நூல்கள் பிற ஸித்தாந்திகளால் முன்னமே செய்யப்பட்டிருந்தன. இந்த நூல்களில் பூர்வபக்ஷிகள் (பூர்வ பக்ஷம் என்பது மற்ற மதஸ்தவர்கள் ஏற்கனவே சொல்லி வைத்துள்ளவை. இவைகளைத் தவறு என்று கண்டித்து, உண்மைப் பொருளை நிலைபெறச் செய்வது ஸித்தாந்தம்) சொல்லும் வாதங்கள், யுக்திகள், பிரமாண விளக்கங்கள் இவைகளை ஆராய்ந்து அவை எப்படித் தவறானவை என்று காட்டி, தாம் காணும் முடிவுகள் தான் சரியானவை என்று ஸ்தாபிக்கிறார் ஆளவந்தார். இவர் கண்டுள்ள முடிவுகளையே ராமாநுசர் பின்பற்றுகிறார்.

ஆத்மஸித்தியில் ஆத்மதத்வம் ஆராயப்படுகிறது. இங்கு காணப்படும் மங்கள ச்லோகம் :

> ப்ரச்ருதி புருஷ காலவ்யக்தமுக்தாயதிச்சாமநுவிததநித்யம் நித்ரஸித்தைரநேகை: |
> ஸ்வபரிசரணபோகை : ஸ்ரீமதிப்ரீயமாணே பவதுமமபரஸ்மிந் பூருஷே பக்திபூமா ||

இது "அகிலபுவனஜன்ம" என்ற ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகத்தை நினைவூட்டும். பரமாசாரியர் திருமகள்கேள்வனான எம்பெருமானிடம் மேலான பக்தியை ப்ரார்த்திக்கிறார் இதில். புருஷோத்தமனான ஈச்வரன் நித்யமான ஸ்ரீஸம்பந்தமுடையவன்; ஸகல சேதனவஸ்துக்களும் ப்ரக்ருதி ப்ராக்ருதமான அசேதனங்களும் அவனிச்சையடியாக இயங்கும்; அவன் ஸதா நித்யர்களால் சூழப்பட்டு அவர்களிடம் கைங்கர்யம் கொள்கிறான் என்று ஈச்வரஸ்வரூபம் தெளிவாகிறது இந்த ச்லோகத்தினால்.

ஆத்மாவைப் பற்றிய ஸித்தாந்தம் வருமாறு :

தேஹேந்த்ரியமந: ப்ராணதீப்யோந்யோநந்ய ஸாதந: |
நித்யோவ்யாபீ ப்ரதி க்ஷேத்ரமாத்மா பிந்ந: ஸ்வதஸ்ஸுகீ ||

ஆத்மாவானவன் சரீரம், இந்த்ரியங்கள், மநஸ், ப்ராணன், புத்தி இவைகளினின்றும் வேறுபட்டவனாய், ஸ்வயம் ப்ரகாசனாய், அணுவாய், ஞானமுள்ளவனாய், ஆநந்தானுபவமுள்ளவனாயுள்ளவன். இப்படிப்பட்ட ஆத்மாக்கள் அனேகம் என்பது ஆத்மஸித்தியில் கண்ட பொருள்.

ஈச்வரஸித்திக்குக் குறிக்கோள், ஸகல பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் எல்லாம் ஈச்வராதீனம் என்று ஸ்தாபிப்பதே. இதற்காக ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தனும் ஸத்யஸங்கல்பனுமான ஈச்வரன் ஒருவன் உளன் என்று ஸ்தாபிக்க வேண்டியுள்ளது ஸ்ரீபாஷ்யத்தில் சாஸ்த்ரயோநித்வ அதிகரணத்தில் ஈச்வரஸித்தி பங்க்திகளைக் காணலாம். ஆளவந்தார் இதில் ஸித்தாந்தமாக அருளிச் செய்திருக்கவேண்டிய பங்க்திகள் காணாமல் போய் விட்டன. தற்சமயம் நம்மிடம் விளங்கும் ஈச்வரஸித்தியின் முடிவில்

ஏகப்ரதாநபுருஷம் விவாதாத்யாஸிதம் ஜகத் |
சேதநாசேதநாத்மத்வாத் ஏகராஜகதேசவத் ||

என்ற ச்லோகம் காண்கிறது. உபய விபூதியிலுள்ள எல்லா ஜீவராசிகளும், அதிகாரிவர்க்கமான தேவர்களும் ராஜாதி ராஜனான ஸ்ரீமந் நாராயணனுடைய ரக்ஷணத்தில் இடர்படாமல் வாழ்கின்றனர் என்று எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை விளக்கியுள்ளார். ஜகத்காரண வஸ்துவாய் எல்லாவித கர்மாக்களாலும் இவனே பூசிக்கப்படுமவனாய், எல்லா பலன்களுக்கும் மூலமாய் இருக்கும் பரம புருஷனை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்கையாலே அவச்யம் ஒப்புக் கொள்ள வேணும் என்று நிரூபணம் பண்ணியருளுகிறார்,

ஸம்வித்ஸித்தியில் முக்யமாக கேவல அத்வைதக் கொள்கையை அழித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை பரமாசாரியர் நிலைநாட்டுகிறார். உள்ள (ஸத்) பொருள் ஒன்றுதான்; பலவன்று. ஞானம் (அறிவு), ஜ்ஞாதா (அறிபவன்), ஜ்ஞேயம் (அறியப்படுவது) என்றும் வெவ்வேறு கிடையாது. ஜ்ஞானம் ஒன்றேயுள்ளது என் அத்வைதிகள் கூறுவதை இங்கு கண்டிக்கிறார். சித், அசித், ஈச்வரன் என்று மூன்று தத்வங்களை அவச்யம் ஒப்புக்கொள்ள வேண்டும். அதேபோல் ஜ்ஞானம், ஜ்ஞாதா, ஜ்ஞேயம் என்று வேறுபட்ட தத்வங்களையும் ஒப்புக் கொள்ளவேண்டும். "ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்மா" என்றால் ப்ரஹ்மம்தான் உண்டு; மற்றது எதுவுமே கிடையாது; காணப்படுவது எல்லாம் மித்யை (பொய்யானவை) என்பது மிகத்தவறு. எம்பெருமான் மிக ஸௌந்தர்யமுள்ள ரூபமுள்ளவன்; எல்லாவிதமான நற்குணங்களுக்கும் இருப்பிடம்; எல்லாவுலகங்களும், எல்லாசேதனர்களும் அவனுடையவை; இப்படிப் பல பல பெருமைகள் படைத்தவன்; எல்லாமறிந்தவன்; எதையும் ஸாதிக்கவல்ல வல்லமை படைத்தவன் (பரா அஸ்ய சக்தி: விவிதைவ ச்ரூயதே) ஒத்தாரும் மிக்காரும் இல்லாமையால் அத்விதீயன் (நதத்ஸமச்ச அப்யதிகச்ச ச்ரூயதே) இவன்போல் இன்னொன்றில்லையாதலால் இரண்டாவதில்லாதவன் (அத்விதீயன்) எனப்பட்டான். பரப்ரஹ்மத்தை அவித்யை தீண்டுவதால் பலவிதத் தோற்றங்கள் உண்டாகின்றன என்பதைத் தீவிரமாகக் கண்டித்தொழிக்கிறார் ஆசார்யர்.

'மாயாவாத புஜங்கபங்க கருடஸ்த்ரைவித்ய சூடாமணி!" என்று போற்றப்படும் இராமானுசன் யஜ்ஞமூர்த்தி என்ற ப்ரபல அத்வைத வித்வானை ஆளவந்தாருடைய ஆத்மஸித்தி ஸம்வித்ஸித்தி ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு வாதில் வென்று அருளாளப் பெருமாளை பெருமானாராக்கிப் பணி கொண்டது ப்ரஸித்தமான சரித்திரம். ஆளவந்தாருடைய

ஸித்தித்ரயமே ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யத்துக்கு வித்தாகும். ஆளவந்தார் காட்டிய வழியைப் பின்பற்றி விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை விரித்துரைத்து நன்றாக நிலைநாட்டினார் பாஷ்யகாரர். ஸித்தித்ரயத்தை இவர் எந்த ஆசார்யரிடமும் காலக்ஷேபமாகக் கேட்கவில்லை. ஆளவந்தாருக்கு "ஏகலவ்யனா"யிருந்து நேரே க்ரஹித்தார் என்ன வேண்டும். தமது வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முதலிலும் கீதாபாஷ்யத்தின் முதலிலும் யாமுன முனியை அடிபணிவதாக ச்லோகங்கள் அருளிச் செய்துள்ளவைகளை இக்கட்டுரையின் முகப்பில் காண்க. அப்படியே ஸ்ரீவைகுண்டகத்ய ஆரம்பத்திலும் காண்க.

யாமுனார்ய ஸுதாம்போதி ஆவகாஹ்ய யதாமதி |
ஆதாய பக்தியோகாக்யம் ரத்நம் ஸந்தர்சயாம்யஹம் ||

என்று பக்தியோகத்தைத் தாமறிந்து ப்ரகாசப்படுத்துவது ஆளவந்தாருடைய அநுக்ரஹத்தால்தான் என்று அருளிச்செய்கிறார். இங்கு பக்தியோகம் என்பது ப்ரபத்தியையே. இந்த கத்யத்திலேயே "த்வத்பாதாம்புஜத்வயப்ரபத்தே: அந்யத் நமே ஸாதநமஸ்தி" என்றருளிச் செய்துள்ளதை நோக்குக.

சதுச்லோகீ என்பது பெரிய பிராட்டியாரின் பெருமைகளைப் பேசும் நான்கு ச்லோகங்கள் கொண்ட ஸ்துதி. எம்பெருமானைவிட்டு எப்போதும் பிரியாமல் நித்யமாகச் சேர்ந்தே இருப்பதால் வந்துள்ள ஒப்பற்ற பெருமைகளைப்பேசி, "பிராட்டி புருஷகாரபூதையாக எப்போதும் எம்பெருமானுடன் இருக்கையில் நம்பிழைகளுக்கஞ்சி நாம் அவனிடமிருந்து விலகவேண்டாம் நம்பிழைகளைப் பொறுப்பித்து நம்மை அவனிடம் சேர்க்க பிராட்டி பக்கத்திலே உள்ளபோது எதற்கும் அஞ்சவேண்டாம்; லக்ஷ்மீவிசிஷ்டமான தத்வமே நமக்கு அடையத் தகுந்த உபேயம்" என்று ஆளவந்தார் காட்டியருளுகிறார்.

சரணாகதிகத்யத்தில் முதல்முன்னம் பிராட்டியின் பெருமை கூறி அவரிடம் எம்பெருமானார் சரணம் பற்றும் "பகவந்நாராயணாபிமத...." என்று தொடங்கும் பரமகம்பீரமான பங்க்திகள் சதுச்லோகியை அடியொற்றித் தோன்றியவையே. கத்யத்தில் எம்பெருமானார் முதன்முன்னம் ஸ்ரீரங்கநாச்சியாரை அவரின் புருஷகாரத்தை வேண்டிச்சரணம் புகுகிறார். "அகில ஜகந்மாதரம், அஸ்மந்மாதரம்" என்று குடல்துடக்கை விண்ணப்பித்து, சரணம் புகுந்து "அடியேன் எம்பெருமான் திருவடிகளில் நித்யகைங்கர்யத்தை வேண்டி அத்திருவடிகளில் (பண்ணும்) சரணாகதி அது அமையவேண்டும்படி நியதமாக அமைந்து இடையறாது பயன் அளிப்பதாக வேண்டும். அதற்குத் தேவரீர் புருஷகாரபூதையாக வேண்டும்" என்று ப்ரார்த்தித்து "அப்படியே ஆகுக!" என்று பதிலும் பெறுகிறார். இங்கு பிராட்டியிடம் பகவானின் அங்கீகாரத்தை வேண்டுகிறார் மேலே பகவத்ப்ரபத்தி மட்டுமே அமைந்துள்ளது. கூரத்தாழ்வான் அருளிச்செய்துள்ள ஸ்ரீ ஸ்தவமும் பட்டர் ஸ்ரீ ஸூக்தியான ஸ்ரீ குணரத்ந கோசமும் சதுச்லோகியின் விவரணங்களேயாகும்.

ஆளவந்தார் ஸ்தோத்ரம் என்று ப்ரஸித்திபெற்ற ஸ்தோத்ரரத்னம் 65 ச்லோகங்களடங்கியது. இது த்வயம் என்கிற மந்த்ரரத்னத்துக்கு வ்யாக்யானமாக அமைந்துள்ள விலக்ஷணமான துதி. பல ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களை அநுஷ்டானமூலம் நமக்கு உபதேசிப்பதாக அமைந்துள்ளது. எம்பெருமானாருக்கு இந்த ஸ்தோத்ரத்தில் அளவற்ற ஈடுபாடு உண்டு. இவர் பெருமாள் கோவிலில் (காஞ்சிபுரத்தில்) சாலைக்கிணற்றிலிருந்து அநுதினமும் தேவப்பெருமாளுக்குத் திருமஞ்சனம் கொண்டு ஸமர்ப்பித்திருந்த நாளில் இவர் வரும் வழியில் பெரியநம்பி நின்றிருந்து இந்த ஸ்தோத்ரத்திலிருந்து சில ச்லோகங்களை அநுஸந்தித்தது கேட்டு "இந்த ஸ்தோத்ரத்தை அருளிச்செய்த ஆசார்யரை ஸேவிக்கவேண்டும்" என்று உடனே கிளம்பி ஸ்ரீரங்கம் சென்றார் என்று சரித்திரம்.

இந்த துதியில் பரமாசாரியர் முறையே நாதமுனிகள், பராசரர், பராங்குசமுனி (நம்மாழ்வார் என்ற க்ரமத்தில் ஆசார்யவந்தனம் பண்ணி, ஸ்ரீமந்நாராயணனே பரதெய்வம் என்று ப்ரமாணங்களாலும் யுக்திகளாலும் ஸ்தாபித்து, தர்ம—அர்த்த—காம—மோக்ஷம் என்ற நான்கு வித புருஷார்த்தங்களில் மோக்ஷமே விரும்பி அடையத்தகுந்தது என்பதைக்காட்டி, அதைப் பெற பகவச்சரணாரவிந்தங்களில் சரணம்புகுவது உபாயம் என்றும் தமது அநுஷ்டானமூலம் காட்டித்தந்து, "ஸதாசார்ய ஸம்பந்தத்தையிட்டு அடியேனை அங்கீகரிக்கவேண்டும்" என்ற ப்ரார்த்தனையோடு முடிக்கிறார். நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய் மொழியின் ஸாரமான அர்த்தங்களை இந்த ஸ்தோத்ரம் கொண்டு எளிதில் அறியலாம்.

வேதம் "காரணந்து த்யேய:" என்று ஆதிகாரணமான பகவானிடம் பக்திநிஷ்டையுடனிருந்து உய்யுமாறு உபதேசித்து, "தம் தேவம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே" என்று ப்ரபத்தியை வேதபுருஷனின் அநுஷ்டானமூலம் காட்டித்தந்தது. "ந்யாஸ இதி ப்ரஹ்மா" என்றும் "தஸ்மாத் ந்யாஸமேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:" என்றும் ப்ரபத்தியின் மேன்மையை நிஷ்கர்ஷித்து உள்ளது காண்க.

ஆளவந்தாரும், தமது துதியில், எம்பெருமானை 'நமோ நம:' என்று தொழுது,

> நதர்ம நிஷ்டோ஽ஸ்மி நசாத்மவேதீ நபக்திமாந் த்வச்சரணாரவிந்தே |
> அகிஞ்சநோ஽நந்யகதிச் சரண்ய ! த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே ‖ (22)

என்று எம்பெருமான் திருவடிகளைச் சரணமாகப் பற்றுகிறார். "நோற்ற நோன்பிலேன்—நுண்ணறிவிலேன்", "நின்கணும் பத்தனல்லேன்", "புகலொன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்ற அருளிச்செயல்களை அடியொற்றி அமைந்த சரணாகதி ச்லோகம் இது. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ"—சாஸ்த்ரங்களில் மோக்ஷஸாதனமாகக் காட்டடபெற்ற மற்ற உபாயங்களை விலக்கி என்னையே உபாயமாகப்பற்று என்ற கீதாசார்யன் மெய்ம்மைப் பெருவார்த்தையில் விதித்துள்ளதை இங்கு ஆளவந்தார் தாமே அநுஷ்டித்துக் காட்டினார்.

இதை அப்படியே கொண்டு அவதரித்தவை சரணாகதி ஸ்ரீரங்க கத்யங்கள். எம்பெருமானார் ப்ரபத்தியை உபதேசிக்கவில்லை; அநுஷ்டான முகத்தாலேயே காட்டியருளினார். பலபடியாலும் எம்பெருமான் பெருமைகளைப்பேசி ஏத்தி, "அசரண்ய சரண்ய! அநந்யசரண: த்வத்பாதாரவிந்தயுகளம் சரணம் அஹம் ப்ரபத்யே" என்று சரணம் பற்றினார். புகலில்லாதார்க்குப் புகலே! புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன் என்கிறார். உடனே "அத்ர த்வயம்" என்ற பங்க்தி கத்யத்தில் காண்கிறது. ஸ்வாமி த்வயத்தை அநுஸந்தித்ததை நாமும் அநுஸந்திக்கவேணும் என்று நியமித்தபடியிது. இந்த மந்திரத்தை பிறர் காதில் கேளாதபடி சொல்லுதல் பெரியோர் அநுஷ்டானம். "அத்ரத்வயம்" என்று வ்யக்தமாகக் காட்டுகையால் சரணாகதி கத்யம் த்வயத்தின் விவரணம்—அநுஷ்டானம் என்பது காணக்கிடக்கிறது.

ஸ்தோத்ரரத்நத்தில் சரணாகத்யநுஷ்டானமான "நதர்ம நிஷ்டோஸ்மி" ச்லோகத்துக்கு மேலே த்வயவிவரணமான பல ச்லோகங்களைக் காணலாம். கைங்கர்ய ப்ரார்த்தனையுடன் பகவதங்கீகாரத்துக்குத் தம் த்வரையையும் வெளிப்படுத்தியுள்ளார். இக ஆர்த்தியை "கதாபுந: த்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தானமலங்கரிஷ்யதி?" (31) என்கிற ச்லோகத்தில் காணலாம். மேலே பரமபதத்திலிருக்கும் இருப்பை பல ச்லோகங்களால் அருளிச்செய்து "கதா அஹம் பவந்தம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி?" (46) என்று தம் ஆர்த்தியை கைங்கர்ய ப்ரார்த்தனை மூலம் வெளியிடுகிறார்.

இவை அனைத்தையும் அப்படியே ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் ஸ்வாமி அமைத்துள்ளார். ஆளவந்தார் திருவாக்கைக் கொண்டே இந்த கத்யத்தில் பல சூர்ணைகளை அமைந்துள்ளது அறியத்தக்கது. பரமாசார்யரிடம் இவருக்குள்ள பக்தியையும் பெருமதிப்பையும் காட்டுமவை

இந்த சூர்ணைகள் "கதாப்ரஹர்ஷயிஷ்யாமி? எப்போது எம்பெருமானை மகிழ்விப்பேன்?" என்பது ஸத் ஸம்ப்ரதாயத்தில் உயிரான ஸ்ரீஸூக்தியாகும். பிராட்டிக்கும் எம்பெருமானுக்குமாகச் செய்யும் கைங்கர்யத்தினால் வரும் உகப்பு, செய்யும் சேதனனுக்கல்ல. அவர்கள் மகிழ வேண்டும். "தனக்கே யாக எனைக் கொள்ளுமீதே" என்று நம்மாழ்வாரும் ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்துள்ளார். இதனால் சேதனலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதும் சொல்லப்பட்டதாகிறது. இந்த ஸ்வாரஸ்யத்தைக் கொண்டே பாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில் கடைசி ஸூத்ரத்தைவ்யாக்யானிக்கையில் "நச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப; அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி — ஸத்யஸங்கல்பனான பரமபுருஷன் தனக்கு மிகவும் ப்ரியனான ஞானியைப் பெற்று எப்போதும் கை விடானன்றோ?" என்றருளிச் செய்தது. சேதனலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்றும் இப் பேற்றுக்கு உகப்பவன் அவனே என்றும் ஆளவந்தார் காட்டியதை அடியொற்றியே ஸ்வாமியும் அருளிச் செய்தார்.

ஸ்தோத்ர ரத்நத்தின் இறுதியில் ஆளவந்தார் தமது துர்த்தசையைப் பலபடியாலும் பேசித் தம்மை அங்கீகரித்துக் கைங்கர்யம் கொள்ளும்படி வேண்டி, ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணி, உடனே அவனதேயாயுள்ள ஆத்ம வஸ்துவை ஸமர்ப்பிக்கத் தாமார்? என்று தெளிந்து, "பகவன்! பக்திமபிப்ரயச்சமே" சேஷத்வ விஷயத்தில் எனக்கு எப்படி தெளிவு பிறப்பித்தாயோ அப்படியே உன்பக்கல் பக்தியையும் தந்தருள வேணும்" என்று ப்ரார்த்திக்கிறார். எம்பெருமானாரும் பெரிய கத்யத்தில் "பரபக்தி பரஜ்ஞாந பரம பக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ" என்று வேண்டுகிறார். சரண்யனிடத்தில் பக்தி அவச்யம் வேண்டியதொன்று. ஆழ்வார்களுக்கு அவன் நிர்ஹேதுகமாக மயர்வறமதிநலமான பக்தியை அநுக்ரஹித்தான். அவர்களும் இவனைச் சரண்யனாகக் கொண்டு இவனையே உபாயமாகச் சரணமடைந்தனர்.

ஸ்தோத்ரத்தை முடிக்கையில், தம்மைக் கணிசியாமல் கேவலம் தமக்குப் பிதாமஹரும் பரமாசார்யருமான நாதமுனிகளுடைய தேஹஸம்பந்தம், ஆத்மஸம்பந்தம் இவைகளையே பற்றாசாகக் கொண்டு தம்மை அங்கிகரிக்க வேண்டும் என்று வேண்டித்தலைக் கட்டுகிறார். ஸதாசார்ய ஸம்பந்தமே உத்தாரகம் என்ற தெளிந்த ஸம்ப்ரதாயார்த்தத்தை இங்கு வெளியிட்டாராயிற்று. இந்த அர்த்தத்தை ஸ்வாமியும் தமது அநுஷ்டானத்தாலும் உபதேசங்களினாலும் காட்டித்தந்துள்ளார். இவர் (ஸ்ரீ ராமாயண) அபயப்ரதானம் ஸாதிக்கையில் பிள்ளையுறங்காவில்லி தாஸருக்கு அருளிச் செய்த வார்த்தைகளை ஸ்மரிக்கவும்.

ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ராதாய அடிப்படைக் கொள்கைகளைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தருமது ஸ்தோத்ர ரத்னம். இவைகளாவன: எம்பெருமானே பரமப்ராப்யமான உபேயம்; அவனை அடைய அவனே உபாயம்; பிராட்டியும் அவனுமாகிற திவ்யதம்பதியிடம் யாசித்துப் பெறும் கைங்கர்யப்ராப்தியே புருஷார்த்தம். நம்முடைய வெறுமையை அவனிடம் விண்ணபித்து அவனையே உபாயமாக வரிப்பது ப்ரபத்தி. நம்மிடம் தோஷமே அதிகமாக உள்ளதையும், ஸர்வசக்தனும், வாத்ஸல்யம், க்ருபை இவைகளால் பரிபூர்ணனுன எம்பெருமானே நமக்கு வாழ்ச்சியளிக்கவல்லவன் என்பதையும், ஸதாசார்ய ஸம்பந்தமே அவன் நம்மை வாழ்விப்பதற்கான ஹேது என்பதையும் விளக்குவது ஸ்தோத்ர ரத்னம்.

வேதங்களை ப்ரமாணங்களாக ஒவ்வாத பாஹ்யர்கள், அவைகளுக்குத் தவறான அர்த்தங்களைக் கற்பித்த குத்ருஷ்டிகள், இவ்விரு சாரார்களின் வாதங்களைக் களைந்தெறிய ஸ்ரீ பாஷ்யமும் கீதாபாஷ்யமும் அவதரித்தவை. இவைகளில் ஸத்ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தமான ப்ரபத்தியைப்பற்றி வெளிப்படையாகப் பேச வாய்ப்பில்லை. ஸகலஹேயப்ரத்யநீகன், கல்யாணகுணத்மகன், திவ்யமங்களவிக்ரஹ விசிஷ்டன் என்று பரப்ரஹ்மமான எம்பெருமானைக் காட்டித் தந்து, நாமரூப குணங்கள் எதுவுமே பரமபுருஷனுக்கில்லை என்ற பக்ஷத்தைக் களைந்தெறிந்து, அந்த பரமபுருஷனிடம் பக்தி பண்ணி நாம் உய்யவேண்டும் என்பதை ஸ்தாபிப்பதே இந்த க்ரந்தங்களின் முக்கியமான குறிக்கோளாகும். இப்படி உள்ளதால் எம்பெருமனாருக்கு

ப்ரபத்தியில் அந்வயமில்லை என்றும் ப்ரபத்யநுஷ்டானம் பண்ணுவதாக அமைந்துள்ள கத்யத்ரயம் இவர் அருளிச் செய்ததல்ல என்றும் சில நவீன ஆராய்ச்சியாளர்கள் தவறாகச் சொல்லத் தலைப்பட்டுள்ளனர்.

ப்ரபத்தியே தமக்கு அபிமதமான உபாயம் என்பதை ஸூசனமாக இந்த பாஷ்ய க்ரந்தங்களில் காட்டாமலிருக்கவில்லை. சிறிது கவனமாக ஸூக்ஷ்மமாக ஆராய்தால் இந்த உண்மை எளிதில் புலப்படும். கீதாசரமச்லோகத்துக்கு ஸ்வாமி பாஷ்யத்தில் இரண்டு யோசனைகள் (விளக்கங்கள்) ஸாதித்துள்ளார். "மாமேகம் பரமகாருணிகம் அநாலோசித விசேஷாசேஷலோகசரண்யம் ஆச்ரிதவாத்ஸல்யஜலதிம் சரணம் ப்ரபத்யஸ்வ" என்ற மிக அழகான ஸ்ரீஸூக்தியை இரண்டாவது யோசனையில் அருளிச்செய்துள்ளார். இங்கு ஒவ்வொருபதமும் ப்ரபத்திஸ்தலத்திலே ஸ்ரீ ராமாயணாதிகளிலே நாமறிந்தவை. "ஸர்வலோகசரண்யாய ராகவாய", "காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்", "தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:" போன்ற ஸ்ரீராமாயண வாக்யங்களை உட்கொண்டு அவதரித்தவை இங்கு கீதாபாஷ்ய ஸ்ரீ ஸூக்திகள்.

எம்பெருமானார் தமக்கு மிகவும் அபிமதமான ஸம்ப்ரதாயார்த்தங்களை மூன்று கத்யங்களின் மூலமாகவும் ப்ரகாசிப்பித்தார். இவை ஸ்தோத்ரரத்னத்தை அடிப்படையாகக்கொண்டு அவதரித்தவை என்பது ஸ்தோத்ரத்தையும் கத்யங்களையும் ஸேவித்தால் எளிதில் புலப்படும். ஸ்தோத்ராத்நம் த்வயார்த்தவிவரணம்; திருவாய்மொழியின் ஸங்க்ரஹம். திருவாய்மொழி த்வயார்த்தம்-தீர்க்க சரணாகதி என்று நம்மாசார்யர்கள் கொள்கை. ஆளவந்தாரிடம் பேரன்பு பூண்டவரும், அவர் ஸ்ரீ ஸூக்திகளையே தஞ்சமாகக் கொண்டவரும், மாறனடிபணிந்துய்ந்தவருமான ராமாநுசர் இவர்கள் விளங்கச்செய்த உபாயத்தை (சரணாகதியை) தமக்கபிமதமான அர்த்தமாகக் கொள்ளாமல் ஸாதன பக்தியை உபாயமாகக் கொண்டார் என்றால் 'யாமுநார்ய ஸுதாம்போதியில் அவகாஹித்தவன் நான்" என்று ஸ்வாமி கூறிக்கொள்வதற்கு அர்த்தமே இல்லாமல் போகும். பரிஹாஸமாகவும் இருக்கும். மாறனடிபணிந்துய்ந்தவன் என்பதற்கும் அர்த்தமில்லாமல் போகும். இதுபற்றி மேலும் ஒன்றிரண்டு அபிப்ராயங்கள் மேலே காண்க.

ஆளவந்தாருடைய திவ்யஸூக்திகளில் கீதார்த்தஸங்க்ரஹத்தை வித்தாகக்கொண்டு அவதரித்தது பகவத்ராமாநுஜ விரசித ஸ்ரீபகவத்கீதாபாஷ்யம். ஸங்க்ரஹத்தில் முதல் முன்னம் "நாராயண: பரம் ப்ரஹ்ம கீதாசாஸ்த்ரே ஸமீரித:" என்று அருளிச்செய்கிறார் ஆளவந்தார். கர்ம ஜ்ஞானபக்திகளுக்கு விஷயமான பரமபுருஷன் ஸ்ரீமந்நாராயணன் என்று கருத்து. கீதா சாஸ்த்ரத்தை மூன்று ஷட்கங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் கீதாசார்யன் அருளியுள்ள முக்யார்த்தத்தை உபபாதித்து, மறுபடியும் ஒவ்வொரு அத்யாயத்தின் மத்யமான பொருளை ஒவ்வொரு ச்லோகத்தினால் விளக்கி, மேலும் பத்து ச்லோகங்களில் கீதையின் திரண்ட பொருள்களை ஸாரமாக பரமாசார்யர் அருளிச்செய்துள்ளார் இப்படி 32 அநுஷ்டுப் ச்லோகங்களான ஸங்க்ரஹத்தையே நிதியாகக்கொண்டு கீதாபாஷ்யம் அருளிச்செய்யப்பட்டுள்ளதையே விவரமாகக் காட்ட இன்னும் பல பக்கங்கள் வேண்டியிருக்குமாதலால் விவரிக்கவில்லை.

கீதோபநிஷத்தில் 18வது அத்யாயத்தின் ஸாரத்தை

ஈச்வரே கர்த்ருத்வபுத்தி: ஸத்வோபாதேயந்திமே |
ஸர்வகர்ம பரிணாமச்ச சாஸ்த்ர ஸாரார்த்த உச்யதே ||

என்று அருளிச்செய்து, இதுவே கீதாசாஸ்த்ரத்தின் ஸாரமும் என்கிறார் ஆளவந்தார். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று முக்குணங்களின் கலவையை மடியச்செய்து சுத்தஸத்வத்தையே உபாதேயமாக வளர்க்கவேண்டும்; எம்பெருமானிடத்தில் கர்த்ருத்வத்தை வைக்கவேண்டும் (அவனே எந்த செய்கைக்கும் காரணம்—நாமல்ல என்று எண்ணவேணும்). ஸர்வகர்ம பரிணாமம்—முதல் ச்லோகத்தில் சொன்னதே. அதாவது அவரவர் நிலைக்கு ஏற்ப ஸ்வதர்

மானுஷ்டானத்தை, பற்றில்லாமல் பகவத்கைங்கர்யமாக அநுஷ்டித்து, அதனால் சித்தசுத்தி (உள்ளத்தூய்மை) பெற்று, ஆத்மசிந்தநமான ஞானயோகத்தில் இழிந்து ஆத்மஸாக்ஷாத்காரம்பெற்று, ஆத்மாவுக்குள் ஆத்மாவான ஸர்வேச்வரனை உள்ளன்புடன் சிந்தித்து அவனையடைவதான மோக்ஷத்தைப் பெறவேணும் என்பது.

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ - இமே மோக்ஷஸாதநமாகச் சொன்ன எல்லாவுபாயங்களையும் விட்டு என்னையே புகலாகப்பற்று; அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி; மாசுச:—தடையாக நிற்கும் யாவற்றினின்றும் உன்னை விடுவிக்கிறேன்; கலங்க வேண்டாம் என்ற பகவத்வசனத்தை பக்தி ஸித்திப்பதற்காகச் சொன்னதாக ஆளவந்தாரைப் பின்பற்றி பாஷ்யகாரரும் வ்யாக்யானித்துள்ளார். இங்கு ''சரணம் பற்று'' என்று கண்ணன் விதித்த ப்ரபத்தி (சரணாகதி) பக்தி ஸித்திக்க உதவுதலால், பக்திக்கு அங்கமாகும். இதை அங்கப்ரபத்தி என்பர். பக்தி பலனளிப்பதற்குத் தடையாய் நிற்பதும் இவனநுபவித்தே கழிக்கவேண்டிய பாபத்தை அவனைச்சரணம் பற்றி அவனருளால் போக்கிக்கொள்வதால் தடைநீங்கி பக்தி என்ற ஸாதனம் மோக்ஷம் என்ற பலனைத்தரும்.

கர்மம், ஞானம், பக்தி இவை எதையுமே பேற்றுக்கு உபாயமாகக் கொள்ளாமல் எம்பெருமானையே உபாயமாகப் பற்றுகை ஸித்தோபாயவரணம் எனப்படும். இப்போது உபாயம் உபேயம் (அடைவிக்கும் மார்க்கமும் அடையும் பொருளும்) இரண்டுமே ஒன்றாய் விடும். ஒரு ஸாதனம் கொண்டு அடையாமல் ''த்வமேவ உபாயபூதோ மே பவ'' என்று அவனைப் பற்றுகை ஸ்வதந்த்ரப்ரபத்தி எனப்படுகிறது. ''ஸர்வதர்மாந்'' என்ற கீதா சரம ச்லோகத்தில் ஸ்வதந்த்ர ப்ரபத்தியே உபதேசிக்கப் பட்டதாக ரஹஸ்ய க்ரந்தங்களின் மூலம் அறியலாம். திருக்கோட்டியூர் நம்பி ஆளவந்தார் வைத்துப்போன நிதியான அர்த்தங்களாக பகவத் ராமாநுஜருக்கு ரஹஸ்யமாக உபதேசித்தவையில் சரமச்லோகார்த்தமும் ஒன்று. அவர் உபதேசித்தது ஸ்வதந்த்ரப்ரபத்தியே. அதாவது ஸர்வ தர்மாந் என்று கர்மம், ஞானம், பக்தி எல்லாவற்றையும் அவனை அடைவிக்கும் மார்க்கங்களாக எண்ணாமல் ஸாக்ஷாத் தர்மமான அவனையே பேற்றுக்குப் புகலாகப் பற்றுகை. அவனடிக்கீழ் அமர்ந்து புகுதலே ''மாமேகம் சரணம் வ்ரஜ'' என்று கண்ணன் விதித்ததை அநுஷ்டித்துக் காட்டுவது. ஆழ்வார், ஆளவந்தார் இவர்கள் அநுஷ்டித்ததை இவரும் கத்யமுகேன அநுஷ்டித்துக் காட்டினார். இந்த ஸித்தோபாயவரணம் எனப்படும் ப்ரபத்தி ஸ்தலத்திலே பக்தி அங்கமாய்விடும், அவனிடம் தூய அன்பில்லாவிடில் அவனையே பேறாகவும் (அவன திருவடிகளில் கைங்கர்யத்தையே வாழ்ச்சியாக நப்புகை) அப்பேற்றைப் பெற அவனையே ஆறாகவும் (உபாயமாகவும்) கொள்ள இயலாதன்றோ? நம்மாழ்வார் பக்தி நிஷ்டரோ? ப்ரபந்நரோ? என்று எம்பாரைக் கேட்டதற்கு 'ஆழ்வார் ப்ரபன்னர் தாம்; பக்தி அவருக்கு தேஹ யாத்ராசேஷம்' என்று அருளிச் செய்தாராம். வாஸுதேவஸ்ஸர்வம்—உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் என்றிருப்பவரன்றோ? இவர்.

இப்படி ஸ்வாமி எம்பெருமானார் ஆளவந்தாருக்குத் தாம் ஏகலவ்யனாய் அவரிடம் அளவற்ற பக்தி கொண்டு அவரருளாலே கற்க வேண்டியதையெல்லாம் கற்று, அவர் தம் க்ரந்தங்களில் காட்டிய வழியையே அவலம்பமாக (பற்றாக)க்கொண்டு விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபனம் பண்ணி, அதற்கநுகுணமாக ஸத்ஸம்ப்ரதாய அநுஷ்டானத்தையும் தமது எல்லையற்ற கருணையாலே நமக்குக் காட்டியருளி யுள்ளார் என்பதை யதாமதி மூதலிற்றாயிற்று. குற்றங்குறைகளுக்கு க்ஷமித்தருளும் படி வேண்டி நிற்கிறேன்.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்
எம்பெருமானார் திருவடிகளே சரணம்

ஸ்ரீ :

# எதிகட்கிறைவனும் எதிராசனும்

(இரண்டாம் பகுதி)

ஸ்ரீ M. A. வேங்கடக்ருஷ்ணன், M. A.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் வடமொழி தென்மொழி இரண்டையுமே உயிராகக் கொண்ட தாகையால் உபயவேதாந்த ஸம்ப்ரதாயம் என்று குலாவப் படுகிறது. எம்பெருமானை வர்ணிக்கும் ஆழ்வார்கள், "அந்தமிழின்பப்பாவினை அவ்வடமொழியை" என்றும் அவனடியார்களை "செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்" என்றும் அருளிச் செய்துள்ளனர்.

எம்பெருமானார் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனைக இருந்து கற்றமையை இருவருடைய வடமொழி நூல்களை ஆராய்ந்து எழுதப்பட்டது இக் கட்டுரையின் முதல் பகுதி. இப்பகுதியில் ஆளவந்தார் தம்முள்ளத்துள்ளே திருவாய்மொழிப் பாசுரங்களுக்குக் கருதியிருந்த அர்த்தங்களை அவ்வாசார்யரின் அருளால் எம்பெருமானார் வெளிப்படுத்தியதை அநுபவிப்போம்.



ஆளவந்தார் எம்பெருமானார்க்கு நேரே உபதேசம் பண்ண வாய்ப்பில்லாததால் பல ரஹஸ்யார்த்தங்களை தமது சிஷ்யர்கள் ஐவரிடம் அவருக்கு அளிக்குமாறு ஒப்படைத்திருந்தார். எம்பெருமானாரும் அடைவே இவைகளை அதிகரிக்கையில் திருமாலையாண்டான் என்பவரிடம் திருவாய்மொழி காலக்ஷேபம் பண்ணியருளினார். திருமாலையாண்டான், "ஆளவந்தாரருளிச் செய்யும்படி" என்று பெருமை தோற்றச் சொல்லி திருவாய்மொழிப் பாசுரார்த்தங்களைத் தாம் ஆளவந்தாரிடம் கேட்டறிந்தபடி சொல்லிவந்தார். சில பாசுரங்களுக்கு 'எம்பெருமானார் "இப்பொருள் அழகியதே; ஆயினும் (வேறு யோசனை காட்டி) இப்படிப் பொருள் கொண்டால் இன்னும் பொருத்தமாக இருக்கு மன்றோ?" என்று கூறியதாக அறிகிறோம். இப்படிப் பல இடங்கள் திருவாய்மொழி ஈட்டில் எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு அநுபவிப்போம்.

"இது கொண்டு ஸூத்ரவாக்யங்களை ஒருங்கவிடுவர்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் காட்டியுள்ளபடியே எம்பெருமானார் விசிஷ்டாத்வைதக் கொள்கைகளை ஸ்தாபிப்பதற்கு திருவாய் மொழியை முக்ய அவலம்பமாகக் கொண்டிருந்தார். என்பது உலகமறிந்த உண்மை. சாரீரக சாஸ்த்ரத்தில் கடைசீ ஸூத்ரமான "அநாவ்ருத்திச் சப்தாத்" வ்யாக்யானத்தில் எம்பெருமான் ஞானியை அடைந்து துயரறப் பெற்று ஆநந்தப்படுகிறான்; தனக்கு மிகவும் ப்ரியனான ஞானியை அடைந்து அவனைக் கைநழுவ விடமாட்டானன்றோ? என்று ஸாதிக்கிறார். இதற்கு திருவாய்மொழியின் ஆரம்பப் பாசுரமே அவருக்கு ஆதாரமாக இருந்திருக்க வேணும். திருவாய்மொழி முதல் பாசுரத்தில் ஆழ்வார் "துயரறு சுடரடி தொழுதெழென் மனனே!" என்று தம் நெஞ்சுக்கு உபதேசம் பண்ணுவதை ராமாநுஜருக்கு முன்னவர் "துயரறு சுடரடி- நம் துயரங்களை அறுக்கும் (போக்கும்) திருவடிகள் என்று நிர்வஹித்தனர். ராமாநுஜரோ, "துயரறும் சுடராடி- சேதனலாபத்தால் துயர் அற்று (ஆநந்தத்துடன் விளங்கும்) சுடரடி. சேதனன் துயர் துடைத்துத் தானும் துயரற்று விளங்கும் திருவடி" என்று மிகப் பொருத்தமாகப் பொருள் கொண்டார். இது ஆளவந்தாரநுக்ரஹத்தால் கிடைத்த பொருள்.

"ஆளவந்தார் பணித்தாராகத்" திருமாலையாண்டான் கூறும் பொருள் பெரும்பாலும் பாசுரத்தின் மேல் காணும் பொருளே. ஆனால் எம்பெருமானார் பாசுரங்களை நிர்வஹிக்கையில் முன்பின் பாசுரங்களின் பொருள்களையும் நெஞ்சில் கொண்டு ஸங்கதிகள் கோர்வையாக வரும்படி அர்த்தம் கொள்வர். இவர் பாஷ்யகாரர் ஆகையால் தர்க்க சாஸ்த்ரப்படியே பூர்வாபர விருத்தம் வாராமலிருக்கும்படி கவனமாக இருப்பர். "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து அறியாமாமாயத்து அடியேனை வைத்தாயால்" (2- 3- 3) என்று ஒரு பாசுரம். ஆளவந்தாரருளிச் செய்தார் என்று திருமாலையாண்டான் பாசுரத்தை உள்ளபடி அந்வயித்து "அறிவு நடையாடாத சிறு பிராயத்திலேயே அடியேனுக்கு மெய்யறிவைத் (ஆத்ம பரமாத்ம ஸம்பந்த ஜ்ஞானத்தை— எம்பெருமான் ஸ்வாமீ– நாம் தாஸபூதர் என்பதை) தந்து, அடிமையும் கொண்டு, பின்னர் அறிவை அழிக்கக்கடவதான தேஹ ஸம்பந்தத்தோடே அடியேனை வைத்தாயே" என்று இழவோடே (வருத்தத்துடனும் வெறுப்புடனும்) ஆழ்வார் அருளிச் செய்கிறார் என்றருளிச் செய்தாராம். இதைக் கேட்ட உடையவர், முன்பின் பாசுரங்கள் ப்ரீதராய் அருளிச்செய்தவை. நடுவில் அப்ரீதி பொருந்தாது. முன் பாசுரத்தில் "தாயாய் தந்தையாய் அறியாதன அறிவித்த அத்தா!" என்று உபகார ஸ்ம்ருதியேயே பாசுரம் காண்கிறது. மேல் பாசுரத்திலும் "எனதாவியுள் கலந்த பெருநல்லுதவி" என்று உபகாரஸ்ம்ருதியே காண்கிறது. ஆகையால் நடுப்பாசுரமும் உபகாரஸ்ம்ருதியோடே செல்ல வேணும். "அறியாமாமயத்த- அடியேனை- அறியாக்காலத்து அடிமைக்கணன்பு செய்வித்து- வைத்தாயால்" என்று அந்வயித்தால் பொருந்தி விடுகிறது- "அறியாமாமாயமான இருள் தருமாஞாலத்தில் ஞானஹீநனாய் வைக்காமல் அறிவு நடையாடாத சிறுபிராயத்திலேயே ஸம்பந்த ஞானத்தைப் பிறப்பித்து, (உனக்கு) அடிமை செய்வதில் அன்புடையேனாய் வைத்தாயே!" என்று எம்பெருமானிடம் ப்ரீதியோடே அருளிச்செய்கிறார் என்பது எம்பெருமானாரின் பொருத்தமான நிர்வாஹம்.

இந்த நிர்வாஹத்தைக் கேட்ட திருமாலையாண்டான் ஆளவந்தார் சொன்ன அர்த்தத்தை இவர் மறுத்து விட்டார் என்று சீற்றம் கொண்டு பொருள் சொல்வதைத் தவிர்த்துவிட்டார். இந்த விஷயம் திருக்கோட்டியூர் நம்பி காதுக்கு எட்ட, அவர் ஸ்ரீரங்கம் வந்து, திருமாலையாண்டானிடம் "திருவாய்மொழி நடக்கிறதோ?" என்று வினவ, ஆண்டானும் காலக்ஷேபம் நின்றுள்ளதையும் அதன் காரணத்தையும் விவரித்தார். இதைக்கேட்ட நம்பி,* இவ்வர்த்தத்தை ஆளவந்தார் அருளிச்செய்ய நாம் கேட்டுள்ளோம்" என்றருளிச் செய்து, "ஸாந்தீபநி பக்கலிலே க்ருஷ்ணன் வேதாத்யயனம் பண்ணினாப்போலே காணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறதும். ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறு ஒன்றும் ப்ரகாசியாது. இவர்க்கு நீர் அஜ்ஞாத ஞாபநம் பண்ணுகிறோம் என்று இராதே கொள்ளும்" என்றருளிச்செய்து, திருமாலையாண்டானையும் பெரிய நம்பியையும் கூட்டிக்கொண்டு எம்பெருமானார் மடமே எழுந்தருள, உடையவரும் அதிப்ரீதியுடனே இவர்கள் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, இவர்களும், "திருவாய்மொழி விட்ட தறுவாய் தொடங்கி நீரே அநுவர்த்திந்தாகிலும் ப்ரபந்தத்தைத் தலைக்கட்டும்" என்று அருளிச் செய்தார்கள்.

மறுபடியும் திருவாய்மொழி காலக்ஷேபம் தொடங்கி நடக்கையில் உடையவர் மாற்று யோஜனைகள்கூறத் தொடங்கினார். இவை "விச்வாமித்ரச்ருஷ்டி" என்று ஆண்டான் நினைப்பதுண்டு. (விச்வாமித்ர ச்ருஷ்டி: வசிஷ்டர் குருமார்கள் கைவிட்ட த்ரிசங்குவுக்காக விச்வாமித்திர முனிவர் ஒரு தனிஸ்வர்க்கத்தை சிருஷ்டித்தார் என்பது இதிஹாஸம்). திருவாய்மொழி (2- 7- 5) "விட்டிலங்கு" பாசுரம் ப்ரஸ்துதமாக, "இப்பாட்டில் எம்பெருமான் ஆழ்வாரைத் தனக்காக்கினபடியைச் சொன்னார். இப்பாட்டில் அவ்வாறு தனக்காக்கின எம்பெருமானுடைய அவயவங்களினுடைய அழகை வர்ணிக்கிறார் ஆழ்வார்" என்று பணித்து, உடையவர்

* இவை ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்திலுள்ள பங்க்திகள்; சரம பர்வ நிர்ணயத்திலும் இதே பங்க்திகள் காணப்படுகின்றன. "பஞ்சாசார்யபதாச்ரய:" என்ற கட்டுரையில் "திருமாலையாண்டான்" பகுதியில் காண்க.

முகத்தைப் பார்த்துக் குறிப்பறிந்து, "இப்பாட்டுக்கு விச்வாமித்ர ச்ருஷ்டி வேண்டாவாயிருந்ததே!" என்ன, உடையவரும் "இப்பாட்டால் தன் அவயவ ஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினான் என்கிறார். அதாவது எம்பெருமான் இவரைத் தனக்காக்கிக் கொண்டதற்கு உபாயம் அவயவஸௌந்தர்யமாகையால் அதை வர்ணிக்கிறாரிங்கு" என்று அருளிச்செய்தாராம்.

இப்படி திருவாய்மொழி காலக்ஷேபம் நடந்து செல்கிற அளவிலே, "பொலிக பொலிக" பாசுரம் வந்தவாறே 'கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற இடத்தில் ஆழ்வார் ஸர்வோத்தாரகரான பவிஷ்யதாசார்யர் திருவவதாரத்தை அருளிச்செய்தார்— அந்த ஆசார்யர் இந்த எம்பெருமானார் தாம் என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்ய, திருமாலையாண்டானும், எம்பெருமானாரிடம் "ஆளவந்தாரிடம் கேட்கப்பெறாத அர்த்தங்களை எல்லாம் தேவரீரிடம் கேட்கப்பெறுகிறேன்" என்று மிகவும் ப்ரீதராய் அருளிச்செய்து, போதயந்த: பாஸ்பரம் என்ற முறையில் காலக்ஷேபம் நடந்து இனிதே தலைக்கட்டிற்று.

இப்படி காலக்ஷேபம் நடந்ததில் சிற்சில பாசுரங்களை திருமாலையாண்டான் நிர்வஹிக்கையில் உடையவர் இன்சுவையே வடிவெடுத்த வேறு யோசனைகளை அருளிச்செய்ததாக ஈட்டில் கண்டுள்ளபடி இங்கு சுருக்கமாக அநுபவிப்போம். ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப என்கிறபடியே தன்னிடம் பயின்ற சிஷ்யன் தன்னைவிட ப்ரகாசமாக விளங்கும்படி கடாக்ஷிப்பது ஸதாசார்யர்கள் சரித்திரம். ஆளவந்தார் உடையவரை 'ஆமுதல்வன் இவன்' என்று கடாக்ஷித்த போது அவரது க்ருபையால், அவர் நேரே திருமாலை யாண்டானுக்குச் சொல்லாத சீரிய பொருள்களெல்லாம் அவரருளாலே இவருக்குக் கையிலங்கு நெல்லிக் கனியாயிற்று. சிலவற்றைப் பேசி மகிழ்வோம்.

1. முந்நீர் ஞாலம் (3-2-1) என்ற பாசுரம்: "இவ்வுலகங்களை எல்லாம் படைத்து உன்னை வழிபடுகைக்கு உடலாகக் கரணகளேபரங்களைக் கொடுத்தாய் நீ; நான் அவற்றைக் கொண்டு உன்னைப் பணியாமல் இதர விஷயங்களில் ப்ரவணனாய்ப் போந்தேன்; இனி என் வினைகளை களையப்பெற்று எப்போது வந்து உன்னைக் கிட்டப் போகிறேன்?" என்று எம்பெருமானை ஆழ்வார் கேட்பதாக

முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே!
அந்நாள் நீதந்த ஆக்கையின் வழி உழல்வேன்
வெந்நாள் நோய் வீய வினைகளை வேரறப் பாய்ந்து
எந்நாள் யானுன்னை இனிவந்து கூடுவனே?

என்றமைந்துள்ளது. சரீர ஸுகங்களை யநுபவித்து உன்னைவிட்டு விலகி அநர்த்தப்பட்டுப் போந்த எனக்கு உன்னை வந்து இனி கிட்டுவது என்பதும் உண்டோ? என்று நிராசையுடன் பேசுவதாக பூர்வர்கள் (திருமாலையாண்டான்) நிர்வாஹம். எம்பெருமானார், "நிராசரானால் ஆழ்வார் முடிந்து விடுவர். இத்திருவாய் மொழி இறுதியில் அவன் வந்து இவரை ஸமாதானம் பண்ணிடதாக அமைந்துள்ளது. ஆகையால் நிராசரானார் என்பது பொருந்தாது. என் வினைகளைக் களைந்தெறிந்து எப்போது நான் உன்னைக் கிட்டும்படி அருள் செய்வதாக நாள்வைத்துள்ளாய்? நான் அதை அறிந்து தரித்திருக்கும்படி அதைச் சொல்லியருளாய் என்று கேட்கிறார்" என்று பின்வருமவற்றுக்குச் சேரும்படி பொருள் கூறியருளினார்.

2. திருவாய்மொழி இரண்டாம் பத்தில் "எம்மா வீடு (2-9) என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் புருஷார்த்த நிஷ்கர்ஷம் பண்ணுகிறார் என்பது ப்ரஸித்தம். இதில் எம்பெருமானைக் கிட்டி கைங்கர்யம் பண்ண வேண்டும் என்று மிகவும் த்வரிக்கிறார். எட்டாவது பாசுரத்தின் முதலிரண்டு அடிகள்

எக்காலத்தெந்தையாய் என்னுள் மன்னில் மற்
றெக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்

என்பவை (எக்காலத்து) மிகவும் அல்பகாலமேயாகிலும் (எந்தையாய் என்னுள் மன்னில்) வகுத்த ஸ்வாமியாய் முறையோடு வந்து என்னோடு கலக்கப் பெற்றால் (மற்றெக்காலத்திலும்)

இதொழிந்த மற்றெக்காலத்திலும் (யாதொன்றும் வேண்டேன்) இது தன்னையும் வேண்டேன் இது ஆளவந்தார் நிர்வாஹம். அதிகமான ஜ்வரம் காயும் போது நாக்கு வரள, "ஒருகால் நாக்கு நனைக்க ஒரு சொட்டு நீர் கிடைத்தால் போதுமே" என்பார் போலே ஒரு கொடிப் போதாகிலும் அநுபவிக்கக் கிடைக்காதோ? என்று பாரிக்கிறபடி. இதை எம்பெருமானார் கேட்டருளி, "இப் பொருள் அழகுதான். ஆயினும் ஆழ்வார் ப்ரக்ருதிக்குச் சேராது பெற்றாலும் பெறாவிட்டாலும் பகவத் விஷயத்தில் ஆழ்வார் சிறுகக் கோலமாட்டார். இப்படிப் பொருள் ஆகவேண்டும்: எல்லாக்காலத்திலும் எனக்கு சேஷியான (ஸ்வாமியான) நீ, நான் சேஷவஸ்து (ஸொத்து) என்ற முறை தப்பாமல் வந்து என் ஹ்ருதயத்திலே புகுறப்பெறில் இப்படிக் கலக்கும் இக்கால மெல்லாவற்றிலும் இது ஒழிந்த மற்றொன்றையும் வேண்டேன்" என்று. மாறனடி பணிந்து உய்ந்த வருக்கன்றோ மாறன் திருவுள்ளம் தெள்ளத்தெரியும்?

3. அந்தாமத்தன்பு செய்து (2- 5) என்கிற திருவாய்மொழியில்

**அந்தாமத் தன்புசெய்து என்னாவிசேர் அம்மானுக்கு**
**அந்தாம வாள் முடிசங்கு ஆழிநூலாரமுள**

என்பது முதல் பாசுரத்தில் முதல் பாதி. ஆழ்வார்தாம் மனோரதித்தபடியே பரமபுருஷன் திவ்யாயுதங்களோடே வந்து இவர் நெஞ்சினுள் புகுந்து கலந்தான் என்பது இரண்டாம் பொருள் "அடியார் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ?" என்று பாரிப்பவர் ஆழ்வார்; ஆதலால் அடியார்களான (நித்யஸூரிகள்) திவ்யாயுதாழ்வார்களோடே கூட இவருள் வந்து கலந்தான் என்பது திருமாலையாண்டான் பணித்த ஆளவந்தார் நிர்வாஹம். எம்பெருமானார், பாசுரத்தின் பின்பாதியில் "செம்பொன் திரு உடம்பே" என்று திருமேனியில் புகரைச் சொல்லுகை யால் அதைப்பற்ற, "ஆழ்வாருடன் கலப்பதற்கு முன்பு அவன் புகரற்று வாடியிருந்தான். மரம்வாடினால் அதில் பூவும் தளிரும் வாடுமன்றோ? அவ்வாறே அவன்கையில் ஆயுதங்களும் வாடியிருந்தன. அவன் ஆழ்வாருடன் சேர்ந்து புகருற்ற போது இவ்வாயுதங்களும் இவனோ டொக்க உஜ்ஜ்வலமாய் (ப்ரகாசமடைந்து) ஸத்தை பெற்றபடி சொல்லுகிறது" என்று ஆழ் வாருக்கு ப்ராதான்யம் தோற்றப் பொருத்தமாக பொருள் அருளிச்செய்தார். அடியார்களுடன் கலப்பதை அதிலும் அவர்களில் அக்ரேஸரரான ஆழ்வாருடன் கூடுவதை அவன் பெருப் பேறாகக் கொள்கிறான் (சேதனலாபம் ஈச்வரனுக்குப் பேறு) என்னும் ஸம்ப்ரதாயார்த்தமும் வெளியாகிறதிங்கு.

4. **அருள்தானினி யானறியேன் அவன் என்னுள்**
**இருள்தான் அற வீற்றிருந்தான் இதுவல்லால்**
**பொருள் தானெனில் மூவுலகும் பொருளல்ல**
**மருள்தானீதோ மாயமயக்கு மயக்கே.** (8- 7- 3)

என்னுடைய அவித்யாதி ரூபமான இருள் போம்படி என்னெஞ்சிலே புகுந்து இருந் தான். இது அவனுக்கு அதிசயித புருஷார்த்தமாய் இரா நின்றது. அவாப்த ஸமஸ்த காமனான ஸர்வேச்வரன் தன்பக்கல் இப்படி வ்யாமோஹம் பண்ணுகை பொருந்தாது. இவ் வநுபவம் ஒரு ப்ரமமோ? என்று சங்கிக்கிறார். (இதுவல்லால் இத்யாதி) திருமாலையாண்டான் பணிக்கும்படி: "நாட்டார், ஐச்வர்யங்களில் தலையாய்ச் சொல்லுவது— த்ரைலோக்யைச்வர்யத் தையிறே; அதுவும் எனக்கு ஒரு சரக்கல்ல என்கிறார் ஆழ்வார்" என்று. அதாவது அவன் என்னுள் புகுந்தபின்பு எப்பேர்ப்பட்ட உயர்ந்த ஐச்வர்யமும் எனக்குப் பொருளல்ல என்று ஆழ்வார் திருவுள்ளமாக இங்கு நிர்வாஹம். இங்கு எம்பெருமானார் அருளிச் செய்யும்படி: "என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து எழுந்தருளியிருக்கிற இருப்பை யொழிய 'வீற்றிருந்தே ழுலகும் தனிக்கோல் செல்ல' இருக்கும் இருப்பையும் எம்பெருமான் தனக்கு ஐச்வர்யமாக நினைத் திருக்குமோ? என்று பார்த்தால், அதுவும் ஒரு சரக்காக நினைத்திருக்கிறிலன்" என்று. இதுவே ப்ரகரணத்துக்குச் சேருவது. பகவான் ஹேயமான என்னிடம் வ்யாமோஹம் பண்ணுவது

பொருத்தமில்லை என்பது ப்ரகரணம். அவ்வ்யாமோஹம் எப்படிப்பட்டது எனில் ஸர்வஜகத் ஸ்வாமியாய் வீற்றிருக்கும் இருப்பு ஆழ்வார் திருவுள்ளத்தில் வீற்றிருக்கும் இருப்புக்குத் துளியும் இணையாகாது என்று அவன் நினைத்திருக்கும்படி இருக்கும். ஆழ்வாருடன் கூடியிருப்பதையே பெரும்பேறாக விருப்புற்றிருக்கிறான் என்பது எம்பெருமானாரின் ப்ரகரணத்துக்குப் பொருத்தமான நிர்வாஹம். இங்கும் சேதனலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்றதே நடுவட்டமாக நிற்கும் பொருள்.

5. அருள்பெறுவார் (10—6—1) பாசுரத்தில்

**அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்கு—ஆழியான்**
**அருள்தருவான் அமைகின்றான் அதுநமது விதிவகையே**

என்பவை முதலிரண்டு அடிகள். இது ஆழ்வார் தமது நெஞ்சைக் குறித்து அருளிச்செய்வது; ஈச்வரன் நம்மை விஷயீகரிக்கையிலே ஒருப்படா நின்றான். "இப்படி எம்பெருமான் நமக்கு அருள்செய்யப் பாரித்து நிற்பது நம்முடைய பாக்யாநுகுணமாகவிறே" என்று திருமாலையாண்டான் பணிக்கும். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது; நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தான் என்கிறார்" என்றருளிச் செய்வர். அவன் ஸர்வஸ்வதந்த்ரனாய் தன் இச்சைக்குச்சேர அருள் செய்டலமாயினும், ஆச்ரிதபரதந்த்ரனாய் நின்று இவர் இசைவு கொண்டு, இவர் நியமனப்ரகாரம் கார்யம் செய்வானாய், இவர் கீறிய கோட்டைத் தாண்டவும் பயந்து நிற்பானாய் நின்றான். இதுவே அவனுடைய ப்ரணயித்வத்துக்கும் (ஆச்ரிதர் பேரிலுள்ள ராஸிக்யத்துக்கும்) பொருந்தும் என்பது எம்பெருமானார் காட்டும் பொருள்; "ந ச பரமபுருஷ அத்யர்த்தப்ரியம் ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்று ஸ்ரீ பாஷ்யத்தில் தாமே அருளிச்செய்துள்ளதை ஸ்மரிக்க. நிரங்குச ஸ்வதந்த்ரனாகிலும் ஞானியைத் தன் ஆத்மாவாக மதிப்பதால் அவனிடம் பரதந்த்ரனாயிருப்பதே ராஸிக்யத்துக்குச் சேரும்.

6. "கையார்சக்கரம்" என்ற திருவாய்மொழியில் (5—1)ல், தாம் அவனையேத்திப் பேசுவதேபோல் சில "பொய்யே கைம்மை" சொல்லி, "புறமே புறமேயாடி" (பொய்யும் வஞ்சமும் கலந்துபேசி, வெளி விஷயங்களில் மண்டியிருந்து) போந்திருந்தும் தமக்கு நிர்ஹேதுகமாக அருள்செய்ததைப் பேசி ப்ரீதராகிறார். இதில் 9-ம் பாசுரத்தில்,

**தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும்**
**ஆவாவென்றருள்செய்து அடியேனொடுமானானே**

என்பன ஈற்றடிகள்; அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தானத்தோடும் (அழகான திவ்யமங்கள விக்ரஹம்) அவ்வடிவுக்குச் சேர்ந்த திவ்யாயுதங்களோடும் "ஐயோ! ஐயோ!" என்று என்பக்கலிலே க்ருபையைப்பண்ணி என்னோடு வந்து கலந்தான் என்று ஆழ்வார் இனியராகிறார். திருச்சக்கரம் சங்கினொடும், அடியேனொடும் என்று அந்வயித்து திவ்யாயுதங்களோடு பொருந்தினாற்போல என்னோடும் (பொருந்தும்படி) வந்து கலந்தான் என்று திருமாலையாண்டான் நிர்வஹிக்க, எம்பெருமானார் கேட்டருளி, "இங்ஙனேயாகவடுக்கும்-கூராராழி வெண்சங்கேந்தி வாராய்" (6—9—1) என்றாயிற்று இவர் ஆசைப்பட்டிருப்பது; ஆசைப்பட்டபடியே திவ்யாயுதங்களோடு வந்து கலந்தான் என்கிறார்" என்றருளிச் செய்தாராம். அவன் சேஷித்வம் சிறிதும் குறையாமே அந்தரூபத்தோடு ஸொத்தான அடியேனொடுமானானே என்று பொருள்.

7. எம்பெருமானுடைய திவ்யசேஷ்டிதங்களையெல்லாம் பேசி அதனால் உள்கரைந்துருகுவதைச் சொல்லும் 'பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழி (5-10). இத்திருவாய்மொழி தொடங்கியபோது ஆழ்வார் "பிறந்தவாறும்" என்று ஆறு மாதம் மோஹித்திருந்ததாக ப்ரஸித்தம். அவனுடைய ஆச்சர்யமான ஆச்ரிதரக்ஷண சேஷ்டிதங்களைப்பேசி வருகையில்,

"வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" என்று 4-வது பாசுரத்தில் ருத்ரனுக்கு அருள்செய்ததைக் கூறுகிறார். இந்த அடிக்குப் பொருள்கூறுகையில் திருமாலையாண்டான் பணிப்பது: 'ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே நின்றதொரு முதல் களவுண்டு. அதைச்சொல்லுகிறது" என்று "மத்யே விரிஞ்ச கிரிசம் விஷ்ணு: ப்ரதமாவதாரம்" என்கிற படியே ஸர்வேச்வரன் முதலவதாரமான விஷ்ணுவாய் ப்ரஹ்ம ருத்ரர்கள் நடுவே அவர்களுக்கு ஸமமானவன் இவன் என்று தோற்றநின்ற எளிமை (இது ஒரு வஞ்சகப்—களவு என்றபடி) யைச் சொல்லுகிறது என்பது இந்த நிர்வாஹம். [இதை எம்பெருமானார் கேட்டு, "அழகிது; ஆகிலும் அத்தனை தூரம் தேடிப்போக வேணுமோ? இவன் தன் விஷயத்திலே முன்பு பண்ணின உபகாரத்துக்கு ஓரளவுண்டோ? இதுதானே அமையாதோ?" என்று அருளிச்செய்தார்.

இப்பாசுரத்தின் முதலடியிலேயே 'புரம்புக்கவாறும்' என்று த்ரிபுரமழித்த சரித்திரத்தை பேசுவதாலே, இந்த சரித்ரத்தில் ருத்ரனுக்குச் செய்த உபகாரங்களைச் சொன்னதாகச் சொன்னாலாகாதோ? வேறு சரித்திரம் தேடிப்போக வேணுமோ? என்று எம்பெருமானார் கருத்து.

வெள்ளநீர்ச்சடையான் என்று கங்காதீர்த்தத்தை (எம்பெருமானுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை) முடியில் தாங்குமவனைச் சொன்னதால் பெருமானுடைய உத்க்ருஷ்டம் பேசப் பட்டது. அவன் ருத்ரனுக்கு அந்த்ராத்மாகவும் ருத்ரன்கைவில்லிலும் பாணத்திலும் அந்த ராத்மாவாகப் புகுந்து நின்று த்ரிபுரஸம்ஹாரம் பண்ணி, 'இவன் செய்தான்" என்று ருத்ர னுக்குப் புகழ்வரும்படி அருளினன். இந்த சரித்திரம் ஆழ்வார் திருவுள்ளத்தில் ஒடுவதாகக் கொள்வதே ப்ரகரணத்துக்குப் பொருந்தும்.

Srivatsam

8. "பொலிக பொலிக" என்று தொடங்கும் திருவாய்மொழி (5—2). பொலிக! பொலிக! பொலிக! என்று "இந்த ஸம்ருத்தி (வளம்) நித்யமாகச் செலவேணும்" என்று மங்களா சாஸனம் பண்ணுகிறார் ஆழ்வார். ஆழ்வார் லோகத்தை தம் உபதேசத்தால் திருத்தியமை யால் வளர்ந்த ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைக்காண விண்ணுளார் (நித்யஸூரிகள்) வந்தாராக அவர்களைப் பல்லாண்டு பாடுகிறார் ஆழ்வார் என்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமலை யாண்டான் பணிக்கும்.

கீழே "நண்ணாதார் முறுவலிப்ப" (4—9) விலே உலகத்தில் வாழும் ஸம்ஸாரிகள் படும் துக்கத்தைக்கண்டு பேசி, மேலே 'ஒன்றும் தேவும்" (4—10) மிலே எம்பெருமானுடைய பரத்வத்தை "ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே!" என்று காட்டித்திருத்த, அத்தாலே ஸம்ஸாரிகளும் திருந்தினர். ஸம்ஸாரமான இவ்வுலகுக்கும் பரமபதமான விண்ணாட்டிற்கும் வாசியற்று அவ்விண்ணாட்டவரும் இங்கு வரலாம்படி இருக்கிற இருப்பைக் கண்டு இங்குள்ளாருக்குப் பல்லாண்டு பாடுகிறார் ஆழ்வார் என்று இங்குள்ளார் பக்கல் ப்ராதான்யம் தோற்றும்படி எம்பெருமானார் அருளிச்செய்வர். ஆழ்வாருடைய உபதேசம் எவ் வளவில் கார்யகரமாயிற்று என்பதை எடுத்துச் சொல்வதிலே நோக்கு. "தென்குருகைப் பிரான் பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத் தன்பத்தியென்னும் வீட்டின்கண் வைத்த இராமாநுச" னன்றோ?.

9. ஆழ்வாரை உபகரணமாகக் கொண்டு எம்பெருமான் தானே திருவாய்மொழியைப் பாடினன் என்று ஆழ்வார் சொல்லுவது "என்றைக்கும் என்னை" (7—9—1) என்ற பாசுரத்தில். "பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடி" என்கிறபடியே இங்கும். இப்படிப் பாடுவித்துக்கொண்ட உபகாரத்தை எப்படிச் சொல்வேன்? என்கிறார்.

இன்தமிழ் பாடியஈசனை ஆதியாய்
நின்ற என் சோதியை என்சொல்லி நிற்பனோ? (7—9—1)

என்று பாசுரத்தின் ஈற்றடிகள்.

ஸாரதியாய் நின்று வென்று வெற்றியை அர்ஜுனன் தலையில் ஏறிட்டாற்போல தானே பாடி என் தலையில் ஏறிட்டானித்தனை. இந்த உபகாரத்தை எப்படிச் சொல்லித் தலைக்கட்ட முடியும்? என்கிறார். இங்கு ஆளவந்தாரருளிச் செய்யும்படி–"ஸர்வேச்வரன் செய்யப்புக்கால் அரியதும் ஒன்றுண்டோ?" என்றாகும். அவன் இன்தமிழ் பாடியது அரிதாமோ? அவலீலையாய்ப்பாடிமுடித்திட்டான் என்றபடி. எம்பெருமானார் இதை இன்னும் பரிஷ்கரித்து அருளிச்செய்வது: "இவர்தாம் சொன்னாராகிலும் ஒருபடிபோகச் சொல்லித்தலைக்கட்டுவர்; அவனும் தானே சொன்னானாகில் நிரவத்யமாய்த் தலைக்கட்டும்; சிறு ப்ரஜை எழுத்திடப்புக்கால் தானே ஏதேனும் ஒருபடி இட்டுத்தலைக்கட்டும்; பிதாவாதல் உபாத்யாயனாதல் இடப்புக்கால் தானே எழுத்தாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, இவன் கையைப் பிடித்து இடுவிக்கப்புக்கவாறே, இவன் ஓரிடத்தே இழுக்க, அவன் ஓரிடத்தே இழுக்க, குதறிக்கொட்டியாய் ரூபமழிந்து சிதறிப்போம்; அப்படியே என்னை உபகரணமாகக் கொண்டு கவிபாடநேற்கச் செய்தேயும், என்னால் வரும் தோஷம் தன்பக்கல் ஸ்பர்சியாதபடி பாடுவித்தான் என்கிறார்" என்று.

ஒருசிறு குழந்தை தானே எழுதினால் ஒருவாறு எழுதி முடிக்கும். தகப்பனோ உபாத்யாயரோ எழுதினால் அது சரியான எழுத்தாய் இருக்கும்; குழந்தை கையைப் பிடித்து பெரியவன் எழுத ஆரம்பித்தால் எழுதுகோலை அது ஒருபக்கமிழுக்க, இவன் ஒருபக்கமிழுக்க ஓரெழுத்தும் புலப்படாமல் ஓரே குதறலாய் கிறுக்காயிருக்கும். ஆனால் எம்பெருமான் ஆழ்வாரைக் கொண்டு கவிபாடியபோதும், இவரால் வரக்கூடிய தோஷம் எதுவும் ஒட்டாதபடி அழகாகப்பாடி இது "சடகோபன் பாடல்" என்று ப்ரஸித்தி வரும்படியும் செய்து தலைக்கட்டினானே! இந்த உபகாரத்தை நினைத்து தரிக்க முடியவில்லை; தரித்து நின்று சொல்லவும் முடியவில்லை என்கிறார் ஆழ்வார்—என்பது எம்பெருமானார் கருத்து



10. திருவாய்மொழி இரண்டாம்பத்தின் இறுதித்திருவாய்மொழியான "கிளரொளி"யில் ஆழ்வார் திருமாலிருஞ்சோலை மலையாகிற தெற்குத் திருமலையை ஆச்ரயிக்கிறார். அம்மலையில் ஸாந்நித்யம் பண்ணும் சோலைமலையழகரை ஆச்ரயிக்காமல் மலையைப் பாடுவானேன்? என்ற கேள்விக்கு ஸமாதானமாக, "கீழ் எம்மா வீட்டிலே (2—9) நிஷ்கர்ஷித்த ப்ராப்யம் பெறுகைக்கு திருமலையை ஆச்ரயிக்கிறார்" என்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும். இதற்கு எம்பெருமானார் பணிப்பது: "அங்ஙனல்ல; இவர் (எம்மா வீட்டில்) பாட்டுதோறும் 'ஒல்லை' என்றும் 'காலக்கழிவு செய்யேல்' என்றும் த்வரிக்கப்புக்கவாறே, "இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமான தேசமேதோ?" என்று ஞாலத்தாரோடே நடந்து உழக்கிடப்பார்த்து வரச் செய்தே, 'இவ்விடம் சால ஏகாந்த ஸ்தலமாயிருந்தது" என்று (திருமாலிருஞ்சோலை) திருமலையிலே ஸந்நிதி பண்ணி, 'நாம் உமக்கு முகந்தருகைக்காக வந்து நின்றோம்; நீர் இங்கே வந்து நீர் நினைத்த வகைகளெல்லாம் பரிமாறி அநுபவியும் என்று தெற்குத் திருமலையிலே நிற்கிற நிலையைக் காட்டிக் கொடுக்க, இவரும் அத்தை அநுஸந்தித்து 'பகவான் ப்ராப்யனானால் அவன் வர்த்திக்கும் தேசமும் ப்ராப்யமாகக் கடவதிறே; அத்தாலே திருமலையோடு அத்தோடு சேர்ந்த அயன்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம் வழியோடு, 'போகக் கடவோம்' என்று துணியும் துணிவோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமாய் அநுபவித்து இனியராகிறார்" என்று. எம்பெருமான் உத்தேச்யனாய் ப்ராப்யமானாற்போல அவன் ஸந்நிதி பண்ணும் தேசமும் நமக்கு பரமப்ராப்யமாகும்; அதை அடைவதே நமக்குக் கருமமாகும் என்று துணிகிறார் என்பது உடையவா கருத்து.

11 எம்பெருமான் தம்முடன் புரையறக்கலந்ததை ஆழ்வார் நன்றிப் பெருக்குடன் கூறுவது (2-3-1).

தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும ஒத்தே

என்று இங்கு ஆளவந்தாரருளிச் செய்தாராக திருமாலையாண்டான் பணிக்குபபடி—'ஏகஜாதீயத்ரவ்யங்கள் தன்னிலே கலந்தாற்போலே'' என்று. அதாவது தேனும் தேனும், போலவும், அமுதும் அமுது போலவும். எம்பெருமானுர் ரஸகனமாக அருளிச் செய்யுமபடி; "தானும் நானுமான கலவிக்குள்ளே எல்லா ரஸங்களும் பிறக்கும்படி ஸம்ச்லேஷித்தான் என்கிருர்'' என்று. ஸர்வகந்தஸ் ஸர்வரஸ: என்கிற வஸ்துவன்றே கலககிறது; ஜ்ஞாநாநந்த வஸ்துக்களுடைய சேர்த்தியிலே ஸர்வரஸங்களும் பிறக்கும்படியாயிற்று கலந்தது. தேன், பால, நெய், கன்னல், அமுது இவை எலலாமே ஒன்ருகக் கலநதாலுண்டாகும் ரஸத்தைச் சொல்லுகிறது என்றபடி. இது இக்கலவி பிரிக்கப்போகாது என்பதற்கு த்ருஷ்டாந்தம்.

12. எம்பெருமானிடம் வண்டுகளைத் தூதுவிடும் பராங்குசநாயகி,
ஏறுசேவகனுர்க்கு என்னையும் உளள் என்மின்களே.

என்று செய்தி சொல்லுவது 6-1-10 ''வேறு கொண்டு'' என்ற பாசுரத்தில். இங்கு என்னையும் உளள்—நானும் இருக்கிறேன் என்றதற்குக் கருத்தாக ஆளவந்தார் நிர்வாஹமாக திருமாலையாண்டான் பணிப்பது: ''இத்தலையைப் பிரிந்தால் இருப்பாரிலலை என்ற தன்பெருமையை நினைந்து அவன் வராமலிருந்தானுகவேணும்; இத்தலையில் ஸத்தையை—(உயிருடனிருப்பதை) அறிவியுங்கோள்'' என்று. எம்பெருமானுர் பணிக்கும்படி 1 ''அழகான பொருள் தான்; ஆயினும தமிழர் ''இன்றியமையாமை'' என்பதொன்று உண்டு அதாவது உண்மையான ப்ரேமம் உள்ள இடத்தில் தலைமகன் இருக்கும்வரை தலைவியும் இருந்தே தீரும். ஒன்று இருவருமிருக்க வேண்டும்; அன்றேல் இருவரும் முடிய வேண்டும்; ஒருவர் முடிந்தால் மற்றவர் அதுவே காரணமாக முடிந்து விடுவர். தாம் (எம்பெருமான்) உளராகையால் இங்கும் (இவ்வாத்மவஸ்துவும்) உண்டென்பது நிச்சயம். ரக்ஷ்யவர்க்கங்கள் எல்லாரையும் ரக்ஷித்தாயிற்று—சேஷமில்லை என்றிருக்கிருராகவேணும். இன்னும் அவன் ரக்ஷணத்தை அபேக்ஷிக்கும் நானொருத்தி இருக்கிறேன் என்று அவருக்குச் சொல்லுங்கோள்'' என்று சொல்லுகிருள்''. இங்கு ஒரு இதிஹாஸம் ஸ்மரிக்கத்தக்கது (நாச்சியார் திருமொழி 5-6 ''என்தத்துவனை'' பாசுரவ்யாக்யானத்தில் உள்ளது) ''எனக்கு ஸத்தாஹேதுவானவன் வரும்படி கூவாய்' என்று குயிலை வேண்டுகிருள். தன் ஸத்தை அவனென்றிருக்கிருள். ராவணன் மாயா சிரஸ்ஸைக் காட்டினபோது ''ஸார்வபௌமனுயிருப்பானொருவன் கைப்பிடிக்க கடவன்'' என்று ஜ்யோதிர்வித்துக்கள் (ஜோஸ்யர்கள்) சொன்னவை பலிக்கக்கண்டிலேனே'' என்று புலம்பியும் உயிர் விடாமல் எப்படி பிராட்டி தரித்திருந்தாள்? என்ற கேள்விக்கு நஞ்ஜீயர் ஸமாதானம்: ''ஜ்ஞானமன்று இவள் ஜீவனத்துக்கு ஹேது; பெருமாள் ஸத்தையாய்த்து; அவர் உளராகையாலே (இவளும்) இருந்தாள் காணும்'' என்று.

13. திருப்புலியூர் எம்பெருமானுடைய விஜயபரம்பரைகளை அநுஸந்திக்கையில், செங்கதிராழி முதல் புகழும் பொருபடை யேந்திப் போர்புக்கசுரைப் பொன்றுவித்தான் என்று (8-9-3) ஆழ்வாரநுஸந்திக்கிருர். அசுரரைக்கொன்று குவித்ததால் வந்த புகழைச் சொல்லுகிறது. ''ஹேதிபிச்சேதநாவத்பி ருதீரித ஜயஸ்வந:'' என்கிறபடியே திவ்யாயுதங்கள்தான் அவனைப் புகழா நிற்கும் என்று ஆளவந்தார். திவ்யாயுதங்கள் நித்ய ஸூரிகளாகையாலே அவன் புகழ் பாடா நிற்பர் என்றபடி. இது புகழும், பொருபடை என்றதைப் பற்றி. இங்கு எம்பெருமானுர் நிர்வாஹம்: ''சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:'' என்று ராவணன போன்ற சத்ருக்களும் ''கையும ஆயுதமுமாய்ப் பொருத்தமிருந்தபடி என்!'' என்று புகழும்படியைச் சொல்கிறது என்று. அநுகூலரான சேதனர்கள் புகழ்வதில் வியப்பொன்றுமில்லை. ப்ரதிகூலரும் புகழும்படியிருக்கும் இவன் பெருமை.

14 எம்பெருமானை உடனே காணவேணும் என்று ஆர்த்தியுடன் கூப்பிட்டு அவன் வரக்கண்டு ப்ரீதரானமை பேசுவது ''மையார் கருங்கண்ணி'' என்ற திருவாய்மொழி. இவர் கூப்பிட்டவுடனே வரவில்லையாதலால் (தாழ்த்தே வந்தான் ஆதலால்),

மழைக்கன்று குன்றமெடுத்து ஆநிரைகாத்தாய் !
பிழைக்கின்ற தருளென்று பேதுறுவனே (9-4-3)

என்கிறார். இந்திரன் பெய்வித்த பெருமழையினின்றும் பசுக்களையும் கன்றுகளையும் இடைச் சாதியினரையும் அவர்கள் அபேக்ஷியாமலே ரக்ஷித்தாயே! "வரையாதே ரக்ஷித்த மஹாகுணம் எனக்கு உதவாமையாலே பிழைக்கப்புகா நின்றாய் என்று பேகணியா நின்றேன்" என்று ஆளவந்தார் அருளிச் செய்யும்படி. 'இந்த ஆச்ரிதரக்ஷணமாகிற மஹாகுணம் எனக்கு உதவாமல் போயினமையால் உனக்கு அவத்யமாகுமே" என்று ஆழ்வாருக்கு துக்கம் என்று ஆளவந்தார் நிர்வாஹம். பெரியாழ்வார் திருமாலிருஞ்சோலை அழகரிடம் 'உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேன். இனிப்போய் ஒருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயையழிவு கண்டாய்"(பெரியா. திருமொழி 5-9-3) என்பது காண்க.

இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "இது அழகான பொருள்தான்; ஆயினும் அவன் வாராமையால் தம்மிழவுக்கு நோவுபட்டிருக்கும் ஆழ்வார் அவனிழவுக்கு (அவத்யம் வருமென்று) நோவுபட்டாரென்கை இப்போதுள்ள நிலைக்குச் சேராது. "பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையை எடுத்து மறித்த இம்மஹா குணத்துக்கு நான் புறம்பாகிறேனே? என்று பேதுறா நின்றேன்" (துக்கப்படுகிறேன்) என்று அருளிச் செய்தாராம்.



பொருத்தங்கண்டும் ரஸிக்யத்துக்குச் சேரவும் பொருள் சொன்ன இடங்களில் சிலவற்றைக் காட்டினோம். இனி வேதாந்தப்ரக்ரியையிலே பொருள் சொன்ன இடங்களுமுண்டு. அவற்றில் இரண்டை அநுபவிப்போம்.

15. திருவேங்கடமுடையான் திருவடிகளில் கைங்கர்ய புருஷார்த்தத்தை வேண்டுவது "ஒழிவில்காலம்" என்ற திருவாய்மொழி (3. 3). இதில் ஆறும் பாசுரத்தில் முதலடி

வேங்கடங்கள் மெய்ம்மேல் வினைமுற்றவும்

என்பது. சரீரஸம்பந்தமடியாகப் பண்ணிய பாபங்கள் கைங்கர்யத்துக்கு விரோதியாக விக்னம் பண்ணுமோ? எனில், நாம் இதிலே துணியவே அவை எல்லாம் தன்னடையே நசிக்கும் என்கிறார். கடம் என்று கடன். 'கடன்கள், மெய்ம்மேல் வினைமுற்றவும், வேம் (நசிக்கும்)" என்று ஆளவந்தார் அருளிச் செய்யும்படி. மெய்ம்மேல் வினைமுற்றவும் — சரீரஸம்பந்தமடியாக வரக் கடவ பாபங்கள். கடன் என்று ரிஷிகளுக்கும், தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும் நாம் செலுத்த வேண்டிய கடமைகளைச் சொல்லும். இவைகளைச் சுமந்து கொண்டே நாம் வந்து பிறக்கிறோம். இங்கு எம்பெருமானார், "இதுக்கு வேதாந்தத்திற் சொல்லுகிற கட்டளையிலே பொருளாக அமையாதோ?" என்று இங்ஙனே அருளிச்செய்வர் "உத்தர பூர்வாகயோ ரச்லேஷ விநாசௌ" என்றும் "ஏவம் ஹாஸ்ய ஸர்வேபாப்மாந ப்ரதூயந்தே" என்றும் சொல்லுகிறபடியே வேம் என்கையால் பூர்வாகத்துக்கு நாசமும் உத்தராகத்துக்கு அச்லேஷமுமாகச் சொல்லுதல். பூர்வாகமாவது — ஞானப்பிறப்பதற்கு முன்பு புத்தி பூர்வகமாகப் பண்ணிப்போன ப்ராதிகூல்யம் (பாபம்). உத்தராகமாவது ஞானம்பிறந்தபின்பு ப்ரமாதிகமாகப் பண்ணிப் போரும் ப்ராதிகூல்யம். கடங்கள் — மேல் வினை முற்றவும் — வேம்; இது மெய் (ஸத்யம்). போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்ற திருப்பாவை (4)ம் பாசுரத்தில் படியே இங்கும்.

அகம் - பிழை - பாபம் : போயபிழை - கடங்கள்; - பூர்வாகம் இவற்றுக்கு விநாசம். இவை எரிந்துபோம் புகுதருவான் நின்றனவும் - மேல் வினை - உத்தராகம் : இவற்றுக்கு அச்லேஷம் - ஒட்டாமை ஏதம் சாரா என்னுமாபோலே.

16. "கங்குலும் பகலும்" (7-2) திருவாய்மொழியில், பத்தாவது பாசுரத்தில்

முடிவிவள் தனக்கொன்றறிகிலே னென்னும் மூவலகாளியே! என்னும்
கடிகமழ் கொன்றைச்சடையனே! என்னும் நான்முகக் கடவுளே! என்னும்
வடிவுடைவானோர் தலைவனே! என்னும் வண்திருவரங்கனே! என்னும்

என்பவை முதல் மூன்றடிகள் இங்கு திருமாலையாண்டான் கூறிய பொருள்:— மூவுலகாளியே! கடிகமழ்கொன்றைச்சடையனே! நான்முகக்கடவுளே! இத்யாதிகளால் சொல்லப்படுகிற வடிவுடை வானோர்களுக்குத் தலைவனே! என்று பராங்குசநாயகி பேச்சு இதைக்கேட்ட எம்பெருமானார், ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தபடி: த்ரைலோக்யத்துக்கும் கடவனை இந்த்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே! என்னும்; ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனே! என்னும்; எல்லார்க்கும் நிர்வாஹகனையிருக்கிற சதுர்முகனென்ற தேவதைக்கு அந்தர்யாமி யானவனே! என்னும் பகவதநுபவத்தால் வந்த ஹர்ஷம் வடிவிலே தோற்றும்படி இருக்கிற நித்யஸூரிகளுக்கு நாதனானவனே! என்னும்" என்று முன் யோசனையில் லீலாவிபூதி நாதத்வமொன்றே தோற்றும். உடையவர் யோசனையில் உபய விபூதிநாதன் என்பது ப்ரகாசிக்கும். எம்பெருமான் ஸர்வ நிர்வாஹகன் என்பதும் ப்ரகாசிக்கும்.



ஆக, எம்பெருமானார் நிர்வாஹமாக திருவாய்மொழி வ்யாக்யானத்தில் பொறிக்கப்பட்டுள்ள சில இடங்களை அநுபவித்தோம். திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டானிடம் அருளிச்செய்தபடி, ஆளவந்தார் திருவுள்ளத்துக்கிசையாத அர்த்தம் எம்பெருமானாருக்குத் தோற்றாதாகையாலே இவையாவும் ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தங்களே; எம்பெருமானார் மூலம் பரமாசார்யர் தாமே தம்மருளால் வெளியிட்டார் என்றே கொள்ளவேண்டும். ஆகையினாலேதான் திருமாலையாண்டானும் "ஆளவந்தாரிடம் கேட்கப்பெறாத அர்த்தங்களையும் இங்கு கேட்கப்பெற்றேன்" என்று ப்ரீதரானது. எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம் கதிபெற்றுடைய ராமாநுசன் அப்பரமாசார்யருக்கு "ஏகலவ்யனாய்" இருந்து அறியப்பெற்ற இனிய சீரிய அர்த்தங்களைத் தாம் திருவாய்மொழி கற்கையில் இடையிடையே வெளியிட்டருளினர் என்றுணர்க இதை வேதாந்த தேசிகனும் யதிராஜஸப்ததி ஸ்லோக வ்யாக்யானத்தில் ஸ்வாமி ஸ்ரீ ஸுதர்சநஸூரிந வ்யாக்யானமிடும்போது यामुनाचार्यस्य, द्रोणाचार्यस्य एकलव्य इव अहं इत्यभिप्रायेण ध्यानशब्द: என்று ஸ்பஷ்டமாகவே பொறித்துள்ளார். இங்கு "த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ அஹம்" என்று எம்பெருமானாருடைய திருவாக்காகவே—நேர்க்கூற்றாகவே தேசிகன் உதாஹரித்தது குறிக்கொள்ளத் தக்கது. இது தம்முடைய (தேசிகனுடைய) திருவாக்கல்ல; எம்பெருமானாருடைய திருவாக்கே என்று அறுதியிட்டபடி.

இக்கட்டுரை வரைவதில் அடியேனுக்கு ஊக்கமளித்துத் துணைபுரிந்த பேராசிரியர் Dr. V. V. ராமாநுஜம் ஸ்வாமிக்கு அடியேனுடைய நன்றி உரித்தாகும்.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்
எம்பெருமானார் திருவடிகளே சரணம்

— : 00 :——

# லோக திவாகரரும் ராமாநுஜ திவாகரரும்

மஹா வித்வான் ஸ்ரீ உ. வே. பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி





எம்பெருமானுர்

←திருமங்கையாழ்வார்

ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாரையும், ஆசாரியர்களில் எம்பெருமானுரையும் சேர்த்து அனுபவிப்பதில் ருசிகிளர்ந்து இக்கட்டுரையை வரைகின்றேன். இச்சேர்த்தியை முன்னோர்களின் திவ்ய ஸூக்திகளில் கண்டதனுல் இந்தருசி விளைந்தது. இராமாநுச நூற்றந்தாதி, ஆசார்ய ஹ்ருதயம், அதனுடைய வியாக்கியானம், பெரிய திருமொழி வியாக்யானம் இந்த திவ்யக்ரந்தங்களை மூலமாகக் கொண்டு அநுபவிக்கின்றேன் நூற்றந்தாதியில் (பா, 2)* குறையல் பிரானடிக் கீழ் விள்ளாதவன்பனிராமாநுசன்* * கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் கலைப்பெருமானுெலி மிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனுல் வலிமிக்க சியமிராமானுசன்* என்ற இரண்டு பாசுரங்களைக் கொள்வோம். *மண்ணியில் நீர் தேங்கும் குறையலூர் சீர்க்கலியன் தோன்றிய வூர்* என்ற உபதேச ரத்தின மாலையின்படி திருமங்கையாழ்வார் திருவவதரித்த தலம் திருக்குறைய லூராதலால், குறையல்பிரானென்பதும், குறையல் கலைப்பெருமானென்பதும் அவ்வாழ்வாருடைய திருநாமமாகும். அவருடைய திருவடிகளிலே எம்பெருமானுர் அன்பு பூண்டவர் என்றது ஸாதார

ணுக்தியாகும் அவ்வாழ்வாருடைய *ஒலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்கசீயமிராமாநுசன்* என்றது பரமவிலக்ஷணோக்தியாகும் கீழே*பண்டரு மாறன் பசுந்தமிழானந் தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுசமுனி வேழம்* என்கிற பாசுரத்தில், எம்பெருமானார் திருவாய் மொழியையதிகரித்து மதயானையாய் விளங்கினபடி சொல்லிற்று. இதில் திருமங்கையாழ்வாரருளிச் செயலையதிகரித்து மத்த கண்டீரவமாய் விளங்கினபடி சொல்லுகிறது சீயம்–சிங்கம், வடமொழியில் 'தாடீ பஞ்சகத்தில்,* ஜைநேப கண்டீரவ:* என்றது. ஜைநர்களாகிய மதயானைகளுக்குச் சிங்கம்போல் துயர்தருமவர் என்றது. அமுதனார் அநுபவிக்கும் ஸ்ரீராமாநுஜஸிம்ஹம் அங்ஙனே துயரம் தருமதன்று, பயங்கரமுமன்று. இந்த சீயத்திற்கு ஏற்றசீயம் எதுவென்றால்* அங்கமலத் தடவயல் சூழாலிநாடன் அருள்மாரி அரட்ட முக்கி அடையார்சீயம் கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கைவேந்தன் கொற்ற வேற்பரகாலன் கலியன். ஆக சீயமாயிருக்குந் தன்மையில் பரகாலனுக்கும் பெரும்பூதூர் மாமுனிக்கும் ஒற்றுமை உரைக்கப்பட்டதாயிற்று.

ஆசார்ய ஹ்ருதயத்திலிருந்து சில ஒற்றுமை நயங்கள் காட்டுவோம். அதில் முதற்பிரகரணத்தில் —"விப்ரர்க்கு கோத்ரசரணஸூத்ர கூடஸ்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள்; ப்ரபந்நஜந கூடஸ்தர் பராங்குச பரகால யதிவராதிகள்" (37) என்கிற சூர்ணையில் பரகாலரான திருமங்கையாழ்வாரையும், யதிவரரான எம்பெருமானாரையும் சேரவெடுத்திருப்பதுகாண்க. அது தன்னிலேயே இரண்டாம் பிரகரணத்தில் (5) * "தமிழ் மாமுனி திக்கு சரண்யமென்றவர்களாலே* க்வசித்க்வசித்தென்று இவராவிர்ப்பாவம்*கலியுங்கெடும் போலே ஸூசிதம்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாள மாமுனிகள்- "[*கலியுங்கெடும்போலே ஸூசிதம்] இவர்தாம் மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே *கலியுங்கெடுமென்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல்வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே." என்று இவ்விருவரையும் சேர்த்து அருளிச் செய்தமை காண்க,

அது தன்னிலேயே மூன்றும் ப்ரகரணத்தில் மேகமாகச் சொல்லுமதற்கு ஸ்வாபதேசமருளிச் செய்கிற (6) *பூண்டநாள் சிர்க்கடலையுட்கொண்டு* இத்யாதி சூர்ணையில் "புயற்கையருள்மாரி குணந் திகழ் கொண்டல் போல்வாரை மேகமென்னும்" என்று மூலகாரர்தாமே மேகஸாம்யத்திலே திருமங்கையாழ்வாரையும் எம்பெருமானாரையும் சேர்த்துப் பேசினர். *காரார்புயற்கைக் கலிகன்றி* என்றும், *அங்கமலத்தடவயல் சூழாலிநாடன் அருள்மாரி* என்றும் திருமங்கையாழ்வார்தாமே ஔதார்யத்திலே தம்மை மேக துல்யராகச் சொல்லிக் கொண்டனர். நூற்றந்தாதியில் அமுதனார் *குணந்திகழ் கொண்டலிராமானுசன்* என்றும் (104 *இராமானுசா எம் செழுங்கொண்டலே!* என்றும் *காரேய் கருணையிராமானுசா!* என்றும் பலவிடங்களில் எம்பெருமானாரை ஔதார்யத்திலேயே மேகமாகப் பணித்தார்.

திருமங்கையாழ்வாரருளிச் செயலில் எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியநுவாதம் சில காட்டுவோம்; பெரிய திருமொழியில் (3-7-3) *அஞ்சுவன் வெஞ்சொல் நங்காய்! அரக்கர் குலப்பாவை தன்னை வெஞ்சின மூக்கரிந்த விறலோன் திறங்கேட்கில்* என்றவிடத்து எம்பெருமானார் நிர்வாஹம் அற்புதமானது; திருவாய்மொழியில் (6-7) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப்பதிகம்போலே படுக்கைத் தலையில் நின்றும் பிரிந்துபோன மகளின் பிரிவுக்கு ஆற்றாத தாயின் பாசுரமாக அமைந்தது பெரிய திருமொழியில் *கள்வன் கொற்பதிகம். *உண்ணுஞ் சோற்றுப் பதிகத்தில் பராங்குச நாயகிக்கு (எம்பெருமானோடு

கூடவல்லாமல்) தனிப்போக்கு; *கள்வன்கொல் பதிகத்தில் வயலாலி மணவாளனோடு உடன்போக்கு என்கிற வாசி நினைவிலிருக்க வேண்டும். இதில் *அரக்கர்குலப் பாவை தன்னை வெஞ்சின மூக்கரிந்த விறலோன்திறங் கேட்கில்-அஞ்சுவன்* என்றிருப்பதன் உண்மைப் பொருள் விளங்குவது அரிது. சூர்ப்பணகையின் அங்கபங்கம் செய்த கதையைச் சொல்லி, அஞ்சுகின்றேனென்று கூறுகின்ற பரகால ஜநனியின் கருத்து என்ன? வயலாலி மணவாளன் அரக்கியின் மூக்கை அறுத்தது போல என் மகளின் மூக்கையும் அறுத்துவிடுவனோவென்று தாம் அஞ்சுவதாகவன்றோ பொருள் தோன்றுகின்றது. குணக்கடலாகிய எம்பெருமான் விஷயத்தில் இங்ஙனே நினைத்து அஞ்சுதல் கூடுமோ? இது குணஹாநி சொல்லுகிறபடியாகுமன்றோ? என்று பூருவர்கள் விசாரஞ் செய்யுமிடத்து, கிடாம்பியாச்சான் "துடுப்பிருக்கக் கைவேக வேணுமோ? எம்பெருமானார் இனிதாக நிர்வஹித்துப் பொருள் அருளிச் செய்து வைத்திருக்க நாம் ஏன் வருந்த வேண்டும்? என்று சொல்லி அப்பொருளையும் வெளியிட்டார்; அதாவது *அரக்கர் குலப்பாவை தன்னை மூக்கரிந்த விறலோன் என்றதனால் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நேர்ந்த பிரிவு நினைவூட்டப் படுகிறது. இராவணன் ஸீதையைக் கவர்ந்து சென்றதற்கு மூலகாரணம் அரக்கியின் அங்கபங்கமேயாதலால் இந்த அங்க பங்கத்தை ப்ரஸ்தாவிக்கும் முகத்தால் ஸ்ரீராம ஸீதைகளின் பிரிவுதான் தெரிவிக்கப்பட்டதாகும். ஆகவே முன்பு இருவருமாய் புறப்பட்டுச் சென்று ஒருவரையொருவர் பிரிந்து பலநாள் வருந்திக் கிடக்க நேர்ந்ததே. அங்ஙனே இப்போதும் இத்தம்பதிகளுக்கு ஏதேனும் விதிவசத்தாலே பிரிவு நேர்ந்து பரிதபிக்க நேருமோவென்று அஞ்சுகின்றேனென்று தாய் வருந்துவதாக எம்பெருமானார் நிர்வஹித்தருளினபடி. அற்புதமான நிர்வாஹமிது.

மற்றொன்றுங் கேளீர்; பெரிய திருமொழி ஆறும்பத்து ஏழாந்திருமொழி (பாட்டு4) *ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி ஒண்கயிற்றால் விளியா வார்க்கவாப்புண்டு விம்மியழுதான்* என்றவிடத்து வியாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை எம்பெருமானார் விஷயமாக ஓர் ஐதிஹ்யமருளிச் செய்கிறார் அதாவது—

வங்கிப்புரத்து நம்பி எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே பலகாலும் அநுவர்த்தித்து 'அடியேனுக்குத் திருவாராதன ப்ரயோக முபதேசிக்கவேணும்' என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார் ஆனாலும் உபதேசிக்க அவகாசப்படாமலே போயிற்று. இப்படியிருக்கையில் ஒரு நாள் கூரத்தாழ்வானுக்கும் ஹநுமத்தாஸர்க்கும் திருவாராதன க்ரமம் உபதேசிக்க நேர்ந்து உபதேசித்து முடிகிற ஸமயத்திலே வங்கிப்புரத்து நம்பி அங்கே வந்து சேர்ந்தார். அவரைக் கண்டவுடனே ஸ்வாமி திருவுள்ளம் அஞ்சி நடுங்கிற்று 'இவர் பலகால் கேட்டுக்கொண்டிருந்தும் இவர்க்கு உபதேசியா தொழிந்தோம்; இன்று இவ்விருவர்க்கு உபதேசிக்கும் போதாவது இவரையும் கூட்டிக்கொண்டு உபதேசித்திருக்கலாம். அதுவும் செய்யப்பெற்றிலோம். இவ்விருவகைக் குற்றங்களுக்கு ஆளானோமே! என்று அஞ்சி நடுங்கின உடையவர் வங்கிப்புரத்து நம்பியை நோக்கி அழகாக ஒரு வார்த்தையருளிச் செய்தார்; அதாவது எனக்கு நெடுநாளாக இருந்த ஒரு ஸந்தேஹம் இன்று தீரப்பெற்றது; 'ஒளியா வெண்ணெ யுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்றால், விளியாவார்க்க ஆப்புண்டு விம்மியழுதான்' என்றும் எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்கு நிலையும்.... ...அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்கும்' என்றும் ஆழ்வார்களருளிச் செய்கிறார்களே, உண்மையில் இப்படியிருக்குமோ, நியாமகனான எம்பெருமான் நியாம்யரானாரிடத்தில் அஞ்சி வருந்தக்கூடுமோவென்று ஸந்தேஹமுண்டாயிருந்தது; இப்போது உம்மிடத்தில் நான் அஞ்சி வருந்தினேனாகையால் அது ஸம்பாவிதமேயன்று துணியப்பெற்றேனென்றாராம். இப்படிப்பட்ட ரஸோக்திகள் அருளிச் செயல் வியாக்கியானங்களிலே பலபல காணலாம்*

முடிவாக ஒரு பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி கேளீர்: "தன்குடிக்கேதும்" (2-76) "நம்குடி என்னாதே 'தன்குடி' என்கிறாளாயிற்று "எம்பெருமானார் தர்சனம்" என்னுமாபோலே. நம்ப்ரதிபத்தியாலே சொன்னோமாகையன்றிக்கே பெருமாள் "இராமாநுசனுடையார" என்றே அருளிச் செய்வர். "பெருவிலையனான ரத்னத்தை நடுவே இட்டுக் கோத்தால் முன்னும் பின்னும் ஒக்க விலை போமாபோலே காண்" என்று பிள்ளான்.



திருநாராயணபுரத்தில் எம்பெருமானார் ப்ரதிஷ்டை செய்தருளிய திருநாராயணர்.



எம்பெருமானார் அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூர் கோயிலின் முகப்புத் தோற்றம்.

Srivatsam



பங்குனி உத்தரத்தன்று ஸ்ரீரங்க நாச்சியாரும் அழகிய மண வாளனும் கத்யத்ரயம் திருச்செவி சாத்தும் அவஸரம்.



திருப்புட்குழியில் இளையாழ்வார் யாதவப்ரகாசனிடம் காலக்ஷேபம் கேட்ட இடம்.

# திருவல்லிக்கேணியில் எம்பெருமானார்

**M. A. வேங்கடகிருஷ்ணன், M.A.**
(ஸம்ஸ்க்ருதத்துறை — விவேகாநந்தா கல்லூரி)

---

இந்த நிலவுலகில் ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, மறந்தோமென்ற இழவு மின்றிக்கே உய்யும் வழியைத்தேடாமல் உண்டியே உடையே என்று திரிவதைக் கண்ட காருணிகனான ஸர்வேச்வரன் நல்வழி தீவழிகளைப் பகுத்துணரும்படி தன் நியமனமான சாஸ்த்ரங்களைப் பிறப்பித்து இன்னருள் புரிந்தனன். குருடனுக்கு விளக்கின் ஒளி புலப்படாதாப்போல இவ்விருள் தருமாஞாலத் தூடே திரியும் ஸம்ஸாரிகளுக்கு சாஸ்த்ரங்கள் பயன்படாமல் போகவே, தன் ஆணையைத் தானே சென்று நடைமுறை நடத்தும் அரசன் போல ஸர்வேச்வரன் பல அவதாரங்கள் மூலமாய் இவர் களுக்குத் தன் மேன்மை நீர்மைகளைக் காட்டியும் திருந்தாததால், இவர்களை இவர்களோடு ஸஜாதிய ரான வ்யக்திகளைக் கொண்டே திருத்தவேண்டும் என்று சிந்தை செய்து தத்வதர்சிகளான ஆழ்வார் களையும், ஆழ்வார்களின் திருவுள்ளத்தைக் கையிலங்கு நெல்லிக்கனிபோல் கண்டு காட்டவல்ல மஹா புருஷர்களான ஆசார்யர்களையும் பிறப்பித்து உலகத்தைத் திருத்த முற்பட்டான்.



இப்படி அவன் செய்த பல முயற்சிகளில் மிகவும் பயனுற்றது நித்யஸூரிகளின் தலைவரான திருவநந்தாழ்வானை நியமித்து எம்பெருமானாராக அவதரிப்பித்தது. இந்த அவதாரத்தில் எம்பெருமான் தானும் திருவநந்தாழ்வானுடைய அவதாரத்தில் கலந்திருந்தான் என்று நம்பூர்வர் கள் ஸாதித்துள்ள வரலாறுகளிலிருந்து தெரியவருகிறது. "சமிதோதய சங்கராதி கர்வ:" என்ற யதிராஜ ஸப்ததி ( 13 ) ச்லோகத்தில் இராமாநுஜரான எம்பெருமானாரும் ராமாநுஜனான கண்ண னும் (இருவரும்) பொருள்படும்படி ச்லேடையாக அமைத்துத் துதி செய்கிறார். (இம்மலரிலேயே யதிராஜ ஸப்ததியில் இந்த சுலோகப் பொருள் காண்க.)

பிள்ளைலோகம் ஜீயர் பணித்துள்ள ராமாநுஜார்ய தீவ்யசரிதையில் ராமாநுஜரின் திருத் தகப்பனாரான ஆசூரிகேசவ ஸோமயாஜி வெகுநாள் மக்கட்பேறு இல்லாமையால் தம் மனைவி காந்திமதி யுடன் வந்து திருவல்லிக்கேணி ப்ருந்தாரண்ய க்ஷேத்ரத்தில் கைரவிணி புஷ்கரணிக்கரையில் புத்ரகாமேஷ்டி யாகத்தைப் பண்ணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமியைத் தமக்கு புத்ரஸந்தான மளிக்கும்படி வேண்ட, தானே வந்து அவர்களுக்கு மகனாகவந்து பிறப்பதாக வரமீந்து, உடனே வந்த பிங்கள ஆண்டு சித்திரைத் திருவாதிரையில் முன்பு தான் ராமாநுஜர்களாய் தசரதனுடைய புத்ர காமேஷ்டி பலனாய் வந்து பிறந்தது போலே ஆசூரி கேசவருடைய புத்ரகாமேஷ்டியின் பலனாய் ராமாநுஜராக வந்து பிறந்தான் என்று ஸாதித்துள்ளார். தம் தங்கையான காந்திமதிக்கு புருஷப்ரஜை பிறந்ததை யறிந்த பெரியதிருமலைநம்பி— திருமலையப்பனுக்கு வழுவிலாவடிமை செய்து கொண்டிருந்தவர் — த்வரித்து ஸ்ரீபெரும்பூதூர் வந்து அத்தெய்வீகச் சிசுவின் தேஜஸ்ஸைக் கொண்டாடி "இவன் விலக்ஷண கைங்கர்ய ஸம்பன்னனாக வளர்ந்து பெரும்புகழ் படைப்பான்" என்றறிந்து குழந்தைக்கு இளையாழ்வார் (லக்ஷ்மணன்—ராமாநுஜன்—ராமனுக்கு இளையோன்) என்று பெயரிட்டு மகிழ்ந்தார்.

திருவனந்தாழ்வானுடைய அவதாரம் என்ற ப்ரஸித்தி ஒரு புறமிருக்க, ராமாயண புருஷனான லக்ஷ்மணனை திருவனந்தாழ்வானுடைய அவதாரமாகவும் ஸாக்ஷாத் விஷ்ணுவின் அவதாரமுமாகக் கொண்டாடுமாப் போல, இளையாழ்வாரும் பகவதவதாரமே— திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதியின் அவதாரம் — என்று கொள்ள வேண்டும். நம் ஆசார்யர்களின் வாக்கே இதற்கு ப்ரமாணம். திருவல்லிக்கேணி ஸன்னிதியில் தொன்றுதொட்டு நடந்து வரும் உத்ஸவக்ரமும் இதற்கு ப்ரமாண

மாகும். எல்லா ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் வருஷ திருநக்ஷத்ர தினத்தன்று அவரவர்களுடன் திருவீதிப்புறப்பாடு கண்டருளும் பார்த்தஸாரதிப் பெருமாள் உடையவர் திருநக்ஷத்ர மான சித்திரைத் திருவாதிரையன்று புறப்பாடு கண்டருளுவதில்லை. உடையவர் ஸ்வஸ்தானத்தி லிருந்து பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவ கண்ணாடியறையில் உத்ஸவகாலம் பத்து நாளும் எழுந் தருளியிருந்து உத்ஸவம் பூர்த்தியானபின் ஸ்வஸ்தானம் எழுந்தருளுகிறார். இந்த பத்து நாள் உத்ஸ வத்தில் பஞ்சபர்வ புறப்பாடுகள், ரோஹிணிப் புறப்பாடு முதலியவைகள் பார்த்தஸாரதிப் பெருமாள் கண்டருள்வதில்லை. தானே எம்பெருமானாரானமையால் அவர்புறப்பாடு கண்டருளும் போது, தானும் கண்டருள அவச்யமில்லை என்று திருவுள்ளம் போலும்! எம்பெருமானார் உத்ஸவம் ப்ரஹ் மோத்ஸவ க்ரமத்தில் நடைபெறுகிறது இங்கு.

மேலும் எந்த ஆழ்வாராசாரியர்களுக்கும் இல்லாத முறையில் இருவேளையும் புறப்பாடு, கங்கைகொண்டான் மண்டபத்தில் மண்டபப்படிக்கு எழுந்தருளல், இயல்சாற்று விண்ணப்பித்தல் முதலியன இவருக்கும் ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெருமானைப் போலவே நடைபெறுகின்றன. இப்படி எம்பெருமானாரும் எம்பெருமானைப் போலவே உத்ஸவங்கள் கண்டருளுவதற்குக் காரணம் யதுபதியே யதிபதியாக அவதரித்தான் என்ற உண்மையே. எம்பெருமானைப் போலவே எம்பெருமானாரும் உபய விபூதியையும் (இவ்வுலகையும் அவ்வுலகையும்) உடையவரன்றோ!



திவ்யதேச மங்களாசாஸநார்த்தமாக ஸ்வாமி திருவல்லிக்கேணி எழுந்தருளி ஸ்ரீ பார்த்த ஸாரதியை மங்களாசாஸனம் பண்ணியதை ஆறாயிரப்படி மற்றும் இதர குருபரம்பரை வரலாறுகளில் காணலாம். இற்றைக்கும் ஸ்ரீபார்த்தஸாரதி யெம்பெருமான் திருமுன்பே உடையவர் எழுந்தருளி மங்களாசாஸநம் செய்யும் போது ஸாதிக்கும் கட்டியம் "ஸ்ரீ பார்த்தஸூத க்ருபாலப்த நிஜாவதார வைபவா எச்சரிக்கை" என்பதாகும்.

இவ்வாறு ப்ரமாணங்களாலும், ஐதிஹ்யத்தாலும் அநுஷ்டானங்களாலும் கீதாசார்யனுகிற ராமாநுஜனே அன்று ஐவர் தெய்வத் தேரினில் தானே செப்பிய கீதைக்கு பாஷ்யமிட ராமாநுஜராக அவதரித்தான் என்பது நன்கு விளங்குகிறது. எம்பெருமான் தானே அவதரித்து ஸகலவேதாந்த ஸாரமான கீதோபநிஷத்தை (ஸ்ரீமத் பகவத் கீதையை) அருளிய போதும், அதற்கும் பலர் அபார்த்தங் கள் செய்வதைக் கண்டு பொறுமல் தானே எம்பெருமானாராக அவதரித்து வேதாந்த உண்மைப் பொருள்களை ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம் முதலான க்ரந்தங்களின் வாயிலாக வெளியிட்டருளினான். இதனால் எம்பெருமானை அடிபணியாதவர்களும் எம்பெருமானாரை அடிபணிந்துய்ந்தனர் என்பதை

மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே
கண்ணுற நிற்கிலும் காணகில்லா உலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன் வந்து தோன்றிய வப்பொழுதே
நண்ணறு ஞானம் தலைக் கொண்டு நாரணற்காயினரே

என்ற அமுதனாரின் நூற்றந்தாதிப் பாசுரம் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டும்.

——:O:——



ஸ்ரீரங்கம் உடையவர் ஸன்னிதி. ஆழ்வானும் ஆண்டாளும் இருபுறமும் சித்ரரூபமாய் ஸேவை ஸாதிப்பதைக் காண்க. மேலே (லக்ஷ்மீ நாத ஸமாரம்பாம்) என்ற கணக்கில் ஆசார்ய பரம்பரை.



உடையவர் திருவாராதன எம்பெருமான் தேவப்பெருமாள். ஸ்வாமியுடன் பெருமாள் கோவிலிலிருந்து ஸ்ரீரங்கம் எழுந்தருளியவர் உடையவர் ஸன்னிதிக்கு இடது புறத்தில் தனி ஸன்னதியில் ஸேவை ஸாதிக்கிறார்.



ஸ்ரீரங்கம் உடையவர் மூலவர். தானான திருமேனி என்று கொண்டாடப்படும் திருக்கோலம். (பக்கம் 6)



ஸ்ரீரங்கம் உடையவர் உத்ஸவர். கூட ஆளவந்தாரும் திருவாராதன எம்பெருமான் சக்ரவர்த்தி திருமகனும்.

ஸ்ரீ:

# நம்பெருமாளும் நம்மிராமாநுசனும்

ஸ்ரீ. உ. வே. குண்டலம் R. திருமலாசாரியர் ஸ்வாமீ

ஸ்ரிய:பதியான பகவானுச்கு எப்போதும் அடிமை செய்து மகிழ்விக்கும் நித்யஸூரிகளுக்குள் முதல்வர் திருவநந்தாழ்வான் (ஆதிசேஷன்) எனலாம். இவரே ஸ்ரீமந்நாராயணனது திவ்யாஜ்ஞையை சிரமேற்கொண்டு, நாம் முன்பு உணராததும் ஆசார்யன் உணர்த்தியே உணரத் தக்கவையுமான உண்மைப்பொருள்களை நமக்கு உரைக்கும் பொருட்டு ராமாநுஜராக திருவவதாரம் செய்தருளினார். இவர் பரமக்ருபையுடன் நமக்குக் காட்டித்தந்த பல வேதாந்தப் பொருள்களுள் சிலவற்றை இவரது (961 வது) அவதார ஆண்டான பிங்கள வருட வைபவத்தையொட்டிச் சிந்தித்து மகிழ்வோம்.

வால்மீகி, பராசரர், வ்யாஸர், முதலிய மகரிஷிகள் வாயிலாக வெளியிட்ட சாஸ்த்ரங்களைக் காட்டிலும் பகவான் தானே சோதிவாய்திறந்து அருளிச்செய்தவை சிறந்தவை. மாயன் அன்று தெய்வத்தேரினில் செப்பியகீதை (பகவத்கீதை) இவைகளுள் மிகச்சிறந்ததாகும். இந்த கீதா சாஸ்த்ரத்தை அருளிச் செய்த ஸ்ரீபார்த்தஸாரதி திருவல்லிக்கேணியில் நம் புல்லியகண்களுக்கும் இலக்காகும்படி ஸேவை ஸாதிக்கிறான். இவனுடைய அநுக்ரஹத்தால்—“நாமே வந்து பிறக்கிறோம்” என்று ஸ்ரீபெரும்பூதூர் ஆஸூரிகேசவருக்கு அருளிச் செய்தபடி— நம்மிராமாநுசன் 960 ஆண்டுகளுக்கு முன் ஒரு பிங்கள ஆண்டில் நம்மை வாழ்விப்பதற்காக வந்து பிறந்தார்.

தன் அவதாரம் ஸத்யமென்பதையும், தன் அப்ராக்ருத திவ்யமங்களத்தைக் கொண்டே வந்து பிறக்கிறான் என்பதையும், தன்ஸங்கல்பமடியாகவே வந்து பிறக்கிறான் என்பதையும், தர்மம் வாட்டமடையும் போதெல்லாம் வந்து பிறக்கிறான் என்பதையும் பகவத்கீதையில் “ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய”, “ஸம்பவாம்யாத்மமாயயா”, “யதாயதாஹி தர்மஸ்யக்லாநிர் பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்”, இத்யாதிகளால் வெளியிட்டருளினான். “தர்மம் வாட்டமடையும் போதும் வந்து பிறக்கிறேன்” என்கையால் தான் தோற்றுவித்த தர்மம் வாட்டமடையக் கூடும், ஆனால் அழியாது என்று தெரிவித்துள்ளது நோக்கத்தக்கது. மேலும் இங்கு ஒரு விசேஷரஹஸ்யார்த்தம் உணரத்தக்கது. இங்கு பகவான் திருவாக்கு “ஆத்மாநம் ஸ்ருஜாமி” என்பது. மேலே “ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்” என்று ஞானிகளைத் தனக்கு ஆத்மாவாகச் சொல்லுகையால் தர்மம் வாட்டமடைந்து காட்டும் போது ஞானிகளை அவதரிப்பித்து லோகத்தை வாழ்விக்கிறேன் என்றானாயிற்று. தத்வமான தானே வந்து பிறப்பதைக் காட்டிலும் தத்வதர்சிகளான ஞானிகளின் பிறப்பினால் விளையும் பலன் அதிகமானது. அவன்தானே வந்துபிறந்து மேன்மையையும், எளிமையையும் காட்டின போதிலும் “அவஜாநந்திமாம் மூடா:” என்றபடி உலகத்தவர் உண்மைப் பொருளை உணரவில்லை. பகவதவதாரங்கள் பெரும்பாலும் கார்யகரமில்லதவையாயின.

ஞானியரில் தலைவரான இராமாநுசனது அவதாரத்தினால் “நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன; நாராயணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது” என்கிறபடியே, ஸ்ரீமந் நாராயணனையே பரமபொருளாகக் காட்டிய வேதங்களும் தர்மசாஸ்த்ரங்களும், இவைகளின் ஸாரமான அருளியச் செயல்களும் பொலிவு பெற்று ஓங்கின. அதனால் எல்லாவுலகத்தவர்களும் உண்மை நன்ஞானம் பெற்றவராய் வாழ்கின்றனர். க்ருபாமாத்ரப்ரஸன்னாசாரியராய் அனைத்துலகும்

வாழப்பிறந்த இவர் அவதரித்து நவநிதியாக ஒன்பது திவ்யக்ரந்தங்களை இயற்றியுள்ளார். அவற்றுள் ஐந்து வேதாந்தநூல்கள். பிற சமயங்களை மறுத்து விசிஷ்டாத்வைதக் கொள்கைகளை ஸ்தாபிப்பவை. ஒன்று ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமாலை வகையாக ஏற்று பூசிக்கக் கற்பிக்கும் நித்யம் என்பது. மற்ற மூன்றும் (கத்யத்ரயம்) பூர்வாசாரியர்கள் மனதுக்கிசைந்த (ஆசார்ய பரம்பரா ருசிபரிக்ருஹீதமான) ப்ரபத்தியை வெளியீட்டு விளக்குவதில் நோக்குள்ளவை.

ஸ்ரீரங்கநாதனே எல்லோரும் வணங்கத்தக்க பரதெய்வம் என்னும் உண்மையை உலகத்தாருக்கு எடுத்துரைத்து யாவரும் அவன் திருவடிகளை ஆச்ரயித்து உய்யவேண்டுமென்ற திருவுள்ளம் கொண்டு, திருவரங்கம் பெரிய கோவிலிலே ஒரு பங்குனி உத்தரத் திருநாளிலே பெருமாளும் பிராட்டியும் சீரிய சிங்காதனத்திலிருந்து வேத உபநிடதங்களைத் திருச்செவி சாற்றிய அளவிலே, ஸ்வாமி எம்பெருமானார் தெண்டன் ஸமர்ப்பித்து நிற்கையில், நம்முடைய பாக்ய விசேஷத்தினாலே ஸ்வாமி திருவுள்ளத்தில் ஸம்ஸாரபீதி நடையாட, அரங்கன் திருவடிகளிலே சரணம் புகுந்து, அந்த ப்ரகாரத்தை கத்யங்களினாலே அருளிச் செய்தார். இவை பெருமாளும் பிராட்டியும் அர்ச்சா ஸமாதியைக்கடந்து சோதிவாய்திறந்து ஸ்வாமியை அநுக்ரஹித்தமையைக் கூறுபவை என்பதை "லக்ஷ்மீபதேர்யதிபதேச்ச-பரமம்ரஹஸ்யம் ஸம்வாத ஏஷசரணாகதி மந்த்ர ஸார ।" என்று நம் பூருவர்கள் பொறித்து வைத்தனர்

"திருமகள் கொழுநனான பரமபுருஷனே மேலான-அடையத் தகுந்த-தெய்வம், அவனே பேறு; அப்பேற்றினைப் பெறச்சிறந்த ஸாதனம்—மூலஸுக்ருதம்—அவனே" என்ற உண்மைப் பொருளை நமக்கு உணர்த்திய ஆசார்யஸார்வபௌமரான எம்பெருமானார் இந்த கத்யமுகத்தாலும் தம் திவ்யாஜ்ஞையாலும் ஸ்ரீதத்வநிர்ணயம் செய்தருளியுள்ளதைச் சிறிது விவரிப்போம். ஸ்ரீ என்னும் சப்தத்தின் பல அர்த்தங்களில் ச்ரயதே-ச்ரீயதே என்பவை முக்கியமானவை. எம்பெருமானை இவள் ஆச்ரயித்து நிற்கிறாள்; அஸ்யேசாநா ஜகத: விஷ்ணுபத்நீ என்று ஸ்வாமினியாய் யாவராலும் ஆச்ரயிக்கப்படுகிறாள் என்றபடி.



பெரியகத்தியத்தில் முதலில் "பகவந்நாராயண" என்று துடங்கி நாச்சியாரைப் புருஷகாரமாகப்பற்றுகிறார். அவர் திருவடியில் சரணம் புகுந்து ஸ்வாமி வேண்டுவது இதுவே; நித்யகைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்திகி பகவச் சரணாரவிந்த சரணாகதி । யதாவஸ்திதா அவிரதா அஸ்துமே—எல்லா விதமான நித்ய கைங்கர்யங்களையும் பெறுதற்குறுப்பாக, உண்மையான எம்பெருமானது திருவடித்தாமரைகளிலேயாகின்ற என் சரணாகதியானது, அது அமையவேண்டிய ரீதியில் அமைந்து இடையறாததாய் எனக்கு ஸித்திக்க வேண்டும். கைங்கர்யப்ராப்திக்காக எம்பெருமான் திருவடிகளில் அடியேனுடைய சரணாகதி ஸபலமாகும்படி அநுக்ரஹிக்க வேண்டும்" என்று பிராட்டியை வேண்ட, பிராட்டியும் சோதிவாய் திறந்து "அஸ்துதே; தயைவஸர்வம் ஸம்பத்ஸ்யதே-அப்படியே ஆகுக; அச்சரணாகதியினாலேயே உமது அபிமதமெல்லாம் அழகாக ஸித்திக்குமாக" என்று அநுக்ரஹிக்கிறாள். இதற்கு மேல் வருபவை எல்லாம் எம்பெருமானைக் குறித்து அருளிச் செய்பவையே; முதல் முன்னம் பண்ணிய புருஷகார ப்ரார்த்தனையான ப்ரபத்தியை விட்டு, மேலே பிராட்டியைக் குறித்துக் கேட்பதாய் ஒரு வசனமும் இல்லாததை நோக்கினால் பிராட்டிக்குப் புருஷகாரபூதையான ஆகாரமே உண்டு; பலப்ரதன் எம்பெருமானே என்பது எம்பெருமானார் ஸித்தாந்தம் என்பது தெளிவாகிறது.

பங்குனி உத்தரத்திருநாளன்று நம்பெருமாள் முதலிலே ஸகல வாத்யங்களுடனும் விருதுகளுடனும் கோலாகலமாய் கத்யத்ரய மண்டபத்துக்கு எழுந்தருளி சிங்காதனத்தில் வீற்றிருந்தவுடன், நாச்சியர் ஒரு விதமான வாத்யம் விருது எதுவுமில்லாமல் எழுந்தருளி எம்பெருமான் பக்கலிலே ஆஸனத்தில் அமருகிறாள். பிராட்டியின் ஸ்ரீ பாதுகையாம் ஸ்ரீசடகோபனும் எழுந்தருளுவது கிடையாது. பின்னர் கத்யத்ரயம் விண்ணப்பமாகி, ஸகல உபசாரங்களும், அருளப்பாடுகளும், திருமஞ்சன கட்டியம், 18 ஸலவை மாற்றுதல் உள்பட்ட திருமஞ்சனமும் எல்லாம் நம்பெருமாளுக்கு மட்டுமே நடைபெற்றபின் நாச்சியார் முன்போலவே வாத்யங்களின்றித் தன் ஸந்நிதிக்கு எழுந்தருளுகிறார். பின்னர் நம்பெருமாள்

பிடுக்குடன் ஸகல வாத்யங்களும் கோஷிக்கப் புறப்பாடு கண்டருளி ஸ்ரீரங்க நாச்சியார் ஸன்னிதி முன்பு மேற்கு நோக்கித் திரும்பி நாச்சியாரைக் குளிர நோக்கி விடைகொடுத்துக் கோரதத்துக்கு எழுந்தருளுகிறார்.

மேலும், நம்பெருமாள் உத்ஸவ காலங்களில் நாச்சியார் ஸன்னதி வழியாக எழுந்தருளும் போதெல்லாம் தாயாருக்கு அர்ச்சனை, தூப தீபங்கள் முதலியவைகளை நிறுத்தி அவையாவும் நாச்சியார் ஸன்னிதியிலிருந்து நம்பெருமாளுக்கே ஸமர்ப்பிக்கப்படுகின்றன, இவ்வாசரணையினால் தெளிவாவது : திவ்ய தம்பதிகளுக்கே நம்போன்ற சேதனர்கள் அடிமை செய்து வாழ வேண்டும்; ஆயினும் பிராட்டி பகவானுக்கு அடிமை செய்வதையே புருஷார்த்தமாகக் கொண்டு ஜீவகோடியில் உள்ளவள் என்பதே எம்பெருமானாருடைய ஸித்தாந்தம் என்பதை உணரவேண்டும். உத்ஸவக்ரமங்களை வகுத்த உடையவர், தம் திவ்யாஜ்ஞையில் தம் ஸித்தாந்தத்தை இப்படி வெளிப்படுத்தியுள்ளார்.

"தென்னரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே" என்று நாம் போற்றும்படி பாக்யாதிசயம் படைத்தவர் நம் ஸ்வாமி எம்பெருமானாரே. திருவரங்கம் திருப்பதி ஸ்ரீபாஞ்சராத்ரம் என்று ப்ரஸித்தமாயிருக்க, தன் காலத்தில் ஸ்ரீவைகானஸமாக இருக்கலாகாதென்று, அந்த நம்பிமாரை நீக்கி "பாகவத நம்பிமாரை" நியமித்து, பரமேச்வரஸம்ஹிதா க்ரமத்தில் திருவாராதனம் நடக்கும்படி ஏற்படுத்தினர் பெரிய கோவில்நம்பி வசமிருந்த கோவில் நிர்வாஹத்தை ஆழ்வான் மூலமாக தானசாஸனமாகப் பெற்று, ஸன்னதி கைங்கர்யத்தைச் செவ்வனே நிறைவேற்றப் பலரை நியமித்துத் திருவரங்கச் செல்வம் மங்காமல் பொங்கும்படி நடத்தி வந்தார். திராவிட மறைகளான அருளிச் செயல்களின் துணைகொண்டு வேதாந்த ஸாரப் பொருள்களை வடமொழி நூல்களாக இயற்றிப் பரவச் செய்து மகிழ்ந்தார்.

திருவத்யயன உத்ஸவத்தில் அழகிய மணவாளன் திருமுன்பே ஆழ்வார்களை எழுந்தருளப் பண்ணி அரையர்களைக் கொண்டு அபிநய, வ்யாக்யானங்களுடன் ஆழ்வார்களின் அருளிச்செயல்களை இசையுடன் ஸேவிக்கச் செய்து அந்த பெரிய கோஷ்டியில் வீற்றிருந்து அநுபவித்துப் பின்னும் இப்படியே நெடுகி நடக்கும்படி செய்தருளினர். வேதமனைத்துக்கும் வித்தாகிய திருப்பாவையை தினமும் அநுஸந்தித்து வந்ததால் திருப்பாவை ஜீயர் என்றே அழைக்கப்படுவாராயினர்.

மார்கழி மாதம் முழுவதும் சிற்றம் சிறு காலையில் கதிரவன் குணதிசை பரவுவதற்கு வெகு முன்பே பெருமாள் திருவாராதனம் கண்டருளும் போது அரையர் தாளத்துடன் திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை இவைகளை அநுஸந்தானம் (வழக்கமாக நடக்கும் வீணாகானத்துடன் விச்வரூபம், பஞ்சாங்க ச்ரவணம், வேத, உபநிஷத் புருஷஸூக்தபாராயணங்கள் இவை யாவையையும் நிறுத்தி) நடக்கும்படி நியமித்தார். மேலும் ஸங்கராந்தியன்று திருப்பாவை சாற்று முறைக்காகத் தனிப்புறப்பாடு கண்டருளும் படியும் செய்தருளினர்.

ஸ்ரீராமாநுஜர் நம்பெருமாளை முதல் முதலாக மங்களாசாஸனம் பண்ணியபோது பெருமாள் சோதிவாய் திறந்து "நம் உபயவிபூதி ஐச்வர்யத்தையும் உமக்கு இஷ்டவிநியோகமாகத் தந்தோம்; இவற்றை உடையவராய் நீர் நம் கார்யங்களை ஆராய்ந்து கொண்டு போரும்" என்று செங்கோலையும் ப்ரஸாதித்து அநுக்ரஹித்து, "த்ரிவிக்ரமன் திருவீதியில் வடக்கு மாடவீதியில் கீழ்கண்டத்தில் முதல் மனையான சேரன் மடத்திலே நம் உடையவரை விட்டு வாருங்கோள்" என்று தம் பரிஜனங்களை நியமித்தமையால் இவருக்கு உடையவர் என்ற பெயர் ப்ரஸித்தமாயிற்று. ஆழ்வானை தர்சன நிர்வாஹத்துக்கு உசாத்துணையாக நியமித்து, முதலியாண்டானை உள்துறை கைங்கர்யத்திலே நியமித்து கோவில் நிர்வாஹத்தை நடத்தியருளினர்.

பெரிய கோவில் நம்பி ஆழ்வானால் திருத்தப்பட்டு உடையவரிடம் ப்ராவண்யம் மிக்கவராய் விளங்கினர். அவருடைய வாக்மாதுர்யத்தைக் கொண்டாடி உடையவர் "அமுதன்"

என்ற திருநாமத்தைச்சாற்றி மகிழ்ந்தார். அமுதனாரும் (திருவரங்கத்தமுதனார் என்பது இவரையே) தமக்கு உடையவரிடம் உள்ள பக்திக்குப் போக்குவீடாக, ஸ்வாமிக்கு உகந்தருளின நிலங்களிடத்தும் ஆழ்வாராசார்யர்களிடமும், உள்ள ஸம்பந்தத்தை அடியிட்டுப் பாட்டுதோறும் "இராமாநுசன்" என்ற திருநாமத்தையுமிட்டு எம்பெருமானார் திருவடிகளில் மெய்யன்பருக்கு நித்யாநுஸந்தேயமாம்படி நூற்றுஎட்டு பாசுரங்களைக் கலித்துறையந்தாதியாகப் பாடினார். உடையவரே இப்ரபந்தத்தை முழுதும் திருச்செவி சாத்தியருளிக் கொண்டாடித் தம் சிஷ்யர்களுக்கு நித்யாநுஸந்தானமாகும்படி நியமித்தார். இதனால் இப்ரபந்தம் ப்ரபந்ந காயத்ரி என்று அழைக்கப்படுவதாயிற்று. நம்பெருமாள் ஒரு ஸப்தாவரணத் திருநாளில், உடையவரைத் தம்முடன் கூட வரவேண்டாமென்று நியமித்து, திருவீதியிலே ஸகலவாத்யங்களையும் நிறுத்திவிட்டு இந்த நூற்றந்தாதியை ஸ்ரீவைஷ்ணவர்கள் பாடக்கேட்டருளி, போரவுகந்து, இந்த ப்ரபந்தத்தை இயற்பாவுடன் வரிசையுடன் அநுஸந்திக்கும்படி நியமித்தருளினான். அவ்வண்ணமே உடையவரும் இயற்பாவுடன் இப்ரபந்தத்தைச் சேர்த்து, இயற்பாமுழுவதையுமே திருவரங்கத்தமுதனாரே அரையருக்குப் பதிலாக ஸேவிக்கும்படி நியமித்தருளினார்.

இவ்வளவு சிறப்புகளுக்கிருப்பிடமான எம்பெருமானாருக்கு நம்பெருமாள் உகந்தளித்த சில ஏற்றங்களைப் பேசுவோம். அவரைத் தன் வஸந்தமண்டபத்திலே தங்கும்படி நியமித்து, ஸப்தாவரணத் திருநாள்தோறும் இராமாநுச நூற்றந்தாதியைத் திருச்செவி சாற்றிக் கொண்டே வந்து உடையவர் மடத்துக்கு முன்வந்து நின்று, ஸ்ரீ முதலியாண்டான் மூலம் தன் வருகையை அறிவிக்க, 'உடையவரும் கடுகவந்து மிகுந்தபாரிப்புடன் பெருமானுக்கு இளநீர் ஸமர்ப்பிக்க அதை ஏற்றபின் ஆஸ்தானம் சேருவான்.



தென்னரங்கர் செல்வம் மங்காமல் பொங்கும்படி காத்துக்கொண்டு 120 வருஷங்கள் தொண்டாற்றி ஒரு பிங்கள ஆண்டு மாகமாஸத்தில் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளினார் உடையவர். நம்பெருமாளும் மிகவும் வருந்தித் திருமுத்துதிர்த்து, உடையவருடைய சரமத்திருமேனியை வஸந்தமண்டபத்திலேயே திருப்பள்ளிப்படுத்தும்படி நியமித்து தான் வேறு இடத்தில் வஸந்தமண்டபம் ஏற்படுத்திக் கொண்டான். உடையவரிடம் அத்யந்த ப்ரியம் கொண்ட பெருமான் ப்ரதி வஸந்தோத்ஸவம் தோறும் தினமும் இவர் ஸன்னிதிக்கு எழுந்தருளி மகிழ்கிறான். அன்று முதல், மார்கழி முதலிலும் ஸங்கராந்தியன்றும், தனக்குத் திருவாராதனம் ஸமர்ப்பிக்கும் அர்ச்சகரையனுப்பி உடையவருக்கும் திருவாராதனம் பண்ணுவித்து, அங்குத்தை திருப்பள்ளியெழுச்சி ப்ரஸாதத்தை கொண்டுவரச் செய்து கோஷ்டிவிநியோகம் நடக்கும்படி நியமித்தருளினான்.

பகல்பத்து மூன்றும் திருநாளன்று திருப்பாவை ஜீயர் என்று ப்ரஸித்தி பெற்ற உடையவர் திருமுன்பே அரையர் நியமனம் பெற்று "மார்கழித் திங்கள்" பாசுரம் ஸேவித்த பின்னரே நம்பெருமாள் திருமுன்பே திருப்பாவையைத் தொடங்குவர். முதல் பாசுரம் வ்யாக்யானம் ஸேவித்து முடிந்ததும் உடையவர் ஸன்னிதியிலிருந்து அரையருக்கு பஹுமானம் வழங்கப்படும்.

ஆழ்வாராசார்யகளுக்கு ஸமுதாயமாக மரியாதைக்கு முன் அருள்பாடிட்டு அழைக்கும்போது திருநாவீறுடைய பிரான், கலியன் இராமாநுசன் என்று அருளப்பாடு. தனிப்பட நம்பெருமாள் முன் மரியாதை பெறும்போது இவருக்கு உடையவர் என்றே அருளப்பாடு.

இந்த பரமவைதிகமான ஸ்ரீவைஷ்ணவ (விசிஷ்டாத்வைத) ஸம்பரதாயத்தை உடையவர் அரும் பாடுபட்டு வளர்த்த செயலை உலகத்தவர்கள் அறிந்து போற்றும் பொருட்டு

எம்பெருமானார் தரிசனமென்றே இதற்கு
நம்பெருமாள் பெயரிட்டு நாட்டி வைத்தார்.

அது முதல் இந்த ஸத்ஸம்ப்ரதாயம் எம்பெருமானார் தரிசனமென்று வழங்கிப் போற்றப்பட்டு வருகிறது.

நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

# கோயிலொழுகு

என்ற திருவரங்க வரலாற்று நூலிலிருந்து சில சுவையான விஷயங்கள்

---

1. **இராமாநுசனை திருவரங்கம் அழைத்து வந்தது :** அழகியமணவாளப்பெருமாள் நியமனத்தினால் : திருவரங்கப்பெருமாளரையரை ஸ்தலத்தார் பெருமாள் கோவிலுக்குப் பயணம் பண்ணி அழைத்து வரும்படி அனுப்ப, (அவரும் அப்படியே அழைத்துவர, இராமாநுஜன்) கோவிலுக்கெழுந்தருளுகிற சேதி கேட்டருளின அழகிய மணவாளப்பெருமாளும் திருவணுக்கன் திருவாசலளவும் திருக்கைத்தலத்திலே எழுந்தருளி எதிர்கொள்ள; (வந்து ஸேவித்து நின்ற இராமாநுசனை) பெரிய பெருமாளும் குளிரக் கடாக்ஷித்து பரிவட்டம் முதலான வரிசைகளையும் செங்கோலையும் ப்ரஸாதித்து, ''நம்முடைய உபய விபூதியையும் உமக்கு இஷ்ட விநியோகார்ஹமாம்படி தந்தோம்; நீர் உபய விபூதியையும் உடையவராய் நம் காரியத்தை ஆராய்ந்து போரும்'' என்று அருள்பாடு ஸாதித்து, ''திருக்கிரமன் திருவீதியில் வடக்கு மாட வீதியில் கீழ் கண்டத்தில் முதல்மனையான சேரன்மடத்திலே உடையவரை விட்டுவாருங்கோள்'' என்று பரிஜனங்களை நியமித்தார்.



2. **உடையவர் ஸ்ரீகார்யம் நிர்வஹத்தது:** ஆழ்வானை தர்சன நிர்வாகத்துக்குத் தமக்கு உசாத்துணையாக நியமித்து, முதலியாண்டானை உள்துறை கைங்கர்யத்தில் நியமித்து, தாம் திருக்கொட்டாரவாசலுக்குத் தென் புறத்திலே உமிக்கட்டில் குறட்டிலேயிருந்து ஸ்ரீகார்யம் விசாரித்து அந்தந்த துறைகளை திட்டம் பண்ணவே, இப்படி விசாரிக்கிறது பரிஜனங்களுக்கு நிர்ப்பந்தமாய் காலதோஷத்தாலே (அவர்கள் உடையவருக்கு) விஷப்ரயோகாதி ஈதிபாதைகளைப் பண்ணினபடியினாலே, உடையவரும் திருவரங்கந் திருப்பதியை விட்டு இரண்டு வருஷம் திருவெள்ளறையிலே எழுந்தருளியிருந்து, அவ்விடத்திலே அழகிய மணவாளப்பெருமாளை எழுந்தருளப்பண்ணி, ஏரியும் கட்டி, பங்கயச்செல்வி ஸ்ரீகார்யத்தையும் தர்சன நிர்வாஹத்தையும் செய்து கொண்டு எழுந்தருளியிருந்தார்.

3. நம்பெருமாளுடைய திருமேனியில் பரிவும் ஔஷத சிகித்ஸையும் : மீண்டும் நம் பெருமாள் நியமனத்தினால் திருவரங்கம் திரும்பி ஸ்ரீகார்யம் விசாரித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கும் நாளில், ஒரு நாள் ஆண்டான் தத்யோதநத்துடனே நல்ல நாவல் பழத்தை அமுது செய்விக்க, பின்னர் உடையவர் அழகியமணவாளப்பெருமாளை ஸேவிக்க, முகம் வாடியிருக்கக்கண்டு, அமுது செய்த பதார்த்தத்தை விசாரித்து, ''தத்யோதநத்துடனே நாவல்பழம் அமுது செய்தபடியினாலே இப்படியாய்த்து'' என்று ஆண்டானை நிக்ரஹித்து, தம் சிஷ்யரான கருடவாஹன பண்டிதரைக் கொண்டு (கஷாயம் அமுது செய்வித்து) சிகித்ஸிப்பித்து, நித்யமாக ராத்ரி திருக்காப்பு சேர்க்கிறதுக்குமுன்பாக குடிநீர்பால் அலங்காரமாக வந்து அமுது செய்தருளும்படி திட்டம் பண்ணினார்.

4. **ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை :** ஒரு திருவத்யயன உத்ஸவத்துக்கு ஆழ்வார் திருநகரியினின்றும் ஆழ்வார் எழுந்தருளக் கூடாமல் சில உபாதிகள் உண்டாயிருக்க, எம்பெருமானார் தாமே கோவிலிலே ஆழ்வாரை திருப்ரதிஷ்டை பண்ணி வைத்து மற்ற ஆழ்வார்களையும் நாதமுனிகளையும் திருப்ரதிஷ்டை பண்ணிவைத்து, திருமொழித்திருவாய்மொழித் திருநாளுக்கு ஆழ்வார்கள் எழுந்தருள, பெருமாள் அருளப்பாடு முதலானவரிசைகளை ஆழ்வார்களுக்கு ஸாதித்து அவர்களுக்குக் கரண பூதரான அரையருக்கு அருளப்பாடு ஸாதிக்கும்படி பண்ணி ஆழ்வார் ஸந்நிதியைப் போலே நடக்கும்படி திட்டம் செய்தருளினார்.

**5. உடையவர் திக்விஜயம் :** உடையவரும், "திக்விஜயம் செய்யவேணும்" என்று திருவுள்ளம் பற்றி ஆழ்வானை யாத்ராஸஹாயராக்கி, ஆண்டானை ஸ்ரீகார்யநிர்வாஹகராக்கி ஆண்டானுக்குச் செங்கோல் ப்ரஸாதிக்கும்படி ஸந்நிதியிலே விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் போரவுகந்தருளி, "உமக்குப் பாதுகையான தாசரதி நம்வீட்டை ஆளக்கடவர்; நீர் நம்முடைய ஆராமங்களையும் ஒரு ஒருக்கிட்டு நம்தர்சனத்தில் களையறுத்து, எம்பெருமானார் தர்சநமே ஸர்வோத்க்ருஷ்டம் என்று நாலுதிசையிலும் ஜயஸ்தம்பம் நாட்டிவாரும்" என்று விடை ஸாதித்து, ஸகல வரிசைகளும் ஸாதித்து, முதலியாண்டானுக்குச் செங்கோல் வரிசையும் ஸாதித்தருளினார்.

உடையவரும் திவ்யதேசங்களை மங்களாசாஸனம் பண்ணி ஜயஸ்தம்பமும் நாட்டி ஸகலதேச ராஜாக்களையும் தத்தத் தேச வித்வான்களையும் திருவடிகளில் சேரவிட்டுக் கொண்டு சாரதா பீடத்திலே ஸரஸ்வதியாலே ஸத்க்ருதராய் ஸ்ரீ பாஷ்யகாரர் என்கிற திருநாமத்தை லபித்து, தெற்கே ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகர் விஷயமாக மநோரதித்த அர்த்தத்தைத் தலைக்கட்டினபடியாலே* கோயிலண்ணன் என்ற திருநாமத்தையும் அடைந்து கோயிலேற எழுந்தருளினார்.

**6 கல்தச்சன் விஷயம் :** இப்படி நடக்கிற நாளிலே, ஒரு கல்தச்சன், முன்பு கோசாலை கட்டுகிறபோது ஒரு கல்லின் நடுவிலே தேரையும் தண்ணீருமிருக்கக் கண்டு, "கல்லின் நடுவிலேயிருந்த தேரைக்கு ஜீவனம் கல்பித்த ஈச்வரன் நமக்கும் நடத்துவன்". என்று தொழிலைவிட்டு பரந்யாஸம் பண்ணித்திருமுடிக்குறையிலே நிர்வ்யாபாரனாயிருக்க, அழகிய மணவாளப் பெருமாள் ப்ரதிதினமும் இராமாறு திருவொத்த சாதத்தைக் கொண்டு போய் அவனை புஜிப்பித்துக் கொண்டிருக்க, சில காலத்துக்குப் பின் அவன் மரித்த செய்தியைக் கேட்டு உடையவர் "இன்றைக்கானாலும் அழகிய மணவாளப் பெருமாள் வெறுந்தலையுமாய் சோறுசுமவாமல் ஸுகமாயிருப்பர்" என்றருளிச் செய்தார்.

**7. மேல் நாட்டிலிருந்து திரும்பிய பிறகு சிஷ்யர்களுக்கு அநுக்ரஹம் :** உடையவர் (மேல் நாட்டிலிருந்து) எழுந்தருளின சேதியைக் கேட்டுக் கொண்டு, குலோதுங்க சோழன் (க்ருமிகண்டனின் மகன்) கோயிலுக்கு வந்து எம்பெருமானாரை ஸேவித்து, கோயிலதிகாரம் தனக்குப் பணியில்லாதபடி தாரா பூர்வகமாக தாநசாஸனம் பண்ணிக் கொடுத்துத் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணும் என்று விண்ணப்பஞ் செய்ய, உடையவரும் உகந்தருளி அந்தச் சோழனை ஆண்டான் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்து திருவரங்கந்திருப்பதியை ஆண்டானுக்கு தாராபூர்வகமாக தாநசாஸனம் பண்ணுவித்து இந்த வ்ருத்தாந்தத்தை ஆரியபட்டாள் வாசலிலே சிலாலிகிதம் பண்ணுவித்தார்.

பிறகு உடையவரும் யதாபூர்வமாக ஆண்டானைக் கொண்டு ஸ்ரீகார்யத்தை நடத்துவித்துக்கொண்டு வருமளவில் ஒரு மஹோத்ஸவத்தில் தாநப்ரகரணத்திலே உபகாரஸ்ம்ருதியாலே பெரியநம்பி குமாரருக்கு மாடமாளிகை சூழ் திருவீதியில் கீழ்மாடத்திரு வீதியில் தென் கண்டத்தில் மேல்புறத்தில் ப்ரதமநிவேசநமான ஆளவந்தார் மடத்தையும் ஆழ்வானுக்கு அதுக்கு எதிர் மனையையும், ஆண்டானுக்கு அதுக்குத் தென்மனையையும் தானம் பண்ணுவித்து தானசாஸனமாக ஸ்ரீஸேநாபதி பட்டயமும் ஸாதித்தருளினார்.

---

* "நாறுநறும் பொழில்" என்ற நாச்சியார் திருமொழி (9-6) பாசுரத்தில் மநோரதித்தபடி நூறு தடாக்கள் அக்கார அடிசிலும் வெண்ணெயும் ஸமர்ப்பித்ததற்கு உகந்து, தங்கை மனோரதித்ததை தமையன் தலைகட்டிவைக்கும் லோக வழக்கையிட்டு ஆண்டாள் உடையவரைத் தம் அண்ணராக அபிமானித்தருளி பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளாயினள்.

**8. அந்திமகால விஷயங்கள் :** இப்படி எம்பெருமானார் முதலிகளுடன் வாழ்ந்தருளி, பெருமாள் ஸந்நிதியிலே தன்னுடைச் சோதிக்கு விடை பெற்றுத் திருநாட்டுக் கெழுந்தருள;

ஸ்ரீ சைல பதி துரந்தரரான கந்தாடையாண்டானும், பெருமாள் நியமனத்தினாலே அகளங்கன் திருவீதியில் தென் கீழ்புறத்தில் சுந்தர பாண்டியன் துலாபுருஷமண்டபத்திலே யதிராஜனையும் உத்ஸவரையும் ப்ரதிஷ்டிப்பித்து, மார்கழி மாதம் முப்பது நாளும் பெரிய ஸந்நிதி நம்பிமார் எதிராஜனுக்குத் தளிகை அமுது செய்யப்பண்ணவும், திருமொழி திருவாய்மொழித் திருநாளிலேயும் இயற்பாவன்றைக்கும் ஆழ்வார்களுடனே ஸந்நிதிக்கு எழுந்தருளும்படி திருநக்ஷத்ர உபலாளனமும் ஏழுநாளாகப்பண்ணி, திருநக்ஷத்ரத்தன்று ஆழ்வார்கள் போலே ஸந்நிதிக்கெழுந்தருளி, மஹோத்ஸவத்தில் ஸப்தாவரணத்தின் அன்று தன் திருவாசலிலே திருக்கைத்தலத்திலே பெருமாளை மங்களாசனம் பண்ணும் படியும் பண்ணுவித்து பெருமாளுக்கு அனைத்தழகும் கண்டருளப் பண்ணுவித்தார்.

**9, உடையவார் திருநாமங்கள் :** (1) பெரிய திருமலைநம்பி நாமகரணம் பண்ணின பேர் இளையாழ்வார்; (2) ஆச்ரமஸ்வீகாராநந்தரம் தேவப்பெருமாள் ஸாதித்தது யதிராஜன்; (3) கோயிலுக்கு கெழுந்தருளின போது பெருமாள் ஸாதித்தது உடையவர், (4) ஆத்மகுணத்தாலே திருக்கோட்டியூர் நம்பிக்கல் பெற்ற பேர் எம்பெருமானார்; (5) கோதை சூடிக் கொடுத்த நாய்ச்சியார் சாத்தின திருநாமம் **கோயிலண்ணன்**; (6) சாரதா பீடத்தில் ஸரஸ்வதி சாத்தின திருநாமம் ஸ்ரீபாஷ்யகாரர்; (7) ஸ்வமாஹாத்ம்யத்தினாலே சதாபிஷேகம் கண்டருளி லபித்த பேர் யதிராஜன்; (8) பெரிய நம்பிஸாதித்தது ராமாநுஜன். ஆக ஏழு நாமங்களிலேயும் பெரிய நம்பியும் பெரிய பெருமாளும் ஸாதித்த திருநாமங்கள் இரண்டுமே பட்டப்பேராய் அருளப்பாடு ஸாதிக்கிறது.

Srivatsam



**திருமலை**யப்பன் **உ**த்ஸவர். ப்ராசீன கௌதுக பேரம். எம்பெருமானார் இவரை **உத்**ஸவராக ப்ர**தி**ஷ்டிப்பித்தார். (பக்கம் 14)



**திருப்பதி ஆண்டா**ளும் **கோவிந்த**ராஜனும். **சித்திரக்கூடம்** அழிந்தபோது **திருப்பதியி**ல் **இந்த எம்**பெருமானை பார்த்தசாரதி **கோவிலில் தனி** சன்னதி **கட்டி ப்ரதி**ஷ்டிப் பி**த்து திருவேங்**கடத்தானுக்கும் **இவருக்கும்** வாசியில்லா மல் **இருக்கும்படி** அபிமானித்**தருளினார். ஆண்டாளை** ஐச் **வர்ய** வர்த்**தகரார்த்தமாக** பெருமாளுக்கு வலதுபுறத்**தில் த**னி ஸன்னி**தியி**ல் ப்ரதி**ஷ்**டிப்பித்**தார்.** (பக்கம் 14)

**தென் தில்லைச் சித்திரகூடத்தென் செல்வனை-மி**ன்னி மழை **தவழும் வேங்கடத்தெம் வித்தகனை** (பெரிய **திருமடல்**)



திருமலையில் எம்பெருமானுர் வேதார்த்த ஸங்க்ரஹம் ஸாதிக்கும் அவஸரமாக ஞானமுத்திரையுடன் திருக்கோலம். ஸ்வாமியின் ஜீவிய காலத்தில் திருமலை அனந்தாழ்வான் ப்ரதிஷ்டிப்பித்த திருமேனி. (பக்கம் 19)



திருமலையில் அனந்தாழ்வான் ப்ருந்தாவனம். அனந்தாழ்வான் இங்கு செண்பக விருக்ஷமாக இன்றும் ஸேவை ஸாதிப்பதாக நமது பெரியோர் துணிபு. (பக்கம் 17)

# திருவேங்கடமுடையானும் எம்பெருமானாரும்

ந்யாய வேதாந்த வித்வான்
ஸ்ரீ. உ. வே. தி. அ. க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி
திருப்பதி

திருவநர்தாழ்வானுடைய அவதார பூதராய் எம்பெருமானார் என்று குலாவப்படுகிற பகவத் ராமாநுஜ முனிவர் ஸகல சாஸ்த்ரங்களிலும் நிபுணராகி வடமொழி தென் மொழிகளை அங்கோபாங்கங்களுடன் ஆழ்ந்து நோக்கி அவற்றிலுள்ள ஸாரதமார்த்தங்களைத் திரட்டித் தாமருளிச் செய்த வேதார்த்த ஸங்க்ரஹ ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களின் வாயிலாக ஜீவாத்ம ஸ்வரூபம், பரமாத்ம ஸ்வரூபம் புருஷார்த்த ஸ்வரூபம் உபாயஸ்வரூபம் விரோதி ஸ்வரூபம் எனப்படுகின்ற அர்த்த பஞ்சகத்தை விசதமாக அறிவித்தும், பாஷண்டிகளை வென்றடக்கி வேதமார்க்கத்தை ப்ரதிஷ்டாபனம் செய்தும், ஆங்காங்கே திவ்ய தேசங்களில் ஏற்பட்ட திருவாராதனத் தடைகளை நீக்கியும் மிகப் புனிதமான வைஷ்ணவ தர்மங்களை மேன்மேல் வளரச் செய்து கொண்டு ஸர்வ திவ்ய தேச ப்ரதாநமான ஸ்ரீரங்க திவ்ய நகரத்திலேயே பெரும் பாலும் எழுந்தருளியிருந்தார் என்பது ப்ரஸித்தமான விஷயம். இவர் திருமலையில் திருவேங்கட முடையானுக்குச் செய்தருளிய கைங்கர்யங்களைப்பற்றி அநுபவிப்பதே இந்த வ்யாஸத்தின் நோக்கு.

## திருவேங்கடத்தெம்பெருமான் திருமாலே என்று ஸ்தாபித்தது:

பண்டொரு காலத்தில் திருவேங்கடமுடையான் தன்பக்கல் பரமபக்தியுடையவனு யிருந்த தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அவன் விரோதிகளைத் தொலைப்பதற்குத் தன் திருவாழி திருச்சங்குகளைத் தந்தருளி இப்படி ஆச்ரித பக்ஷபாதத்தாலே தனது திவ்யாயுதங் களையும் தந்து உபசரிக்கும் ஔதார்ய குணம் உலகில் பரவுவதற்காக ஸுதர்சந பாஞ்ச ஜந்யங்கள் தரிக்காமலே இருந்திட்டான்.

எம்பெருமானார் திருவரங்கத்திலேயே எழுந்தருளியிருந்த காலத்தில் திருவேங்கடமுடை யானுக்குத் திருவாராதனம் செய்து வந்த அர்ச்சகர்கள் கைங்கர்யத்தில் ச்ரத்தை குறைவு காரணமாக யாதவராயனென்னும் அரசனால் தண்டிக்கப்பட்டு தேசாந்தரம் சென்று சேர்ந்தத னாலும், ஜ்ஞான சக்திகள் நிறைந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் அப்போது அங்கு இல்லாமையாலும், அர்ச்சகர்களின் முறைக் கேட்டினால் ஸ்ரீ வைஷ்ணவர்களிடம் வெறுப்புக் கொண்ட யாதவ ராஜனிடம் சில சைவர்கள் காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள வேண்டுமென்றெண்ணிச் சென்று சேர்ந்து மெல்ல அவனன்பைப் பெற்று ஒருநாள் இங்ஙனம் கூறலாயினர்.

“மஹாராஜனே! ஸ்வாமி புஷ்கரிணிக்குத் தென் கரையிலுள்ள பெருமான் ஸ்கந்தனே. அவனுக்குக் குமார ஸ்வாமி என்னும் பெயர் ப்ரஸித்தமாகவுள்ளதால் அவன் பக்கத்திலிருக் கும் அப்புஷ்கரிணியும் அவனுடைய பெயராலேயே ஸ்வாமி புஷ்கரிணி என்று அனைவராலும் வழங்கப்படுகிறது.

“ஸ்ரீ வேங்கடாசல மஹாத்ம்யத்தைக் கூறும் வாமந புராணப்பகுதி இரண்டாமத்யாயத் தில் ஸுப்ரஹ்மண்யன் வேங்கடமலையின் ஒரு குளத்தின் கரையில் தவம் புரிந்து கொண்டிருந் தான் என்று சொல்லப்பட்டிருப்பதால் இத்திருவேங்கடமலையில் தவம் புரியும்போது தன்

ஆயுதங்கள் வேண்டாமென்று எண்ணிய அவன் அவற்றை விட்டிருக்கிறான். ஆதலால் ஆயுதங்கள் தென்படவில்லை. ஸமீப காலத்தில் சில வைஷ்ணவர்கள் புராணப் பொருளை வேறுபடுத்திக் கூறி இப்பெருமான் விஷ்ணுவே என்று ஏமாற்றி ஆராதனைக்கு வேண்டிய சில வைஷ்ணவ பிம்பங்களையும் கோயிலில் புகுத்தி உத்ஸவாதிகளையும் கொண்டாடத் தலைப்பட்டனர். உண்மையில் இது ஸ்கந்தன் தவமியற்றுமிடமாகையால் சைவ க்ஷேத்ரமாகவே இருக்கத் தகுதிபெற்றுள்ளது. அரசே! தாங்கள் இங்கு சைவர்கள் விதிப்படியே பூஜையை நடத்தி வைக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர்.

அது கேட்ட யாதவராஜன் – "இதுவரை திருவேங்கடமலை விஷ்ணுக்ஷேத்ர மென்றும், அங்கு எழுந்தருளியுள்ள தேவன் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்றும், ஸ்வாமி புஷ்கரிணி விஷ்ணு தீர்த்தமென்றும் ப்ரஸித்தியிருந்து வருகிறது. ஸ்ரீ வைஷ்ணவர்களே இப்பெருமானுக்குப் பூஜா மஹோத்ஸவாதிகளை நடத்தி வருகிறார்கள். இப்படியிருக்க சைவர்கள் ஏன் இப்படி முரணைச் சொல்லுகிறார்கள்? இதன் உண்மை என்ன? இதை நன்றாக ஆராய்ச்சி செய்யாமல் திடீரென்று இதில் இறங்கி மாறுபடுத்துவது யுக்தமன்று" என்று நினைத்தான்.

அப்போது அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்களாலே ராஜஸபையில் புராணார்த்தங்களைக் காட்டி சைவர்கள் கூற்று பொய் என்று நிலைநாட்ட முடியாமையால் ஸ்ரீரங்கத்தில் தர்சன நிர்வாஹம் பண்ணிக் கொண்டு விளங்காநின்ற ஆசார்ய ஸார்வபௌமரான எம்பெருமானாருக்கு பத்ரிகை மூலமாக அங்குள்ள நிலைமையை விண்ணப்பம் பண்ணி, அங்கு உடனே எழுந்தருளும்படி ப்ரார்த்திக்கவே, ஸ்வாமியும் கடுக திருப்பதிக்கு எழுந்தருளி, யாதவராஜனைக் கிட்டி, சைவர்களையும் அழைத்து ஸபைகூட்டிப் புராண வசனங்களைக் கொண்டு திருவேங்கடம் வைஷ்ணவஸ்தலமென்றும் கோவிலில் ஸேவைஸாதிக்கும் திருவேங்கடமுடையான் விஷ்ணுவே என்றும் விசதமாக உபன்யஸித்தார். அங்குள்ள எம்பெருமானுக்கு நான்கு தோள்களுள்ளதைக்காட்டி கந்தனுக்கு பன்னிருபுஜமாகலாம், அல்லது த்விபுஜமாகலாம், சதுர்புஜம் கிடையவே கிடையாது என்றும் ஸாதித்தார். ஜகத் ஸர்வத்துக்கும் ஸ்வாமியானவன் திருக்கோயிலைச் சேர்ந்த புஷ்கரணி ஸ்வாமி புஷ்கரணி எனப்படுவதில் வியப்பொன்றுமில்லை என்றும் காட்டினார். சைவர்களும் விடாமல், "இங்கு ப்ராசீன வழக்கத்தை யொட்டி கால விசேஷங்களில் இன்றும் வில்வதளம் கொண்டு அர்ச்சனை நடக்கிறது. வில்வம் சிவனுக்கு அஸாதாரணமான பூஜைப் பொருளானதால் இது சிவக்ஷேத்ரமே" என்று வாதாட, எம்பெருமானாரும், "வில்வம் பெரிய பிராட்டியாருக்கு மிகவும் உகந்த வஸ்து வில்வ நிலையையாகப் பிராட்டி புராணங்களில் பேசப்பட்டிருக்கிறாள். ஸ்ரீஸூக்தத்திலும், "ஆதித்யவர்ணே! தபஸோதிஜாதோ வநஸ்பதிஸ்தவ வ்ருக்ஷோzத பில்வ:" (ஸூர்யனையொத்த காந்தியுடையவளே! வில்வமரம் உனது ஸங்கல்பத்தினால் உனக்கென்று இட்டுப்பிறந்தது) என்று ஓதப்பட்டுள்ளது. பிராட்டிக்கு உகப்பான வில்வதளத்தினால் அலர்மேல்மங்கையுறை மார்பனை எம்பெருமான் கால விசேஷங்களில் அர்ச்சிக்கப்படுவது பொருத்தமே" என்று ஸமாதானமருளிச் செய்தார்.

ராஜா தன்மனதில் இந்த எம்பெருமான் விஷ்ணுவே என்று த்ருப்திபடைந்த போதிலும் மத்யஸ்தன்போலவே காட்டிக் கொண்டதனால் எம்பெருமானார் அவனுக்கு ப்ரத்யக்ஷமாக நிச்சயம் பிறக்கும்படி "நான் எம்பெருமானுக்கு அஸாதாரணமான ஆயுதங்களான சங்கசக்ரங்களைப் பண்ணிக்கொண்டுவந்து வைக்கிறேன். சைவர்கள் ஸுப்ரஹ்மண்யனுக்கு அஸாதாரணமான ஆயுதங்களைக் கொண்டு வைக்கக் கடவர்கள். பெருமான் எந்த ஆயுதங்களை எடுத்துத் தரிக்கிறாரோ அதிலிருந்து எந்த தேவரென்று நிச்சிதமாகிறது" என்று சொன்னார். அரசனும் மகிழ்ச்சியுடன் ஸம்மதித்தான். இரண்டுவாதிகளும் அரசனுடன் திருமலையேறி, அன்றிரவு தாங்கள் தாங்கள் கொணர்ந்த ஆயுதங்களை ஸ்வாமி கர்ப்பக்ருஹத்தில் வைத்து ராஜ முத்திரையும் பண்ணுவித்துக் காவலாயிருந்து சிற்றஞ்சிறு காலையில் திருக்காப்பு நீக்கி உள்ளே சென்று பார்த்தவாறே, பெருமானும் பாசாங்குசங்களைத் தள்ளிவிட்டுத் திருவாழி திருச்சங்குகளை

திருக்கைகளில் தரித்து ஸேவை ஸாதிக்க, ராஜாவும் ஸேவித்து மிக மகிழ்வெய்தி எம்பெருமானார் திருவடிகளில் வணங்கிப் போற்றி, அவரைத் தனக்காசார்யராகக் கொண்டு, பொய் வாதங்களைச் சொன்ன சைவர்களைத் தக்கபடி தண்டித்து தன் நாட்டைவிட்டு விலக்கி விட்டான்.*

சைவர்களுடைய துர்வாதங்களும் அதற்கு எப்பெருமானார் தந்தருளிய பதில்களும் திருமலை அநந்தாழ்வான் பணித்த ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலையில் விவரமாகப் பேசப்பட்டுள்ளன. அங்கு கண்டு கொள்வது.

## கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜனை ப்ரதிஷ்டை செய்வித்தது :

அப்போது அவ்யபதேச்யனான சோழவரசன் பாபிஷ்டனாகையால் சைவப்பற்றுப் வைஷ்ணவத் வேஷமும் கொண்டு பல விஷ்ணு க்ஷேத்ரங்களைப் பாழாக்கிக் கொண்டுவரும் அடைவில், கண்வமுனிவரின் தவத்திற்கு உகந்து ஸேவைஸாதித்த ஸ்ரீ கோவிந்தராஜன் எழுந்தருளியுள்ள தில்லைத் திருச்சித்திரகூட க்ஷேத்ரத்தையும் அழிக்க, ஊரைவிட்டு ஓடிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிலர் தேவாதிதேவனென்று வழங்கப்படும் கோவிந்தராஜனுத்ஸவ மூர்த்தியைக் காப்பாற்றி எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து திருமலையடிவாரத்தில் (திருப்பதியில்) ஆராதித்து வருவதையும் மூலமூர்த்தியை அவ்வரசன் கடலில் எறிந்துவிட்டதையும் பகவத் ராமாநுஜ முனிவர் கேட்டு, புராணப்ரஸித்தமானதும் ஸ்ரீ குலசேகரப் பெருமாளாலும் திருமங்கை யாழ்வாராலும் மங்களாசாஸநம் செய்யப் பெற்றதுமான திருச்சித்திரகூட க்ஷேத்திரம் இப்படியாயிற்றே என்று திருவுள்ளம் நொந்து, 'கண்வமஹர்ஷியின் தவமும் ஆழ்வார்களின் மங்களாசாஸநமும் ஒரு நாளும் திவ்யதேசத்தின் ஹாநியைப் பொறுக்க மாட்டா மறுபடியும் அந்த க்ஷேத்ரத்தில் எம்பெருமான் ப்ரிதிஷ்டை கண்டருளப் போகிறான். ஆனால் இப்போது உத்ஸவபேரத்தை இங்கேயே ப்ரதிஷ்டை செய்விப்போம்' என்றெண்ணித் தமக்கு அந்தரங்க சிஷ்யனான யாதவராஜனைக் கொண்டு மூல பேரத்தைத் திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற மூலபேரத்தைப் போலவே ஏறியருளப் பண்ணி, அவருடன் உத்ஸவ மூர்த்தியான தேவாதி தேவனையும் ஸ்ரீ வைகாநஸாகமத்தின் படியே திருப்ரதிஷ்டை செய்வித்தருளினார்.

## திருமலையில் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை

இங்ஙனம் திருவேங்கட முடையானையும் கோவிந்தராஜனையும் சைவர்களின் உபத்ரத்வதிலிருந்து காப்பாற்றித் திருப்ரதிஷ்டை கொண்டருளும்படி செய்த எம்பெருமானார் யாதவராஜனுக்கு திவ்யாஜ்ஞையிட்டு அவனைக் கொண்டு பல காரியங்களைச் செய்வித்தருளினார்.

அவற்றுள் சில வருமாறு :—

**விமான ப்ரதிஷ்டை :** ஆனந்த நிலையமென்னும் ஸ்ரீநிவாஸனுடைய விமாநத்தைப் புதுப்பித்து ஸ்ரீவைகாநஸாகமத்தின்படி அதில் நான்கு பக்கங்களிலும் வராக நரஸிம்ஹ வைகுண்டநாத ஸ்ரீ வேங்கடேசர்களைப் பிரதிஷ்டை செய்வித்து, ஆதிசேஷன் விஷ்வக்ஸேனன் கருடன் த்வாரபாலகர் ஆகியவர்களையும் அந்தந்த ஸ்தானங்களில் ஏறியருளப்பண்ணுவித்தார்.

**வ்யூஹலக்ஷ்மியை திருமார்பில் அணிவித்தது :** திருவேங்கடமுடையானுடைய ஐச்வர்யம் ஸம்ருத்தியை யடைவதற்காக இரண்டு புஜங்களோடு விளங்கும் வ்யூஹலக்ஷ்மியை வராக புராணத்தில் கூறியுள்ளபடி வெள்ளிக்கிழமை, உத்தரபல்குநீ, சுக்லபக்ஷத்வாதசி இவை ஒன்றாகச் சேர்ந்த ரத்நமாலிகாயோகத்தில் அப்பெருமாள் திருமார்பில் உள்ள ஸ்வர்ண கண்டியில் ப்ரதிஷ்டை செய்வித்தார்.

* இந்த வியாஸத்தின் முடிவிலுள்ள பதிப்பாசிரியரின் அநுபந்தத்தைப் பார்க்கவும்.

**வெள்ளிக்கிழமைகளில் திருமஞ்சனம் கண்டருள ஏற்பாடு :** திருவேங்கடமுடையான் மூலவருக்கு நாள்தோறும் நடந்துகொண்டிருந்த திருமஞ்சனத்தை, திருமேனிக்கு நடக்கவேண்டிய மற்ற உபசாரங்கள் பூர்ணமாக நடத்துவதற்குத் தடையாக உள்ளதென்று நிறுத்தி, सह लक्ष्म्याऽभिषेकस्तु भार्गवे वासरे हरेः । सान्निध्यकारी सततं सर्वसम्पत्प्रदायकः ॥ [எம்பெருமானுக்குத் திருமார்பு நாச்சியாருடன் வெள்ளிக்கிழமையில் திருமஞ்சனம் செய்வது அத்திருமேனியில் அவனுடைய ஸாந்நித்யத்தை அதிகமாக்கவல்லதும் ஸர்வைச்வர்யங்களையும் அவனுக்கு விசேஷித்து உண்டுபண்ண வல்லதும் ஆகும்] என்ற வைகாநஸ ஸம்ஹிதாவசனப்படி வெள்ளிக்கிழமைகளில் மட்டும் திருமஞ்சனம் செய்யும்படி நியமித்தார்.

**நாச்சியார் திருமொழி அநுஸந்தானம் :** வெள்ளிக்கிழமைகளில் பெருமாள் திருமார்பில் ஸ்வர்ணகண்டியில் உள்ள பிராட்டி, திருமஞ்சனம் கண்டருள்வதற்காகத் திருமார்பிலிருந்து கிழிறங்கி திருமஞ்சனம் முடிந்தவுடன் மறுபடியும் திருமார்பில் ஏறியருளும் வரையிலுள்ள விரஹத்தை ஸஹியாத ப்ரக்ருதியாகையால் அதை மறந்து ஒருவாறு பொழுது போக்குவதற்காக, அப்பிராட்டியின் அபராவதார பூதையாய் பூமிதேவியின் அம்சமாய் அவதரித்த ஆண்டாள் எம்பெருமானையனுபவிக்க ஆசைப்பட்டு, அது கிடையாமையிலே அவனைப் பெறுகைக்காகக் காமஸமாச்ரயணம் செய்தது, அவன் பக்கல் தூதுவிட்டது இத்யாதிகளையனுஸந்தித்த நாச்சியார் திருமொழியை அநுஸந்திக்கும்படி நியமித்தார்.

**நெற்றியில் திருநாமம் அணிவித்தல் :** अष्टमीन्दुकलाधारललाटस्योर्ध्वपुण्ड्रकः [அஷ்டமீ சந்திரனுடைய வடிவு படைத்த (மூக்கில்இட்ட) பாதத்தில் நிலைபெற்று நெற்றியில் உள்ள திருமண் காப்பை அணிந்துள்ளவன் திருவேங்கடமுடையான்.] என்றுள்ள பாத்ம புராண வேங்கடாசலமாகாத்ம்யத்தின் 4வது அத்யாயச்லோகத்தைத் திருவுள்ளம் பற்றி, தேவதாந்தர சங்கைக்கு இடமில்லாதபடி மூலவர்க்குத் திருமண் காப்பு சாற்ற நியமித்தார்.

**மலையப்ப ஸ்வாமியை உத்ஸவயாக ப்ரதிஷ்டிப்பித்து :** திருவேங்கடமுடையானுடைய உத்ஸவபேரமான வேங்கடத்துறைவார் முன்பு அவதரித்த நாள் திவ்ய நகர அபிவ்ருத்திக்கும் திவ்யைச்வர்யாபிவ்ருத்திக்கும் தடையாக அமைந்ததென்று திருமலையிலுள்ள பெரியவர்கள் சொல்லக் கேட்டு, அப்போது அங்கு கௌதுக பேரமாயெழுந்தருளியிருந்த மலைகுனிய நின்ற பெருமாளான மலையப்பனை உத்ஸவபேரமாகவும், உத்ஸவபேரமான வேங்கடத்துறைவாரைக் கௌதுக பேரமாகவும் மாற்றி ப்ரதிஷ்டை செய்வித்தார்.

**நாகாபரணம் அணிவித்தது :** அந்த நாளிலே வீரநரஸிம்மதேவன் என்ற அரசன் தக்ஷிணதேசத்திலிருந்து திருவேங்கடம் சென்று எம்பெருமானை ஸேவித்து அவருக்குகப்பாக ஒரு கைங்கர்யம் பண்ணவேணுமென்று பெரியோர்களைக் கலந்தாலோசித்து ஒரு கோபுரம் கட்டுவது என்று நிச்சயித்து வேலையும் நடந்து கொண்டிருக்கையில் ஒரு ஸர்ப்பம் அவன் ஸ்வப்னத்திலே தோன்றி "ராஜனே, இந்த மலை என் உடலாயிருக்கும். நீ கட்டும் கோபுரம் மிகவும் பாரமாய் எனக்குப் பீடையாய் உள்ளது. என் ஸ்வாமியானவன் அருகில் போய் இந்த பீடையைப் போக்கிக் கொள்கிறேன்" என்று உட்புகுந்து திருவேங்கடமுடையான் வைகுண்டஹஸ்தத்தில் சுற்றிக் கொண்டிருந்தது. இந்த ஸ்வப்னத்தால் பயந்த அரசன் மறுபடியும் பெரியோர்களிடம் கேட்க, அவர்களும் "இம்மலை சேஷாசலம்; ஆதிசேஷனே இம்மலையாய் இருந்து எம்பெருமானை வஹிப்பதாக வராஹ வாமன புராணங்கள் கூறும்" என்று சொல்ல, மேலே கோபுர வேலையை உடனே நிறுத்திவிட்டு, ஒரு நாகாபரணத்தை ஸ்வப்நத்தில் கண்டது போலப் பண்ணுவித்து எம்பெருமானுடைய அனுமதி கொண்டு வைகுண்டஹஸ்தத்தில் சாத்தினான். எம்பெருமானார் பெருமாளை மங்களாசாஸனம் பண்ணும் போது இதை ஸேவித்து, இதன் வரலாற்றை அறிந்து கொண்டு அதேபோல இன்னொரு திருவாபரணத்தைச் செய்வித்து ஆச்ரிதர்கள் ஸேவிக்கையில் மனதுக்கும் கண்ணுக்கும் ரஞ்சகமாக இருக்கும்படி மற்ற ஹஸ்தத்திலும் சாத்துவித்தார்.

**வேங்கடத்தரியைத் திருமலைக் கோவிலில் ப்ரதிஷ்டை செய்வித்தது:** திருமலையில் அழகிய சிங்கர் ருத்ரனுக்கு ஸேவை ஸாதிப்பதற்கென்ற ஆவிர்ப்பவித்துத் தனிக் கோயிலில் எழுந்தருளி இருந்தார். ஒரு கால விசேஷத்திலே சைவர்கள் வந்து 'சிவனுக்கு ப்ரத்யக்ஷமானவர் இந்த வேங்கடத்தரி. இவர் பக்கத்தில் சிவப்ரதிஷ்டை செய்ய வேணும்' என்று மூன்றனர். அப்போது ஸ்தலவாசிகளான ஸ்ரீவைஷ்ணவர்களும் அர்ச்சகர்களும் இந்த விஷ்ணுக்ஷேத்ரத்திலே சிவப்ரதிஷ்டை அநுசிதம் என்று தடுத்து விட்டனர். பின்னர் அந்த ஸன்னிதியில் திருவாரதனத்தையும் நிறுத்தி விட்டனர். இந்த வரலாற்றைக் கேட்டறிந்த எம்பெருமானார், புராண ப்ரஸித்தராயும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திக்கு விஷயமாயுமுள்ள இந்த எம்பெருமான் திருவாரதனமின்றிக்கே இருக்கை இந்த ஸ்தலத்துக்கு ஆகாது. இவர் தனிக் கோயிலில் இருந்ததால் சைவர்களால் ஹானி வந்தது என்று பார்த்து, திருவேங்கடமுடையான் கோயிலிலேயே பெருமாளுக்கு ஈசான்யத்தில் விமாநாபிமுகமாய் இருக்கும்படி எழுந்தருளப் பண்ணி ப்ரதிஷ்டிப்பித்து திருவாராதனம் கண்டருளும்படி நடப்பித்தார். நரஸிம்ம அர்ச்சனம் நடக்குமிடத்தில் பிறரால் துன்பங்கள் உண்டாகாது என்ற சாஸ்த்ரார்த்தத்தைப் பற்றியே இப்படி நடத்தியருளியது.

**ஞானப்பிரானைத் தனிக் கோயிலில் ப்ரதிஷ்டிப்பித்தது:** வராஹப் பெருமானான ஞானப்பிரான் திருவேங்கடமலையில் ஸ்வயம் வ்யக்தராய் திருவேங்கடமுடையானுக்கும் முந்தின கல்பத்திலே திருவவதாரம் பண்ணியவர் என்று வராஹ பத்ம புராணங்களினால் ப்ரஸித்தம். இதனால் இவரைத் தனிக் கோயிலில் உத்ஸவருடன் ப்ரதிஷ்டிப்பித்து, த்ரிஸந்த்யையிலும் திருவேங்கடமுடையானுக்கு முன்பாக திருவாராதனமும் அமுதுசெய்தருளுகையும் நடக்கும்படியும் ஒரு நாள் அத்யயன உத்ஸவம் நடக்கும்படிக்கும் கட்டளையிட்டருளினார். பெரியோர்கள் வேங்கட வராஹத்தைத் திருவடி தொழுத பின்னரே திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் பண்ணுவர்கள்.

**திருவீதிகள்சமைத்து ப்ரஹ்மோத்ஸவம் நடக்க ஏற்பாடுகள் செய்தருளியது:** திருவேங்கடமுடையானுக்குப் புரட்டாசித் திருநாள் நடத்தத் திருமலையில் வீதிகள் இல்லாமையால், த்வஜாரோஹணமானவுடன் உத்ஸவரை எழுந்தருள்வித்துக் கொண்டு இறங்கி வந்து திருச்சானூரில் இரண்டு வேளைகளிலும் வாகனங்களுடன் உத்ஸவத்தை நடத்தி 9ம் நாள் காலையில் தீர்த்தவாரி முடிந்ததும் மாலையில் மறுபடி திருமலைக்குப் பெருமாளை எழுந்தருளுவித்துக் கொண்டு சென்று த்வஜாவரோஹணம் முதலியவற்றைப் பழைய அரசர்கள் செய்து வைத்தனர் என்று அங்கிருந்த வ்ருத்தர்கள் கூறக் கேட்டு, மிகப் புராதந காலத்தில் தொண்டைமான் சக்ரவர்த்தி போல்வார் நடத்தியபடி திருமலையிலேயே நடத்தவேணுமென்று நினைத்தருளிக் கோவிலுக்கு நாற்புறத்திலும் உள்ள மேடு பள்ளமான இடங்களைச் சரிப்படுத்தி, நான்கு பக்கத்திலும் பெருமாள் வாஹனத்துடன் புறப்பட்டெழுந்தருளுவதற்குப் பாங்காகத் திருவீதிகளையும் அவற்றில் இருபக்கங்களிலும் திருமாளிகைகளையும் நிருமிக்கச் செய்து திருமலையிலேயே எல்லா உத்ஸவங்களையும் நடப்பித்தருளினார்.

**திருமலையடிவாரத்தில் ஆழ்வார்கள் ப்த்திஷ்டை:** நம்மாழ்வார் 'திருவேங்கடம் சமன் கொள் வீடுதரும் தடங்குன்றமே', 'திருவேங்கடமாமலையொன்றுமே தொழ நம்வினையோயுமே', 'உய்யக் கொள்வான் நின்ற வேங்கடம் நீணிலத்துள்ளது சென்று தேவர்கள் கைதொழுவார்களே' என்றும் திருமழிசைப் பிரான் 'சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை நின்று வினை கெடுக்கும் நீர்மையால்', 'தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு' என்றும், திருமங்கை மன்னன் ஒரு காலுக்கு ஒன்பதின் கால் 'திருவேங்கடம் அடைநெஞ்சமே' என்றும் இப்படிப் பெரும்பாலும் ஆழ்வார்கள் திருவேங்கட முடையானோடு ஸமாநமாகத் திருமலையை ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் அநுஸந்தித்து அதை மிதித்து ஏறாமல் மங்களாசாஸநம் செய்தார்கள் என்று தெரிவதனால் நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களுக்குத் திருமலையடிவாரத்திலேயே திருமலையைப் பார்த்தவாறே இருக்கும்படி தனித்தனியாக ஸந்நிதிகளைக் கட்டுவித்து அவர்களை ப்ரதிஷ்டை செய்வித்தருளினார்.

**தகுந்த அர்ச்சகர்களை நியமித்தல் :** தம்மிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்றுப் பரமைகாந்தியாய் ஸ்ரீவைகாநஸசாஸ்த்ரத்தைக் கரை கண்டவரான பிம்பாதர (செங்கனிவாய)ரென்று பெயருள்ள அர்ச்சகருடைய திருவம்சத்தில் பிறந்த அர்ச்சகர்களைக் கொண்டே பெருமாளுக்கு திருவாராதனம் முதலான ஸகல கைங்கர்யங்களையும் நடப்பிக்க வேணுமென்று கட்டளையிட்டார்.

**தண்ணீரமுது வழி திருத்தல் திருவிழா :** பெரிய திருமலை நம்பிகள் பாபநாச தீர்த்தத்திலிருந்து திருமஞ்சனம் கொண்டெழுந்தருளும் போது நடுவில் திருவேங்கடமுடையான். ஒரு வேடனுருவில் வந்து "தாத்தா! தாகமாயிருக்கிறது தீர்த்தம் தா" என்று கேட்க, அவர் பெருமாளுக்கென்று எடுத்துச் செல்லுகிற தீர்த்தத்தை உனக்குத் தரமாட்டேனென்றருளிச் செய்ய, பெருமாள் ஒரு சிறிய கல்லாலே குடத்தை அடித்து ஓட்டையாக்கி அதிலிருந்து வரும் நீர்த்தாரையைப் பருகி த்ருப்தியடைந்தார் என்று கேட்டு, தீர்த்தக் குடத்திற்குப்பின் பெருமாளை எழுந்தருளும்படி செய்து அவ்வைதிஹ்யோத்ஸவத்தை அது நடந்த அத்யயநோத்ஸவத்தின் அனந்தர தினத்தில், திருமலையிலும் திருப்பதியிலும் நடத்தும்படி ஏற்பாடு செய்தார். இதுவே "தண்ணீரமுது வழி திருத்தல்" என்றழைக்கப்படும் திருவிழாவாகும்.

**மடம்கட்டி ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனை ப்ரதிஷ்டிப்பித்தது :** தமக்குப் பெரிய திருமலை நம்பிகள் ராமாயண காலக்ஷேபம் சாற்றும்போது அநுக்ரஹித்த சக்ரவர்த்தி திருமகனாரை, திருமலையில் திருவடி ஸந்நிதிக்கு முன்பாகத் தாம் கட்டுவித்த மடத்தில் ப்ரதிஷ்டை செய்வித்துத் தமக்கு ப்ரதிநிதியாயிருந்து அவரை ஆராதிப்பதற்கும் திருவேங்கடமுடையானுடைய ஸகல கைங்கர்யத்தையும் நிர்வஹிப்பதற்குமாகத் திருமலையனந்தாழ்வானுடைய சிஷ்யரும் நைஷ்டிக ப்ரஹ்மசாரியுமான ஒருவர்க்கு, திருமலை நம்பிகளோடும் திருமலையனந்தாழ்வானோடும் கலந்து ஆலோசித்துக் காஷாயம் கொடுத்து ஏகாங்கியாக்கி அவருக்கு ஸேநாபதி ஜீயரென்று திருநாமஞ் சாத்தி, பிறகு அடுத்த திருமலையாத்ரையில் அவருக்கே ஸந்யாஸாச்ரமம் கொடுத்து அப்பன் சடகோபஜீயரென்று திருநாமஞ்சாத்தி அவருக்குத் துணையாக நான்கு ஏகாங்கிகளையும் ஏற்படுத்தி எல்லாரையும் திருமலையனந்தாழ்வானிடம் காட்டிக் கொடுத்துக் கைங்கர்யங்களைக் குறையொன்றும் வாராமல் செய்யும்படி நியமித்தருளினார்.

**திருப்பதியில் கோவிந்தராஜனுக்கு கைங்கர்யங்கள் :** கீழ்த் திருப்பதியில் கோவிந்தராஜப் பெருமாளை ப்ரதிஷ்டை செய்வித்த பின்பு, திருவேங்கடமுடையானுடைய திருமார்பில் ஐச்வர்யாபிவ்ருத்திக்காக வ்யூஹலக்ஷ்மியை ப்ரதிஷ்டை செய்வித்தது போல், கோவிந்தராஜனுடைய ஸம்பத்ஸம்ருத்திக்காக அப்பெருமாளுடைய வலப்பக்கத்தில் ஒரு ஸந்நிதி கட்டுவித்து அதில் பூமிதேவ்யம்சமான ஆண்டாளை ப்ரதிஷ்டிப்பித்து, கோவிந்தராஜனுக்குப் புராணப்ரஸித்தமான ஆனி மாதப்ரஹ்மோத்ஸவமும் ஆண்டாளுக்கு ஆடி மாஸத்தில் திருப்பூரோத்ஸவமும் மார்கழியில் நீராட்ட வுத்ஸவமும் நடப்பிக்கும்படி கட்டளை பண்ணி, யாதவராஜனைப் பார்த்து, "யாதவமன்னா! கோவிந்தராஜனுக்கும் திருவேங்கடமுடையானுக்கும் இப்படி ஒரு சேர்த்தி ஆச்சர்யமாக அமைந்தபடி கண்டாயே 'गोविन्दाय नमो नित्यं श्रीनिवासाय ते नमः' என்று வராகபுராணத்தில் ஸ்ரீவேங்கடேசாஷ்டோத்தர சதநாமஸ்தோத்ரத்தில் ஸூதபௌராணிகரும், 'தென்தில்லைச் சித்திரகூடத்தென் செல்வனை, மின்னி மழை தவழும் வேங்கடத்தெம் வித்தகனை' என்று பெரிய திருமடலில் திருமங்கையாழ்வாரும் இருவரையும் சேர்த்து அநுஸந்தித்தருளியது வீண்போகாதல்லவா? ஆகையால் இவ்வெம்பெருமான்களிருவரையும் ஸமமாக நினைத்து எல்லாக்கைங்கர்யங்களையும் ஏமாறுமல் நடத்திவா" என்று கட்டளையிட்டருளினார்.

**திருமலையில் புஷ்பகைங்கர்யம் ஏற்படுத்தியது :** இக்கட்டளைகளெல்லாம் தாம் இரண்டு மூன்று பர்யாயங்கள் எழுந்தருளிச் செய்தவை. எம்பெருமானார் திருமலைக்கு எழுந்தருள்வதற்கு முன்னமே செய்தருளிய ஒரு கட்டளையுண்டு. அது வருமாறு :

எம்பெருமானார் திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச் செய்துக் கொண்டு எழுந்தருளியிருக்கும் போது ஒழிவில் காலமெல்லாமென்கிற திருவாய் மொழியில் சிந்து பூ மகிழும் திருவேங்கடம் என்கிற இடத்துக்கு அர்த்தமருளிச் செய்யும் ஸமயத்தில் முதலிகளைப் பார்த்து 'புஷ்பமண்டபமான பெரிய திருமலையில் அப்பனுக்கு உகப்பாகத் திருநந்தவனம் செய்து திருமாலை கட்டிச் சாத்துவார் இக்கோஷ்டியில் ஆரேனுமுண்டோ' என்று கேட்க, அனந்தாழ்வான் எழுந்திருந்து 'தேவரீர் நியமித்தால் அடியேன் திருமலைக்கு விடை கொள்ளுகிறேன்' என்று விண்ணப்பம் செய்து தண்டம் ஸமர்ப்பித்து நிற்க, 'வாரீர் அனந்தாழ்வானே ! இக்கோஷ்டியில் நீர் ஒருவரே ஆண் பிள்ளையாயிருக்கிறீர். பரமாசார்யரான ஆளவந்தார் முன்பு ஒருகால் திருமலையில் சில நாட்கள் எழுந்தருளியிருந்து கோவிலுக்கு அருகில் ஒரு சிறு குடில் நிருமித்து அதில் திருவேங்கடமுடையானுக்கு மாலைகட்டிச் சாத்திக் கொண்டிருந்தார் என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீர் சென்று அவ்விடத்தில் ஒரு மண்டபம் கட்டுவித்து அதற்கு யமுனைத் துறைவரென்று திருநாமம் சாத்தி அதில் ஆளவந்தாரை அர்ச்சாரூபமாக எழுந்தருளுவித்துத் திருவாராதனம் செய்து கொண்டே, உமது தோட்டத்தில் பூத்த மலர்களை யெல்லாம் கொண்டு வந்து அம்மண்டபத்தில் மாலையாகக் கட்டி ஆளவந்தார் போலே பெருமாளுக்கு ஸமர்ப்பித்துக் கொண்டிரும்' என்று அனந்தாழ்வானுக்குக் கட்டளையிட்டருள, அவரும் நியமனப்படி திருமலை சென்று சேர்ந்து பூமியை செப்பனிட்டுத் திருநந்தவனமேற்படுத்தி அதற்கு "ராமானுசன்" என்றுத் திருநாமம் சாத்தி நானாவித புஷ்பங்கள் உண்டாகும் செடிகளையும் மரங்களையும் வளர்த்து உடையவர் நியமித்தபடி புஷ்பகைங்கர்யத்தைச் செய்து கொண்டு அவர் திருவடிகளையல்லது தேவுமற்றறியாமல் வாழ்ந்திருந்தார். யதிராஜரும் திருமலையாத்திரையில் இந்த நந்தவனத்தையும் அனந்தாழ்வானுடைய கைங்கர்யத்தையும் கடாக்ஷித்து மிகவும் மகிழ்வெய்தி, "வளர்த்ததனால் பயன்பெற்றேன்" என்று அவரை ஆலிங்கனம் பண்ணி அநுக்ரஹித்தார்.



இப்படியிருக்க, திருவேங்கடமுடையானும் அனந்தாழ்வான் பண்ணும் கைங்கர்யத்திலே தாம் உகந்தபடியையும், அவருடைய தூய உள்ளத்தை எல்லாரும் அறியவேணும் என்கிற திருவுள்ளத்தாலும் ஒரு புரட்டாசித் திருநாளில் ஏழாவது திருநாளன்று இரவு தானும் அலர்மேல் மங்கையுமாக ஒரு ராஜகுமாரனும் ராஜ கன்னிகையுமாக அந்த நந்தவனத்திலே புகுந்து பூப்பறித்துச் சூடி லீலாரஸமநுபவித்துப் புறப்பட்டுப் போகையில், அவர்களைக் கள்ளர்கள் என்று எண்ணி அனந்தாழ்வான் துரத்தினார். ராஜகுமாரனும் அப்ரதக்ஷிணமாக கோவிலைச் சுற்றி வந்து நந்தவனத்தின் வாசலிலே மறுபடி தோன்றி மறைந்தார். இதைக் கேட்டறிந்த எம்பெருமானார் இப்படிப் பெருமாள் அனந்தாழ்வானிடம் பரமப்ரீதியுடன் லீலை புரிந்ததை ஒவ்வொரு ஆண்டும் ஸ்மாரமாக உத்ஸவமாக அநுஷ்டிக்க வேணும் என்று, ஏழாம் திருநாளிலே பூந்தோட்டத்தில் உலாவுவதாக எழுந்தருளி கோவிலை அப்ரதக்ஷிணமாக எழுந்தருளும்படி நியமித்தருளினார்.

இவைகளும் இன்னும் பல விவரங்களும் திருமலையனந்தாழ்வான் வடமொழியில் தொகுத்தருளிய ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலா என்ற க்ரந்தத்தில் பரக்கக் காணலாம். அங்கு கண்டு கொள்க. விரிவுக்கஞ்சி இதோடு நிற்கிறேன், குற்றங்களைப் பெரியோர் பொறுத்தருள வேணும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

அநுபந்தம் : பதிப்பாசிரியர் சேர்த்தது.

1 "தாழ்சடையும்" பாசுரம்: மூன்றாம் திருவந்தாதியில் பேயாழ்வார் திருவேங்கடவனைப் பாடுகையில் "ஹரிஹரரூபம் காட்டிய சீலம் திருவேங்கட முடையான் பக்கல் பொலிகிறது" என்ற போற்றுகிறார். இப்பாசுரத்தில் சிவனுடைய வேஷமும் எம்பெருமானுடைய வேஷமும் ஒக்கப் பேசப்பட்டவை போலுள்ளன. திருவேங்கடம் சிவஸ்தலம் என்ற கூற்றை இப்பாசுரம் ஆதரிக்கும் என்று பலர் ப்ரமிக்கின்றனர். பாசுரத்தையும் அதன் விளக்கத்தையும் காண்க.

தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் — சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து (63)

பெரியவாச்சான்பிள்ளை தம் வ்யாக்யன அவதாரிகையில், "ஸித்தமான வேஷத்தையும் ஸாதகமான வேஷத்தையும் ஒக்கதரிப்பதே! இது ஒரு சீலவத்தையே!" என்கிறார் (பேயாழ்வார்)" என்றருளிச் செய்தார். ருத்ரனது வேஷம் ஸாதகவேஷம்— எம்பெருமானைக் காணத் தவம் செய்வது, ஜடை முதலியன தரித்தது. எம்பெருமானது ஸித்தவேஷம்—ஜகதேக ஸ்வாமியாய் நீண்ட திருவபிஷேகம் தரித்துத் திருக்கையில் திருவாழியேந்திய திருக்கோலம். இரண்டு வேஷத்தையும் பொருத்தமாக இசையவிட்டுக் கொண்டபடி ஒரு வேஷம் தரிப்பதே! இது ஒரு சீலம் என்! என்று திருவேங்கட முடையானும், ஹரிஹரனாக வடிவெடுத்தவனும் ஏகதத்வம் என்கிறார்.



பெருமாள் கோவில் மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. P.B.A. ஸ்வாமி தமது தீபிகையில் தரும் விளக்கம்: திருவேங்கட மலையில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் பக்கல் தாழ்சடையுமில்லை, ஒண்மழுவுமில்லை, இடுப்பில் சூழரவுமில்லை. நீண் முடியும், சக்கரமும், பொன்னாணுமே யுள்ளன. ஆகில் பாசுரத்தில் 'இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து தோற்றும்' என்றுள்ளதே என்னில்: திருவேங்கடமுடையானாக ஸேவை ஸாதிக்கும் திருமலையப்பன்தானே ஒரு சமயத்தில் இரண்டுருவையும் ஒன்றாயிசைத்துக் கொண்டு தோன்றினவன் என்பதே பொருள். பூதத்தாழ்வார், "அத்தியூர்வான் புள்ளையூர்வான் அணிமணியின் துத்திசேர் நாகத்தின் மேல் துயில்வான்" என்றருளிச் செய்துள்ளார். இதனால் கச்சியில் அத்திகிரியில் நின்ற திருக்கோலத்துடன் ஸேவை தரும் பேரருளாளன் திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டுள்ளான் என்றதாகுமோ நாகத்தின் மேல் துயிலும் எம்பெருமானும் அத்தியூரானும் ஒருவனே என்றபடி யாமத்தனை யன்றோ! அப்படியே இங்கும் ஹரிஹர ரூபத்தால் காட்டியருளிய சீலம் திருவேங்கடமுடையான் பக்கலில் பொலிகின்றது என்கிறார்.

திருவாய்மொழி 10—4—6 பாசுரம் "நாகத்தணையானை"-யில், "மாகத்திளமதியம் சேரும் சடையானைப் பாகத்து வைத்தான்" என்று எம்பெருமான் கொண்டாடப்படுகிறான். இங்கு நம்பிள்ளை ஈடு: "ஸ்வகப்ரதானனென்று தோற்றும்படி சந்த்ரனைச்சூடி ஸாதகத்வஸூசகமான ஜடையையுமுடையனான ருத்ரனுக்குத் திருமேனியிலே ஒரு பார்ச்வத்திலே இடங்கொடுத்தவன்" என்பது.

இப்படி சீலகுணத்தை ப்ரகாசிப்பித்தவன் நிகரில் புகழ் பெற்ற திருவேங்கடமுடையான் என்றுணர்க.

2. **ராமாநுஜருடைய திருமலை யாத்திரைகள்:** எம்பெருமானார் மூன்று முறைகள் திருமலைக்கு எழுந்தருளி அப்பனை மங்களாசாஸனம் பண்ணிப் பல சீர்திருத்தங்களையும் கைங்கர்யங்களையும் செய்தார். குருபரம்பரை முதலான நூல்களிலிருந்தும் T.T. தேவஸ்தான வெளியீடான திருமலை ஒழுகு (திருமலை திருப்பதி ஐதிஹ்யமாலை) என்னும் நூலிலிருந்தும் பல விவரங்கள் அறியலாகும்.

முதல் யாத்திரையில் முன்னம் உபவாஸமிருந்து மலைமேல் ஏறி அப்பனை மங்களாசாஸனம் பண்ணி மூன்று நாள் உபவாஸமாகவே இருந்தார். தமது நியமனப்படி அனந்தாழ்வான் திருவேங்கடவனுக்குப் புஷ்ப கைங்கர்யத்துக்காக நிருமித்த "ராமாநுஜன்" என்ற நந்தவனத்தைக் கடாக்ஷித்து உகந்து, "வளர்த்ததனால் பயன்பெற்றேன்" என்று அனந்தாழ்வானைக் கொண்டாடியருளினார்.

இந்நாட்களில் எம்பெருமான் திருமுன்பே தமது முதல் திவ்யக்ரந்தமான வேதார்த்த ஸங்க்ரஹத்தை உபந்யாஸமாக வெளியிட்டார் (பின்பொருகால் திருவரங்கன் மணவாளமாமுனிகளிடம் ஈடு முப்பதாறாயிரப்படி கேட்டு அவருக்குச் சிஷ்யனாய் விளங்கியதை நினைக்க இப்படி அப்பனுக்கு வேதாந்தோபந்யாஸம் செய்ததற்கு ஸ்மாரகமாக இங்கு அர்ச்சைத் திருமேனியில் அஞ்சலிஹஸ்தமாய் இல்லாமல் ஞானமுத்திரையுடன் ஸேவை ஸாதிக்கிறார் உடையவர். வேதார்த்தஸங்க்ரஹத்துக்கு வ்யாக்யானமிட்டருளிய ஸுதர்சன பட்டரும் இப்படி அப்பன் திருச்செவி சாற்றியதை யச்ஸ்ரீபாஷ்யக்ருதுபந்யஸ்த। ஸ்ரீ சைலபதே: புரா என்று பொறித்து வைத்தார்.

திருமலையடிவாரத்தில் ஓராண்டு தங்கியிருந்து தமது அம்மானான பெரிய திருமலை நம்பி என்ற மஹாசார்யரிடம் ஸ்ரீராமாயணார்த்தங்களைக் கேட்டு, அவரிடமிருந்து கோவிந்தப் பெருமாளை (எம்பாரை) பரிசாகப் பெற்று வந்தார்.

இரண்டாவது யாத்திரையில் திருவேங்கடம் சைவக்ஷேத்ரம் என்று வாதடிய சைவர்களை வாதில் வென்று அப்பனுக்குச் சங்காழி அளித்துகந்து அவன் திருமார்பில் அலர் மேல் மங்கையை த்விபுஜவ்யூஹலக்ஷ்மியாக ப்ரதிஷ்டா பூர்வமாக அணிவித்தார். இதனால் "வேங்கடேச ச்வசுராபிதானர்" என்று அவனுக்கு மாமனாராகப் போற்றப்படுகிறார். சங்காழி அளித்ததால் ஆசார்யனாகவும் ஆயினர். மேலும் விமானப்ரதிஷ்டை முதலான பல கைங்கர்யங்களும் செய்தருளினார். இவை இந்த வ்யாஸத்தில் விவரிக்கப் பட்டுள்ளன.

மூன்றாவது யாத்திரையில் திருச்சித்திரகூடத்தெம்பெருமானை கோவிந்த ராஜனை திருப்பதியில் இருந்த ஸ்ரீ பார்த்தஸாரதி கோவிலைப் பெரிதாக்கி ஸன்னதி அமைத்து ப்ரதிஷ்டை செய்வித்தார். ஐச்வர்யாபிவ்ருத்திக்காக ஆண்டாளையும் குமுதமலர் ஏந்திய திருக்கோலமாய் ப்ரதிஷ்டிப்பித்து அனேக உத்ஸவங்களையும் ஏற்படுத்தியருளினார். திருவேங்கடமுடையானும் கோவிந்த ராஜனும் பேதமில்லாத ஒரே திவ்யதேசத்தெம் பெருமான்கள் என்று நியமித்து அதற்கேற்ப பல ஏற்பாடுகளை நியமித்தருளினார். திருமலை மேல் திருவடிகோவிலுக்கடுத்து ஒரு மடத்தையும் ஏற்படுத்தி ஜீயர்களையும் ஏகாங்கிகளையும் நியமித்து அப்பனுடைய கைங்கர்யங்கள் குறைவற நடக்க ஏற்பாடுகள் செய்தருளினார். திருமலையில் அனந்தாழ்வானுக்கு தமது அர்ச்சைத் திருமேனியை அநுக்ரஹித்து ப்ரதிஷ்டிப்பிக்க அனுமதியும் தந்தருளினார்.



அத்திகிரி அருளாளர், வேடன் திருக்கோலம். இளையாழ்வாருக்கு ஸேவை ஸாதிப்பதாக அனுஷ்டான குள உத்ஸவத்தன்று சாலைக் கிணற்றருகிலிருக்கும் ஸன்னிதியில் திருமஞ்சனம் கண்டருளி எழுந்தருளும் அவஸரம். (பக்கம் 21)



நம்மாழ்வார் பெருமாள் கோயில் ஸன்னிதியில் "தொழுதெழன் மனனே" என்று காட்டிக்கொண்டு எழுந்தருளியுள்ள திருக்கோலம். (பக்கம் 23)



இளையாழ்வார் தினமும் தேவப்பெருமாள் திருவாராதனத்திற்கு திருமஞ்சனம் ஸமர்ப்பித்திருந்த காஞ்சீபுரம் சாலைக் கிணறு. மரங்களுக்குப்பின் இருக்கும் கோயிலில் தேவப்பெருமாள் வேடனுக வந்து எம்பெருமானுரை விந்த்யாடவியிலிருந்து மீட்டு இக்கிணற்றிற்குக் கொண்டுவந்து சேர்த்தது அனுஷ்டானகுள உத்ஸவமாக நடக்கிறது.

(பக்கம் 22)



தேவப்பெருமாள் கிழக்கு கோபுர வாசலருகிலுள்ள உடையவர் திருமாளிகையின் (தற்போதைய) தோற்றம். (பக்கம் 21)



தேவப்பெருமாள் கோயிலில் உள்ள கரிய மாணிக்காழ்வார் ஸன்னிதி. இம்மண்டபத்தில் வீற்றிருந்து ஆளவந்தார் இளையாழ்வாரை ஆமுதல்வனிவன் என்று கடாக்ஷித்தார். (பக்கம் 22)



திருமாளிகையின் வாயிலிலுள்ள கிணறு. பெரியநம்பிகள் தேவிக்கும் இளையாழ்வார் தேவிக்கும் இதனடியில் சண்டைமூள இளையாழ்வார் உத்தமாச்ரமியாகக் காரணமாகவிருந்த கிணறு.

ஸ்ரீ :

# தேவப்பெருமாளும் ஸ்ரீராமாநுஜரும்

ஸ்ரீ. உ. வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸ வரதாசாரியர் ஸ்வாமி,
திருவல்லிக்கேணி

திருநாட்டில் பரவாஸுதேவனுக்குக் குற்றவேல் புரியும் ஸூரிகளுள் முதல்வனான திருவனந்தாழ்வான் பகவன் நியமனத்தைச் சிரமேற்கொண்டு ஸ்ரீ பெரும்பூதூர் ஆஸூரி கேசவ ஸோமயாஜியார் குமாரனாய் அனைத்துலகத்தையும் வாழ்விப்பதற்கென்று வந்து பிறந்தான். இக்குழந்தைக்கு இளையாழ்வார் என்று பெயரிட்டனர் குழந்தையின் அம்மானான பெரிய திருமலை நம்பி. இளையாழ்வாரும் தமது திருத்தகப்பனார் திருவடிவாரத்திலே வளர்ந்து அவரிடமே வித்தைகளைப் பயின்று பின்னர் மணம் பூண்டு வாழ்ந்து வந்தார். இவரது 16-வது வயதிலேயே தகப்பனார் பரமபதமடைய, இவரும் அதற்குப்பிறகு வெகு காலம் ஸ்ரீ பெரும்பூதூரில் இருக்கவில்லை. தாயாருடனும் மனைவியுடனும் பெருமாள் கோவிலில் கிழக்குக் கோபுர வாசலருகில் ஒரு கிருஹத்தில் குடிபுகுந்து திருப்புட் குழியில் அக்காலத்தில் ப்ரஸித்தனாயிருந்த யாதவப்ரகாசன் என்ற அத்வைத ஸன்யாஸியிடம் வேதாந்தம் வாசிக்க ஆரம்பித்தார்.

ஸ்ரீபெரும்புதூரில் வாழும்போதே இளையாழ்வார் திருக்கச்சி நம்பியின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரராயிருந்தார். நம்பி ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனப்ரவர்த்தகரான ஆளவந்தாரின் சிஷ்யர். கச்சி அத்திகிரியில் கோயில் கொண்டுள்ள பேரருளாளனிடம் பேரன்பு பூண்டு அப்பெருமானுக்கு ஆலவட்ட கைங்கர்யம் பண்ணிக்கொண்டு அவனிடம் அந்தரங்கமாய் அளவாளாவுமவராயும் திகழ்ந்தவர் இந்த ஸ்நேஹத்தின் பலனாய் இளையாழ்வாருக்கும் தேவப் பெருமாளிடம் பக்தி வளர்ந்திருக்க வேண்டும் என்றும் அங்கு தமக்கு வாய்த்த கைங்கர்யங்களைச் செய்து கொண்டு வாழ்ந்தசர் என்றும் ஊகிக்கலாம். நம்பியிடமும் இவருக்கு ப்ரேமம் வளர்ந்து வந்தது.

வேதாந்த பாடம் கற்கும்போது குரு பல வாக்கியங்களுக்குக் கூறிய பொருள் இளையாழ்வார் மனதுக்கு இசையவில்லை. இளையாழ்வார் சொல்லிக் காட்டிய பொருள் அத்வைதக் கொள்கைகளுக்கு இசையவில்லையாதலால் இவர் வாழ்ந்தால் அத்வைதக் கொள்கைகள் க்ஷீணதசை அடையும் என்று பயந்து, இவரை கங்கையில் தள்ளி முடித்து விடுவதென்று சூழ்ச்சி செய்து தன் சிடர் குழாத்துடன் காசியாத்ரைபோவதாகப் புறப்பட்டுச் செல்கையில் விந்தியப்ரதேசத்தில் காட்டு மார்க்கமாகச் செல்லும் போது தனிமையில் இளையாழ்வாரின் சிறிய தாயார் குமாரரும் ஸஹ அத்யாயியுமான கோவிந்தப் பெருமாள் யாதவனின் சூழ்ச்சியைப் பற்றி அறிவிக்க இளையாழ்வார் அந்த குழாத்தினின்றும் விலகித் தனிவழியே செல்லலானார். விரைவில் இரவும் பரவ, இவர் வழி காணாது தவிக்கும்போது ஒரு வேடனும் வேடுவச்சியும் இவரிடம் வந்து சேர்ந்தனர். அவர்கள் ஸத்யவ்ரதக்ஷேத்ரம் (காஞ்சீபுரம்) செல்பவர்கள் என்றறிந்த இளையாழ்வார் அவர்களை வழித்துணையாய்ப்பற்றி அவர்கள் பின்னே நடந்து இரவின் மிகுதியை அவர்களுடன் ஒரு மரத்தடியில் படுத்து உறங்கிக் கழிப்பதாக நிச்சயித்த அளவில் வேடுவச்சி தாஹமாயிருக்கிறது என்று தீர்த்தம் வேண்டினாள். பொழுது விடியும் தருவாயில் வேடனும் ஒரு ஊரில் ஒரு கிணற்றைக் காட்ட அதிலிருந்து இருகையாலும் தீர்த்

த்தை முகந்து வேடுவச்சிக்குத்தர அவளும் பருகித் தாக சாந்தி அடைந்தாள். கிணற்றிலிருந்துவெளியேறிப் பார்க்கையில் வேடனையும் வேடுவச்சியையும் காணவில்லை. தாம் வந்து சேர்ந்துள்ள ஊரைப்பற்றி விசாரிக்க, அது தாம் சேரவேண்டிய காஞ்சியாகவே உள்ளதைக் கண்டு பெருவியப்பெய்தித் தமக்கு வழித்துணையாக வந்தவர் பேரருளாளனும் பெருந்தேவியும் தவிர வேறு யாருமில்லை என்று நிச்சயித்து அன்று முதல் அந்தக் கிணற்றுத் தீர்த்தத்தில் ஒரு குடம்பெருமாளுக்குத் திருவாராதனத்துக்காக கொண்டு ஸமர்ப்பிக்கலானார். இந்தக் கிணறு இப்போது சாலைக் கிணறு என்று அழைக்கப்படுகிறது. இந்த கைங்கர்யத்தை வேதாந்த தேசிகன் தமது யதிராஜ ஸப்ததியில்,

தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விஶுத்தம் பய:
கலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத : காங்க்ஷாதிகம் வர்ஷதி

என்று பொறித்து வைத்தார்.

எந்த அருட் கடலான ராமாநுஜரால் ஸமர்ப்பிக்கப்பட்ட தூய்மை படைத்த தீர்த்தத்தைப் பருகி, அத்திகிரியின் உச்சியிலுள்ள கருங்கொண்டலானது (பேரருளாளனான தேவப்பெருமாள்) நமக்கு உசித காலத்தில் வேண்டுவனவற்றையெல்லாம் தாராளமாகப் பொழியுமோ (அந்த ராமாநுசனை அடிபணிகிறேன்) என்றபடி.

இப்படி இந்த தர்சனத்துக்கு முக்யமான ப்ரவர்த்தநாசார்யரை தேவப்பெருமாள் காப்பாற்றியிருந்தருளாவிடில் என்ன கேடு நடந்திருக்குமோ? நினைக்கவும் நெஞ்சு நடுங்குகிறது.

Srivatsam

யாதவப்ரகாசன் காசியாத்ரையை முடித்துக் கொண்டு காஞ்சீபுரம் திரும்பி வந்த போது இளையாழ்வார் பத்ரமாக இருப்பது கண்டு தன் நெஞ்சிலுள்ள த்வேஷத்தைக் காட்டாமல் அவரை ஸ்வகோஷ்டியில் சேர்த்துக் கொண்டு பாடம் நடத்தலானான்.

இந்நிலையில் திருவரங்கத்தில் தமக்குப் பின் தர்சனப்ரவர்த்தகராவார் யார்? என்று ஆளவந்தார் சிந்தித்திருக்கையில் இளையாழ்வாரைப் பற்றியும், வேதாந்த வாக்யங்களுக்கு அவர் கொண்ட பொருள்களையும் கேள்விப்பட்டு இப்பொருள்கள் தம் நெஞ்சுக்கு மிகவும் ஒத்தவையாயிருக்கையாலே இந்த மஹா புருஷனைக் காணவேணும் என்று பெருமாள் கோயிலேற எழுந்தருளி தேவப்பெருமாளின் திருக்கோயில் சுற்றில் கரியமாணிக்கப் பெருமாள் ஸன்னிதியில் திருக்கச்சி நம்பியுடன் வீற்றிருந்தபோது, இளையாழ்வார் யாதவனுடைய சிஷ்யர் குழாத்தில் ஒருவராய் வந்தார். இவரை நம்பிக் காட்டக்கண்டு "ஆம் முதல்வன் இவன்" என்று குளிர கடாக்ஷித்து அப்போது இளையாழ்வாருடன் அளவளாவ வீரகேதும் காணாமல் தேவப்பெருமாளிடம் இவர் தர்சனப்ரவர்த்தகராகும்படி கடாக்ஷித்தருள வேண்டும் என்று ப்ரபத்திபூர்வமாக வேண்டிக் கொண்டு திருவரங்கம் சென்று சேர்ந்தார். இளையாழ்வார் பின்னர் ராமாநுஜமுனிவராய் ஆசார்யஸார்வபௌமராய்த் திகழ்ந்ததற்கு ஆளவந்தார் தேவப்பெருமாளிடம் பண்ணின ப்ரபத்தி அவனருளால் ஸபலமானபடியால்தான் என்று அறியலாகிறது.

மேலும், ஆளவந்தார் இளையாழ்வாரை அந்த சமயத்தில் ஸந்தித்து வார்த்தையாடியிருந்தால் கூடவே திருவரங்கம் அழைத்துச் சென்றிருப்பார். இப்படி நடக்காதது தேவப்பெருமாள் திவ்யஸங்கல்பத்தினால் தான் என்றறிய வேணும். பால்ய நிலையிலிருந்த இளையாழ்வாரைத் தாய்போல் தாமே ரக்ஷித்து வயது வந்தவாறே அவருக்கு இடப்பட்டிருந்த பெரும் பணியை நிறைவேற்றத் திருவரங்கம் அனுப்பித் தந்தனர். இது ராமாநுசனிடத்தில் தேவப்பெருமாளுக்குள்ள அளவிலடங்காத ப்ரேமையை ப்ரகாசப்படுத்தும்.

யாதவப்ரகாசன் காசியாத்ரையிலிருந்து திரும்பிய பிறகு இளையாழ்வார் அவனிடம் வேதாந்தம் படிப்பது அதிக நாள் நீடிக்கவில்லை. "தஸ்ய யதாகப்யாஸம் புண்டரீக மேவ

மகஷிணீ" என்ற ச்ருதிக்கு சொல்லக் கூடாத தவறான அர்த்தம் யாதவன் கல்பிக்க, இளையாழ்வார் "அப்போதலர்ந்த செந்தாமரை இதழ்களை ஒத்தவை பரமபுருஷனுடைய திருக்கண்கள்" என்று பொருள் கூறியது பொறுக்காமல் யாதவன் இவரைத் தன் கோஷ்டியினின்றும் விலக்கி விட்டான்.

இந்நிலையில் திருக்கச்சிநம்பிகள் திருவடிகளில் ஆச்ரயித்து உய்யவேணும் என்ற அவா எழுந்து இளையாழ்வார் அவரை ப்ரார்த்தித்தார். வருணதர்மத்துக்கு இது ஒவ்வாதென்று நம்பி தடுத்து விட்டார். மேலே என் செய்வது என்று குழம்பியிருந்தவளவில் தேவப் பெருமாள் இவர் மனதில் சில நினைவுகள் ஏற்படுத்தித் தெளிவு பிறப்பித்தார். இந்த நினைவுகளை மற்றுமொரு முறை தேவப்பெருமாளே ஊர்ஜிதப்படுத்த வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டு திருக்கச்சிநம்பியை யணுகி "நம் நெஞ்சில் சில நினைவுகள் உள்ளன அவை எவை என்றும் பெருமாளுக்கு உகந்தவைதானா என்றும் பெருமாளிடம் கேட்டுத் தெரிவிக்க வேணும்" என்று ப்ரார்த்திக்க, நம்பியும் அன்றிரவு பெருமாளிடம் வினவ, பெருமாளும் ஆறுவார்த்தைகள் அருளிச் செய்தார். அதில் மிகமுக்யமானவை 'அஹமேவ பரம் தத்வம் தர்சநம் பின்னம்—பூர்ணாசார்யர் திருவடிகளில் ஆச்ரயிப்பது' என்பவை. இப்படி தானே பரப்ரஹ்மம்—இமையோர்தலைவன், அயர்வறும் அமரர்கள் அதிபதி என்று தேவப்பெருமாள் தன்னை முதலில் காட்டித்தந்து, ஜீவபர பேதத்தை உணர்த்தி, இளையாழ்வாருக்கு ஆசார்யனை யும் ஸங்கல்பித்தான். ஆசார்ய ஸமாச்ரயணம் எம்பெருமான் நமக்குச் செய்யும் பேருபகாரம் என்பது ஸத்ஸம்ப்ரதாயம் தகுந்த ஆசார்யனைக் காட்டித் தந்து இந்த பேருபகாரத்தை முதலில் செய்து வைத்தார் தேவப்பெருமாள்; திருக்கச்சிநம்பியும் இவ்வார்த்தைகளை இளையாழ்வாருக்குத் தெரிவிக்க, இவையே நம் நினைவுகள் என்று நம்பியைத் தெண்டனிட்டு ப்ரீதரானார்.

இப்படி 'அஹமேவ பரம் தத்வம்' என்று தேவப்பெருமாள் காட்டியதில் சில ஸம்ப்ரதாயார்த்தங்களை அறியவேண்டியவை உள்ளன. அவற்றைச் சுருக்கமாக அநுபவிப்போம்.

நம்மாழ்வார் தம் முதல் ப்ரபந்தம் தொடங்கும்போதே பெருமாளை இமையோர் தலைவா! என்று விளிப்பது நம் தேவப்பெருமாளை நெஞ்சில் கொண்டே என்பது நம் ஆசார்யர்கள் திருவுள்ளம் நம் தேவப்பெருமாளை நம்மாழ்வார் வ்யக்தமாகப் பாடவில்லையே என்று வினவிய தன் சிஷ்யர்களுக்கு "முதல் பத்து முழுவதுமே தேவப்பெருமாள் விஷயம் தான்; அமரர்கள் அதிபதி என்று முதல் பாசுரத்தில் அருளிச் செய்து அடிக்கடி நித்யஸூரி நாயகத்வத்தைப் பேசுவதாலே இவை தேவப் பெருமாள் விஷயமென்று அறியவேணும் குறிப்பாக முதல் திருவாய் மொழியில் "அமரர்கள் அதிபதி" என்று முதல் பாட்டில் சொல்லி "பரனடி மேல் குருகூர்ச் சடகோபன்" என்று முடிக்கையாலே இது தேவப்பெருமாள் விஷயமன்றி வேறில்லை. பெருமாள் கோவிலில் தேவப்பெருமாள் ஸன்னதியில் நம்மாழ்வார் தம் திருவுள்ளத்தை அநுசாஸித்தபடி தோற்ற (தொழுதெழென் மனனே என்று) திருமார்பில் ஞான முத்ரை வைத்து எழுந்தருளியிருக்கிறதை ஸேவித்தாலே ஆழ்வார் திருவுள்ளம் நன்கு விளங்கும்" என்றருளிச் செய்தார்.

மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கம் கூறவவதரித்த கலியனும் தம் திருமொழியின் முதல் பத்தில் "மனமே தொழுதெழு தொண்டர்கள் தமக்குப்பிணியொழித்து அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன்" (1-4-4) என்று அருளிச் செய்தார். நம்மாழ்வார் அமரர்கள் அதிபதியை (தேவப்பெருமாளை)த் தொழுதெழு மனமே என்றார். கலியன் பேரருளாளனைத்தொழுதெழு என்றார். ஆழ்வார்கள் பேசிற்றே பேசும் ஏககண்டர்களாதலாலும் குறிப்பாக நம்மாழ்வார் காட்டும் வழியைப் பின்பற்றுபவர் கலியனாகையாலும் முன்னவர் அமரர்கள் அதிபதி என்ற தேவப்பெருமாளையே அவருடைய மற்றொரு ப்ரஸித்தமான பேரருளாளன் என்ற திருநாமத்தையிட்டு மங்களாசாஸனம் பண்ணினார் கலியன். "பேரருளான் பெருமை பேசக் கற்றவன்" (பெரியதிருமொழி 9-5-10) அன்றோ கலியன். இதற்கு மேல் திருச்செம்பொன் செய்கோயில் விஷயமான திருமொழியில் (4—3) "பேரருளானனெம்பிரானை" என்று முதல் பாசுரத்தில்

தொடங்கி பத்தாம் பாசுரத்தில் "வானவர் கோனைக்கண்டமை" என்று முடிக்கிறார். பத்தாம் பாசுரத்திற்கு பெரிய வாச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்தின் அரும்பத உரையின் பங்திகள்: "முதல் பாட்டில் பேரருளாளனெம்பிரானை என்று உபக்ரமித்து நிகமத்தில் வானவர் கோனைக் கண்டமை சொல்லும் என்று உபஸம்ஹரிக்கையாலே தேவராஜாபிதானமுடைய தேவப்பெருமானைத் தாம் செய்பொன் செய்கோயிலில் ஆழ்வார் கண்டாராக அருளிச் செய்கிறார் என்று திருவுள்ளம். நம்மாழ்வார் பெருமாள் கோவிலில் தேவராஜனை அயர்வறுமமரர்கள் அதிபதி என்றருளிச் செய்தார். கண் கையாயிற்று சொல்லிற்று (இங்கு). பரமபதநாதனைச் சொல்லிற்று என்றால் கண்ணாலே காணவும் கூடாது (இயலாது) தொழுதெழு எனவும் கூடாது தேசவிப்ரகர்ஷத்தால்". ஆக, அமரர்கள் அதிபதி என்று நம்மாழ்வார் தொழுதவரும், வானவர் கோன் என்று கலியன் கண்டவரும் தேவப்பெருமாள் தான் இப்படிப்பட்ட பரமபுருஷன் "அஹமேவ பரம் தத்வம்" என்று தன்னையே பரமபதநாதனை ஒப்பாரும் மிக்காரும் இல்லாத பரம் பொருளாக ராமாநுசருக்குக் காட்டித்தந்தது மிகவும் பொருந்தும்

பின்னர் தேவப்பெருமாள் நியமனப்படி பெரியநம்பியை ஆச்ரயிக்கவென்று இளையாழ்வார் ஸ்ரீரங்கம் புறப்பட, பெரியநம்பியும் இளையாழ்வாரைப் பணிகொள்ளவென்று ஸ்ரீரங்கத்தினின்றும் புறப்பட இருவரும் மதுராந்தகத்தில் ஸந்தித்தனர் அங்கேயே ஸமாச்ரயணம் ஆக வேண்டும் என்று இளையாழ்வார் த்வரித்த படியால் அங்கு சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியில் நம்பிபிடம் திருவாழி திருச்சங்குகளின் திருவிலச்சினை பெற்று த்வயத்தையும் உபதேசிக்கப்பெற்றார். மேலும் "மாதவன் பேர் சொல்வதே ஒத்தின் சுருக்கு" என்கிற படியே த்வயமே ப்ரமாணம்; இத்தால் ப்ரதிபாத்யனாய் ஸ்ரீ ஹஸ்திகிரியின் மேல் கையும் திருவாழியுமாய் நிற்கிற பெருமாளே ப்ரமேயம்; நீர்தாமே ப்ரமாதா" என்று சொல்லி பயணகதியாலே பெருமாள் கோவிலையடைந்துபேருரளாளனை அடைவாகத் திருவடிதொழுதனர்.



பின்னர் இளையாழ்வார் பெரியநம்பியைத் தேவிகளுடன் தம் திருமாளிகையில் ஒரு பாகத்தில் குடியேற்றி அவர் திருவடிக்கணுக்கராய் இருந்து அருளிச் செயல்களையும் அவைகளின் பொருள்களையும் காலக்ஷேபம் பண்ணுகிற்க ஒரு நாள் இளையாழ்வார் தேவிகள் பெரியநம்பியின் தேவிகளை கிணற்றடியில் பருஷோக்திகளைச் சொல்லிவிடவே மனஸ்தாபம் முற்றுமுன் திருவரங்கம் செல்ல வேண்டுமென்று நம்பிதம் இல்லாளை அழைத்துக் கொண்டு இளையாழ்வாருக்குத் தெரியாமல் தம்மூர் சென்று சேர்ந்தார். இச்செய்தியை அறிந்த இளையாழ்வார் மிகவும் மனம் நொந்து ஸந்யாஸாச்ரமம் மேற்கொள்வதாய் நிச்சயித்து மனைவியை பிறந்தகம் போகவிட்டு, தமக்குத் துறவு நல்கும் ஸ்ரீவைஷ்ணவ ஜீயர் யாருமில்லாமையால் தேவப்பெருமானையே ஆசார்யனாக வரித்து அவரிடமே த்ரிதண்டகாஷாயாதிகளைப் பெற்று தரித்து ராமாநுசமுனி என்றும் எதிராஜன் (யதிராஜன் என்றாகிலுமாம்) என்றும் அழைக்கப் படுவாராகி விளங்கினார். இராமாநுசனிடம் பல மஹான்கள் சிஷ்யர்களாய் ஆச்ரயித்தனர். முதலில் பணிந்தது முதலியாண்டானும் கூரத்தாழ்வானும். முன்பு வேதாந்தம் படிப்பித்த யாதவப்ரகாசனும் இந்த சீடர் குலத்தில் சேர விரும்பி தன் சிகாயஜ்ஞோபவீதங்களின்றியே வெகுகாலமிருந்ததற்கு எவ்விதத்தில் ப்ராயசித்தப் செய்வது என்று, கலங்கி நிற்கத் தேவப்பெருமாள், திருக்கச்சிநம்பி மூலம் 'நம்மிராமநுசனை வலம்வந்தால் "சுற்றி நாம் வலம் செய்ய நம் துயர் கெடும் கடிதே" என்கிறபடி ஸகலபாபங்களும் அற்றுப்போம்' என்று அவன் கலக்கத்தை அகற்றித் தெளிவு பிறப்பித்து ராமாநுசனுக்கு அவனை சிஷ்யனாக்கி வைத்தார்.

இப்படி விளங்கிக் கொண்டிருந்த நாளில் திருவரங்கம் பெரிய கோயிலில் ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகள் தர்சன நிர்வாஹத்துக்கு ராமாநுசனை ஸ்ரீரங்கம் அழைத்துவர வேணும் என்று ஸ்ரீரங்கநாதனைச் சரணம்புக, அரங்கனும் "ராமாநுசனைத் திருவரங்கம் அனுப்பித் தரவேணும்" என்று தேவப் பெருமாளுக்கு ஒரு திருமுகம் அனுப்பியருளினார். தேவப் பெருமாளும், "தம் தம் அபிமதத்தைப் புறம்பே போக விடிலன்றோ நாம் நம்மிராமா

நுசனை விடுவது'' என்று வாளாவிருந்திட்டார். இதன்பிறகு பாட்டுக்கு உகப்பவன் பேரருளாளன் என்பது கொண்டு திருவரங்கப் பெருமாளரையர் தேவப் பெருமாளைத் தம் பாட்டால் வசீகரித்து இராமாநுசனை வரப்ரதானமாகப் பெற்று திருவரங்கம் அழைத்துச் சென்றார்.

இப்படியாக ராமாநுஜரை பெருமாள் கோவிலில் பேரன்புடன் ரக்ஷித்து வந்த தேவப் பெருமாள் அவர் தர்சந நிர்வாஹம் பண்ணச் சென்றபோது தேவப் பெருமாளும் அவருடைய திருவாராதன எம்பெருமானாகக் கூடவே சென்றார் என்பதும் அறியத்தக்கது. திருவரங்கத்துக்கு மிகவும் இன்னுப்புடன் தான் ராமாநுஜரை தேவப் பெருமாள் அனுப்பி வைத்தார். லோகஸம்ரக்ஷணார்த்தமாகச் செய்த கார்யம் இது அவரைப்பிரிய மனமில்லாமல் திருவாராதன எம்பெருமானாக உடன் சென்றதைக் கூறிக் கொள்ள வேண்டும்.

கோயிலில் உள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் ராமாநுஜரை உலகம் மெச்சும் வகையில் வரவேற்றனர். திருவரங்கச் செல்வனும் சேனை முதலியாரை அனுப்பி எதிர் கொண்டு அழைத்து, தன் ஸன்னிதி வாயிலில் தானே திருக்கைத்தலத்தில் எழுந்தருளி எதிர்கொண்டு அழைத்து மகிழ்ந்து தன் உபய விபூதி ஐச்வர்யத்தையும் அவருக்கு உடைமையாகத் தந்து, செங்கோலையும் ப்ரஸாதித்து, திருவரங்கச் செல்வத்தை நிர்வஹிக்கும்படி நியமித்தான். இதனால் தர்சனத்தில் இளையாழ்வாரான ராமாநுசமுனி உடையவர் என்று அழைக்கப்படுவாராயினர்.



ஆளவந்தார் தம் சிஷ்யர்களில் முதல்வர்களான பெரியநம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருக்கோட்டியூர் நம்பி, முதலானவர்களிடம் பல ரஹஸ்யார்த்தங்களை பவிஷ்யதாசார்யரான ராமாநுஜருக்குச் சொல்லும்படி நியமித்திருந்தார். உடையவர் இவர்களிடம் உபதேசம் பெறுவதற்கான தகுதி தம்மிடம் உண்டு என்பதை வெகு பரிச்ரமப்பட்டு நிரூபித்து உபதேசங்களைப் பெற்று விளங்கா நிற்கையில் சீடர் குழாமும் பெருகி வந்தது.

இந்த ஸமயத்தில் யஜ்ஞமூர்த்தி என்கிற மஹாவித்வானன மாயாவாதி, கங்காஸ்நானத்துக்குப் போய் வடக்கேயிருக்கிற பெரும் வித்வான்களை ஜயித்து ஸந்யாஸம் பெற்று விளங்குகையில் ஸ்ரீரங்கத்தில் ராமாநுஜர் என்கிற ஆசார்யஸார்வபௌமர் மஹத்தான சிஷ்ய ஸம்பத்துடன் ப்ரகாசிப்பதை அறிந்து அவரிடம் தர்க்கிக்கவேண்டுமென்று தானெழுதிய ஓலைச்சுவடிகளை வண்டியிலேற்றிக் கொண்டு தன் வித்யாகர்வமெல்லாம் தோற்ற ஸ்ரீரங்கம் வந்து உடையவரை வாதப்போருக்கு அழைத்தான். உடையவரும் ஸம்மதிக்க— 'பதினெட்டு நாள் வாதப்போர் நிகழ்த்துவது; யஜ்ஞமூர்த்தி தோற்றால் உடையவருடைய சிஷ்யனாகி ஸ்ரீவைஷ்ணவனாக ஆகிவிடுவது; உடையவர் தோற்றால் க்ரந்தஸந்யாஸம் பண்ணுவது' என்ற நிபந்தனைகளை ஏற்படுத்திக் கொண்டு வாதப்போர் துவங்கிற்று. இருவரும் ஒருவருக்கொருவர் தோலாமல் மத்தகஜங்கள் மோதுமாப்போலே தர்க்கிக்க, பதினேழாம் நாள் யஜ்ஞமூர்த்தி சொன்ன சில யுக்திகளுக்குச் சரியான பதில் சொல்ல இயலாமல் உடையவர் தளர்ந்து சோர்வுடன் மடமே திரும்பினர். அன்றைய இரவு தம் திருவாராதனமான தேவப் பெருமாளைத் திருவடி விளக்கி அமுது செய்தருளப் பண்ணி, அவருடன் வெறுத்து, 'பெருமானே! ஆழ்வாரளவாக ஆளவந்தாரளவும் ஸுப்ரதிஷ்டமாய் வந்த இந்தத்தர்சனத்தை அடியேனைக் கொண்டு நசிப்பிக்கத் திருவுள்ளமோ!'' என்று முசித்து ப்ரஸாதப்படாமல் கண்வளர்ந்தருள, பேரருளாளனும் இரவு இவர் கனவில் தோன்றி, "இளையாழ்வீர்! முசிக்கவேண்டா, மஹாவித்வானான சிஷ்யனை உமக்குத் துணையாக்கித் தந்தோம் காணும் உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் ஸ்ரீஸூக்திகளைச் சொல்லி வெற்றிகொள்ளும்'' என்று அருளிச் செய்து. உடையவருக்கு தைரியம் சொல்லி மறைந்தான். உடையவரும் அதிகாலையில் அநுஷ்டானங்களை முடித்து மகிழ்ச்சியுடன் பெருமாள் திருவாராதனத்தையும் பண்ணி, ப்ரஸன்ன கம்பீரராய்

ஸபைக் கெழுந்தருள, யஜ்ஞமூர்த்தியும் திருவுள்ளக் கருத்தறிவதில் நிபுணனாகையாலே இவர் முன்னாள் சென்றபோதிருந்த சோர்வை நினைத்து இப்போது உள்ள தேஜஸ்ஸையும் பார்த்து, திருவடிகளில் பணிந்து தமக்கிரங்கும்படி வேண்டினன். ஸ்வாமியும் வாதத்தைத் தொடரலாமே என்ன, "தேவரீருக்குப் பெருமாள் ப்ரத்யக்ஷமாகியுள்ளார். தேவரீர் வேறு, பெருமாள் வேறில்லை நான் தோற்றேன் தேவரீர் திருவடிகளை அடியேன் சிரஸாவஹிக்கும்படி அநுக்ரஹிக்க வேண்டும்" என்று சொல்ல உடையவரும் மாயாவாதத்திலுள்ள குறைகளையெடுத்து உபன்யஸிக்க, அவனும் இசைந்தான். பிறகு யஜ்ஞமூர்திக்கு சிகாயஜ்ஞோபவீதமின்றிக்கே இருந்தமைக்கு ப்ராயச்சித்தம் பண்ணுவித்து, சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரிப்பித்து, திருவிலச்சினை முதலாக பஞ்சஸம்ஸ்காரங்களையும் பண்ணுவித்து த்ரிதண்டகாஷாயாதிகளை ப்ரஸாதித்து, பேரருளாளன் தமக்கு இவரைத்தந்த உபகாரத்துக்கு ஸ்மாரகமாக அருளாளப் பெருமாளெம்பெருமானார் என்று பெருமாள் பெயரையும தம்மதையும் சேர்த்து திருநாமம் சாத்தியருளினார். பின்னர் அவருக்கு நம்பெருமாளை ஸேவை பண்ணுவித்து மடமே அழைத்துப் போய்த் தம் திருவாராதனமான பேரருளாளனை ஸேவிக்கப்பண்ணி, "இவர் காணும் உம்மை நம்பக்கல் சேர்த்தருளினவர்" என்று போர உகந்தருளினார். அருளாளப் பெருமாளும் உடையவருக்கு அந்தரங்கராய் கைங்கர்யங்கள் பண்ணிக் கொண்டு வாழ்ந்திருக்கையில் உடையவரும் அநந்தாழ்வான் முதலானோர்களை அவர் திருவடிகளில் ஆச்ரயிப்பித்தருளினார்.

பின்னர் அவ்யபதேச்யனான க்ருமிகண்டன் பண்ணின ஹிம்ஸையால் உடையவர் பல ஆண்டுகள் மேல் நாட்டில் ஸஞ்சரிக்கும்படியும், இவருக்காக ராஜஸபைக்கு எழுந்தருளின ஆழ்வான் தன் கண்களை இழக்கும்படியும், ஆழ்வான் கூட எழுந்தருளின பெரியநம்பி தம்முயிரையே இழக்கும் படியாகவும் ஆயிற்று. பல பல ஆண்டுகள் சென்ற பின் க்ருமிகண்டன் மாண்டபின்னர் உடையவர் திருவரங்கம் சேர்ந்து ஆழ்வானைக்கண்டு மனம் மிக நொந்து கதறியழுது, தேவப்பெருமாளைத் துதித்து கண்களைப் பெறுமாறு தூண்டினார். ஆழ்வானும் வரதராஜ ஸ்தவத்தை இயற்றி உடையவரிடம் விண்ணப்பம் பண்ணினார். இது கேட்டால் பேரருளாளன் நிச்சயம் அநுக்ரஹிப்பான் என்று ஆழ்வானையும் அழைத்துக் கொண்டு அத்திகிரி அருளாளன் திருமுன்பே சென்று ஆழ்வானைக் கொண்டு விண்ணப்பித்தார். அது முடியும் தருவாயில் உடையவர் பராக்காயிருக்க, ஸ்தவம் கேட்டு மிகவுகந்த பெருமாள் ஆழ்வானுடைய அபேக்ஷிதம் கேட்க "நான் பெற்ற பேறு நாலூரானும் பெறக்கடவன்" என்று வேண்ட அப்படியே பெருமாள் வரமீந்தனன். (நாலூரான் க்ருமிகண்டனின் மந்திரி; ஆழ்வான் கண்ணிழப்பதற்கு முக்ய காரணமாயிருந்தவன்). உடையவரும் இதறிந்து, பெருமாளை, "அடியேன் நினைவைத் தலைக்கட்டிற்றில்லையே" என்று வெறுத்து ஆழ்வானை, "நீ ஸ்வதந்த்ரனாய் என் நினைவைத்தலைக் கட்டாதே இப்படி செய்தாயே" என்று வெறுக்க, பெருமாளும், "நம்மையும் உம்மையும் கட்கண்ணாலே காணக்கடவர்" என்று வரமீந்தனன்.

இவ்வளவாக இராமாநுசனை மொய்ம்பால் வளர்த்து நம்தர்சனம் தழைத்தோங்க வென்று திருவரங்கநாதனிடம் அனுப்பித்தந்து இந்த எம்பெருமானார் தர்சனத்தை வளர்த்ததில் பேரருளாளன் பங்கு பெரும்பங்கு ஆகும் என்று சுருக்கமாகக்காட்டினோம். உடையவருக்கும் பேரருளாளனுக்குமுள்ள மிக நெருங்கிய தொடர்பையும் காட்டினோம். இதன் விரிவையும் உடையவருக்குப் பின் விளங்கிய ஆசார்யர்கள் காலத்தில் பேரருளாளன் இத்தர்சனம் வளர வென்று செய்த மஹோபகாரங்களையும் "தேவப்பெருமாளும் ஸ்ரீ ராமநுஜதர்சனமும்" என்ற நம் நூலில் கண்டு கொள்வது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.